# கொலை மறுத்தல்
# வைராக்கிய சதகம்
# வைராக்கிய தீபம்
# அவிரோத உந்தியார்







ஆசிரியர்
தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்
உரையாசிரியர்
திருப்போரூர் தவத்திரு. சிதம்பர சுவாமிகள்




# சாந்தலிங்கரின் அருள் நூல்கள் தொகுப்பு

(கொலை மறுத்தல், வைராக்கிய சதகம்,
வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார்)


ஆசிரியர்
தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்

உரையாசிரியர்
திருப்போரூர் சிதம்பர சுவாமிகள்





வெளியீடு
சத்வித்யா சன்மார்க்க சங்க அறக்கட்டளை
பேரூராதீனம், பேரூர், கோவை – 10

ஆசிரியர் : தவத்திரு சாந்தலிங்க அடிகளார்

உரையாசிரியர் : திருப்போரூர் தவத்திரு சிதம்பர சுவாமிகள்

**விலை : ரூ. 500**

மொழி : தமிழ்

தாள் : 70 ஜி.எஸ்.எம். மேப்லித்தோ

நூல் அளவு : டெம்மி 1 x 8

எழுத்து : 10.5 பாயிண்ட்

கட்டமைப்பு : பெர்பக்ட் பைண்டிங்

பதிப்பாசிரியர் : தவத்திரு. மருதாசல அடிகளார்

வெளியீடு : சாந்தலிங்க அடிகளார் சத்வித்யா சன்மார்க்க சங்க
அறக்கட்டளை, பேரூராதீனம்,
பேரூர், கோவை - 641 010
தொலைபேசி : 0422-2607995

தவத்திரு

# சாந்தலிங்க அடிகளார்

வரலாறு

நமது தமிழ்நாட்டில் தலைசிறந்து விளங்கிய அருளாளர் பலர். அவருள் தவத்திரு சாந்தலிங்க சுவாமிகளும் ஒருவர். இவர் தொண்டை நாட்டில் தோன்றியவர் எனப் பெரியோர் கருதுகின்றனர். காலம் 17ஆம் நூற்றாண்டு என்பர். வீரசைவ நெறியை மேற்கொண்டொடு ஒழுகியவர்.

இவர் திருக்கயிலாய பரம்பரை, திருவாவடுதுறை ஆதீனத்தவரான துறையூர்ச் சிவப்பிரகாச தேசிகரிடம் உபதேசம் பெற்றவர்.

துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகள் நம் சாந்தலிங்க சுவாமிகளுக்குக் குரு என்பதை இவர் தம் நூலுள், தாளையே தரம் அறிகிலாது எமக்கு எளிதரு சிவப்பிரகாசர்க்கு ஆளியாம் எனத்திரிந்து அவர் பணிபுரிந்து அரிய வீட்டைகிலாய் (சதகம் 2) சிவப்பிரகாசவென் கண்மணிதனையுன்னாது (சதகம் 41), தில்லைப்பதிமேய சிவப்பிரகாசனேயோ (சதகம் தோத்திரம் 22) என் உளம்புக்க சிவப்பிரகாசன் என்கோ (சதகம் தோத்திரம் 49) சிவப்பிரகாச நாமம் கொண்டோங் குருவோடிவணுற்றெனையாண்ட கோவே (சதகம் தோத்திரம் 35) எனப் பல இடங்களில் கூறியுள்ளவற்றால் அறியலாம். தமது பரம்பரை திருக்கயிலாயப் பரம்பரை என்பதை

செப்பிரும் கைலைக் குருமுறை மையிற்றன்
சிரமிசைச் சரணம்வைத் துளவோர்

என்ற வைராக்கியதீப அடிகளால் அறியலாம்.

அக்காலத்தில் தமிழகத்தில் வீரசைவ நெறியைப் பேணி வளர்த்து வந்த ஆதீனங்களுள் பொம்மபுர ஆதீனம் சிறந்து விளங்கியது. அதில் சிவஞான பாலய சுவாமிகள் என்பார் எழுந்தருளி மக்களுக்கு அருள்வழங்கி வருவாராயினர். அவரைக் கண்டு அருள்பெறும்பொருட்டுச் சாந்தலிங்க சுவாமிகள் பொம்மபுரம் சென்றனர். செல்லும்வழியில் இவருக்குக் கற்பனைக் களஞ்சியமாகிய, துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளின் தொடர்பும் கிடைத்தது. இருவரும் பொம்மபுரம் சென்று சிவஞான பாலய சுவாமிகளைக் கண்டு வணங்கி அருள் பெற்று மகிழ்ந்தனர்.

சிவஞான பாலய சுவாமிகளின் திருவருட் குறிப்பின்படி சிவப்பிரகாச சுவாமிகளின் தங்கை ஞானாம்பிகையம்மையைச் சாந்தலிங்க சுவாமிகள் திருமணம் செய்து கொண்டார்.

பின்னர் சாந்தலிங்க சுவாமிகள் பல தலங்களையும் வழிபட்டுக் கொங்குநாட்டையடைந்தார். கொங்கு நாட்டில் அவிநாசி முதலிய தலங்களை வழிபட்டு இறைவனுடைய திருவருட்குறிப்பின்படித் திருப்பேரூர் என்னும் தலத்தில் திருமடம் அமைத்துத் தங்கியிருந்தனர். சதகம் (47) தோத்திரப் பகுதியில் நள்ளாறுடையாய் அவிநாசி நயந்துளானே என்று கூறுகிறார்.இவர் அவிநாசியில் தங்கியிருந்ததாகவே வரலாறும் சிலர் எழுதியுள்ளனர். இறைவன் திருவருட்குறிப்பின்படியே திருப்பேரூரில் இவர் தங்கினார் என்பதை, அருளின் பிறவா நெறி கூட்டுவித்தாய், பிறவா நெறியாகிய தோர் திருப்பேரையா என்னும் சதகச் செய்யுட்களால் அறியலாம். பிறவாநெறி என்பது திருப்பேரூரின் பெயர்களுள் ஒன்று.

திருப்பேரூரில் இவர் தங்கியிருந்த காலத்தில் கன்னட நாட்டு மன்னர் ஒருவர் பக்குவமுடையராய்ச் சற்குருவைத் தேடிப் பல தலங்கட்கும் வந்தவர் திருப்பேரூரில் சாந்தலிங்க சுவாமிகளைக் கண்டு உபதேசம் பெற எண்ணினார். சுவாமிகளும் அவருடைய பக்குவநிலையைச் சோதித்தறிந்து உபதேசம் அருளி மாணாக்கராக்கிக் கொண்டனர். இவர்தாம் குமாரதேவர்.

பின் இக்குமாரதேவர் சாந்தலிங்கசுவாமிகளின் திருவுள்ளக் குறிப்பின்படிப் பல தலங்கட்கும் சென்றார். பெரிய நாயகியம்மையின் திருவருளால் திருமுதுகுன்றத்தில் (விருத்தாசலம்) தங்கிப் பல அன்பர்களுக்கு அருளுபதேசம் செய்து மகாராச துறவு முதலிய சாத்திரங்களையும் அருளித் திருவருளில் கலந்தார். குமாரதேவர் மடம் துறையூர் ஆதீனத்தின் ஆளுகையில் விருத்தாச்சலத்தில் சிறப்புடன் திகழ்கிறது.

சாந்தலிங்க சுவாமிகள் மக்கள் உய்யும் பொருட்டுக் கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்னும் நூல்களை அருளிச் செய்தார். இவை முறையே சீவகாருணியத்தையும், ஈசுவர பத்தியையும், பாச வைராக்கியத்தையும், பிரம்ம ஞானத்தையும் உணர்த்துவன. இந்நான்கு நூல்களையும் முத்திப்பெருவீட்டிற்கு நான்கு வாயில்களாக ஆன்றோர் கூறுவர்.

திருமுதுகுன்றத்தில் தங்கியிருந்த குமாரதேவருடைய திருவருளுக்கு ஆளானார் சிதம்பர தேசிகர் என்பார். அவரைக் குமாரதேவர் தம் குருவாகிய சாந்தலிங்க சுவாமிகளிடம் அழைத்து வந்தார். சிதம்பர சுவாமிகளுடைய மதி நுட்பத்தை உணர்ந்த சாந்தலிங்க சுவாமிகள் தாமியற்றிய நூல்களுக்கு உரை செய்யும்படிப் பணித்தார். சுவாமிகளின் குறிப்பின்படியே சிதம்பர சுவாமிகள் இந்நான்கு நூல்களுக்கும் உரையியற்றியருளினார். சாந்தலிங்க சுவாமிகளின் திருவுள்ளக் குறிப்பின்படிக் குமாரதேவர் சிதம்பர சுவாமிகளைத் தம் மாணாக்கராகக் கொண்டு உபதேசம் அருளினார்.

இச்சிதம்பர சுவாமிகள் மதுரை அங்கயற்கண்ணம்மையின் திருவருட் குறிப்பின்படித் திருப்போரூர் என்னும் தலத்தினையடைந்து அங்கு மறைந்து கிடந்த முருகப்பெருமான் கோவிலைப் புதுப்பித்து வழிபாடு செய்து அங்கேயே தங்கியிருந்தனர். திருப்போரூர் முருகன் மேலும் தம் ஆசிரியர் மேலும் பல பிரபந்தங்களை இயற்றினார். அவை திருப்போரூர் சந்நிதிமுறை என்று வழங்கப்படுகின்றன. கண்ணுடைய வள்ளலார் அருளிய ஒழிவில் ஒடுக்கம் என்னும் நூலுக்கும் உரை செய்தார். இவருடைய திருமடம் இன்றும் திருப்போரூரில் சிறப்புடன் விளங்குகின்றது.

சாந்தலிங்க சுவாமிகளின் தொடர்பால் சிதம்பரம் மௌன சுவாமிகள் வீரசைவநெறியை மேற்கொண்டனர்.

மாணாக்கர் பலர் நம் சுவாமிகள் துறவுநெறியை வற்புறுத்தும் நூல்களை அருளியும் - அவற்றை நமக்குப் போதித்தும் தாம் மட்டும் இல்லறநெறியில் இருக்கின்றாரே என்று மனத்தில் எண்ணினர். அதையுணர்ந்த சுவாமிகள் ஒரு நாள் தம் துணைவியாராகிய ஞானாம்பிகையம்மையையும் உடனிருத்தி மாணாக்கர்க்குப் பாடஞ் சொன்னார். அப்போது சுவாமிகளும் அம்மையாரும் மாணாக்கர்க்கு இறைவனும் இறைவியுமாகவே காட்சியளித்தனர். அக்காட்சியைக் கண்ட மாணாக்கர் தாம் நினைத்த பிழைக்கு மிகவும் நாணி வருந்தித் தம் பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினர்.

ஒரு நாள் சுவாமிகள் இல்லறத்தினின்றும் நீங்கித் துறவு கொள்ள எண்ணினார். இதற்கு இறைவன் திருவுள்ளக்

குறிப்பையும் அறிய விரும்பினார். அன்று பிச்சைக்குச் செல்லுகின்ற காலத்துப் பாலன்னம் கிடைத்தால் துறவு மேற்கொள்வோம் என எண்ணி இறைவனைச் சிந்தித்துப் பிச்சைக்குச் சென்றனர். திருவருளும் அவ்வாறே இருந்தது. அன்றிலிருந்து முழுத்துறவினை மேற்கொண்டார்.

சுவாமிகள் தில்லை நடராசப்பெருமானிடத்தில் உளம் ஒன்றியிருந்தனர். இறைவன் உமையம்மையுடன் இடப வாகனத்திவர்ந்து இவருக்குக் காட்சியளித்தான். சுவாமிகள் தாம் கண்ட காட்சியைத் தம் நூலுள் பல இடங்களிற் கூறியுள்ளார். அவை,

பிரானே திருத்தில்லையுளாய் அன்றிப் பேதையேன்முன்
ஓரானேறிவர்ந் தம்பிகையோடெளி தோடி வந்தாய்
வாரானோவினம் எம்மிறை என்றுனை நாடிவாடி
இரா நாயடியேற் கெதிர் தோன்றிலை இன்றிதென்னே (சதகம்)

ஆனேறிவர்ந் தென்னெதிரே விரைந்து அன்று வந்தோய்க்கு
ஏனோ வெறுப்பு இப்பொழுது ஓர் சற்றிரங்கு கில்லாய் (சதகம்)

என்பன. இங்ஙனம் பலவகையில் சிறப்புற்று விளங்கிய சுவாமிகள் ஒரு மாசித் திங்கள் மக நாளில் சிவலிங்க ஐக்கியம் கூடினர். இவர்களுடைய வரலாறும், குமாரதேவர், சிதம்பர சுவாமிகள் வரலாறுகளும் தண்டபாணி சுவாமிகள் பாடிய புலவர் புராணத்தில் உள்ளன. சிரவணபுரம் கௌமார மடாலயம் அருண்மிகு கந்தசாமி சுவாமிகள் சாந்தலிங்க சுவாமிகளுக்குப் பிள்ளைத்தமிழ் நூல் பாடியுள்ளார்.

சுவாமிகளுடைய சமாதித் திருக்கோயிலும், திருமடமும் திருப்பேரூரில் பட்டிப்பெருமான் திருக்கோயிலுக்குக் கிழக்கே நொய்யலாற்றங் கரையில் அமைந்துள்ளன.

# பதிப்புரை

கொங்கு நாட்டுச் சிவத்தலங்களில் சிறந்து விளங்குவது திருப்பேரூர். அப்பர், சுந்தரர், சேக்கிழார் முதலிய திருமுறை ஆசிரியர்களால் போற்றிப்பாடப் பெற்ற மேன்மையுடையது திருப்பேரூர். அருணகிரிநாதர் திருப்புகழும் இப்பதிக்கு உண்டு. பிற்கால அருளாளர்கள் பலர் பேரூரைப் போற்றும் முறையில் தலபுராணங்களையும் பிள்ளைத் தமிழ், கலம்பகம், உலா முதலிய இலக்கியங்களையும் படைத்துள்ளனர். மூர்த்தி, தலம், தீர்த்தம் எனும் மூன்றுபெருமைகளையும் கொண்ட பேரூரின் கீழ்த் திசையில், சீலத்தவர் போற்றும் திருமடம் அமைத்துத் தவவாழ்வும் தமிழ்ப்பணியும் மேற்கொண்டு பொலிந்தவர் தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் ஆவார்.

தவத்திரு சாந்தலிங்கர், 'பிறவாநெறியாகிய திருப்பேரையா', 'தொல்லை பிறவாநெறி மேவிய தோன்றல்', 'பிறவாநெறி கூட்டுவித்தாய்' என்றெல்லாம் திருப்பேரூரையும், தம்மை ஆட்கொண்ட சிவபரம் பொருளையும் போற்றியுள்ளார். அவர்கள் உலகம் உய்ய அருளிய நூல்கள் நான்கு. அவை கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்பன. இந்நூல்களின் சிறப்பைத் தவத்திரு. தண்டபாணி அடிகள்,

> கூச ல்அறக்கருணை கூட்டும் கொலைமறுப்பும்
> ஈசனது பத்திக்கு இனிதாம் சதகமும்பொய்ப்
> பாச முழுதும் பறித்தெரியுந் தீபமுநெஞ்
> சூசனிக ராட்டொழிக்கு முத்தியுமா நூற்பெயரே

என்றும், சிரவையாதீனம் தவத்திரு. கந்தசாமி அடிகள் தம்முடைய சாந்தலிங்கர் பிள்ளைத்தமிழில் இந்நூல்களின் சிறப்பைப் பாடியுள்ளார். இந்நான்கு நூல்களுக்கும் திருப்போரூர் தவத்திரு. சிதம்பர அடிகளார் அவர்கள் மிகச்சிறந்த உரை வகுத்துள்ளார்கள்.

இந்நான்கு நூல்களில் 1816 ஆம் ஆண்டு கொண்ணூர் திரு. மாணிக்க முதலியார் அவர்கள் வைராக்கிய தீபத்தைப் பதிப்பித்து

உள்ளார்கள். 1822 ஆம் ஆண்டு மீண்டும் இந்நூல் பரசுராம முதலியார் என்பரால் பதிப்பிக்கப்பட்டது.

1840 ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்து நல்லூர் சதாசிவப் பிள்ளை அவர்கள் கொலை மறுத்தலைப் பதிப்பித்துள்ளார். சாந்தலிங்கரின் நான்கு நூல்களையும் ஒன்றாக 1850 ஆம் ஆண்டு ஆறுமுக நாவலர் முதன்முதலில் பதிப்பித்தார். மீண்டும் இப்பதிப்பு 1867 இல் கொலைமறுத்தல் தனியாக, கந்தசாமி முதலியாரால் பதிப்பிக்கப்பட்டது. 1896 இல் வைராக்கிய சதகம் தனியாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

1905 இல் வைராக்கிய தீபம் மதுரை குப்புசாமிநாயுடு அவர்களால் மீண்டும் வெளியிடப்பட்டது. 1906, 1923 இல் நான்கு நூல்கள் சேர்ந்த பதிப்புக்கள் வெளியிடப் பெற்றன.

தவத்திரு. சாந்தலிங்கர் திருமடத்தால் 1927 இல் நான்கு நூல்களும் பதிப்பிக்கப் பெற்றன. 1959 ஆம் ஆண்டு கோவை வேளாளர் அச்சக உதவியோடு கொலைமறுத்துல் வெளிவந்தது. 1960 ஆம் ஆண்டு வைராக்கிய சதகத் தோத்திரப் பகுதியும் 1964 ஆம் ஆண்டு வைராக்கிய தீபமும் வெளியிடப் பெற்றன. இது சாந்தலிங்கர் குருவழிபாட்டு மலராக வந்தது. 1965 இல் இந்நூல் வெளிவந்தது. 1965 இல் கொலை மறுத்தல் இத்திருமடத்தால் வெளியிடப் பெற்றது. 1966 இல் அவிரோத உந்தியாரும் நான்கு நூல்கள் சேர்ந்த பதிப்பும் திருமடத்தின் வழி வெளிவந்தன. 1967 இல் கொலை மறுத்தலும் 1981 ஆம் ஆண்டு வைராக்கிய சதகமும் தனியாக வெளிவந்தன. 1975 இல் அவிரோத உந்தியார் ஆங்கில மொழி பெயர்ப்பு நூல் வெளியிடப்பட்டது. 1982 இல் வைராக்கிய தீபம், 1988 இல் வைராக்கிய சதகம், 1988 ஆம் ஆண்டு கொலை மறுத்தல், 1991 இல் வைராக்கிய தீபம், 1994 ஆம் ஆண்டு கொலைமறுத்தல், 1994 இல் வைராக்கிய சதகம், 2000 ஆம் ஆண்டு அவிரோத உந்தியார் ஆகியன திருமடத்தால் வெளியிடப் பெற்றன.

சாந்தலிங்கர் நூல்கள் சமுதாயத்துக்குப் பெரும் பயன் விளைக்கும் உயர்வுடையன. அதன் காரணமாகவே அவை மேற்கூறியவாறு பல பதிப்புக்களைக் கண்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இந்நூல்களின் தேவை கருதி இவற்றை மிகவும் அடக்க விலையில் தவத்திரு சாந்தலிங்கர் திருமடம் வெளியிட்டு

வருகின்றது. நூல்கள் விலை குறிப்பிடப்பட்டிருந்தாலும் சீர்வளர்சீர் பேரூரடிகளாரால் பெரும்பாலும் அருட் கொடையாகவே வழங்கப் பெறுகின்றன. முற்பதிப்புகளில் காலச்சூழலால் சிற்சில பிழைகள் நேர்ந்திருந்தன. அவற்றை எல்லாம் களைந்தும், பாடல்கள், மேற்கோள் பாடல்களுக்குச் சுருக்கமான உரை வரைந்தும் வெளியிட வேண்டுமென சீர்வளர்சீர் பேரூரடிகளார் அவர்கள் திருவுளம் பற்றினார்கள். அம்முறையில் இவ்வாண்டு மாசித் திங்கள் குருவழிபாட்டு நாளையொட்டித் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவும் நடைபெற்றது. இப் புனிதமான காலத்தில் (8,9-03-2009) சீர்வளர்சீர் பேரூரடிகளார் திருவுளம் பற்றிய வண்ணம் சாந்தலிங்கரது நான்கு நூல்களும் வெளியிடப் பெறுகின்றன. இந்நான்கு நூல்களின் மேற்கோள் பாடல்களுக்கு சுருக்கமான உரை எழுதிய தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்கள் முனைவர் ஓ. பாலகிருட்டிணன் (கொலை மறுத்தல்), முனைவர் (திருமதி) வெ. இராசேசுவரி (வைராக்கிய சதகம்), முனைவர் வே. செல்லாத்தாள் (வைராக்கிய தீபம்), கா. திருநாவுக்கரசு (அவிரோத உந்தியார்) ஆகியோரது பணி பாராட்டுக்குரியது. இவற்றை ஒருங்கிணைத்த கல்லூரி முதல்வர் முனைவர் (திருமதி) ம. மனோன்மணி அவர்களது பணியும் சிறப்பானது. அச்சகப் பணிகளை ஒருங்கிணைத்து தொகுப்பு நூலினை செம்மையான முறையில் உருவாக்கிய பேரூர் சௌமி அச்சகத்தாரின் பணி பாராட்டுதற்குரியது.

***தவத்திரு முனைவர் மருதாசல அடிகள்,***<br>
இளையபட்டம்,<br>
பேரூராதீனம், பேரூர்,<br>
கோவை - *10*



கறைதோய் பாவ மறச்சீவ கருணை
பெருக்குங் கொலை மறுத்தலும்
காளகண்டன் தாளகண்டக்
கண்கூட்டிடலா மெய்ப்பத்தித்
துறைதோய்வைராக்கிய சதகஞ்
சொற்றுத் துதிப்பார் மனமுருகுந்
துதிப்பா வினங்களுளப்பாசந்
துமிக்கும் வைராக்கிய தீபம்
நிறைதோய் பரமானந்தவருள்
நிலையங்காட்டிப் புலத்திலுந்து
நெஞ்சக்கவியைக் கட்டியின்ப
நிட்டை கூட்டும் உந்தியெனும்
முறைதோய் நூல்செய் நின்கனிவாய்
முத்தந்தருக! முத்தமே!
முதிர்சீர்ச்சாந்த லிங்கவருள்
முத்தா! முத்தந்தருகவே!

*- சிரவையாதீனம் கந்தசாமி சுவாமிகள்*

# கொலைமறுத்தல்

ஆசிரியர்
தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்

உரையாசிரியர்
திருப்போரூர் சிதம்பர சுவாமிகள்



வெளியீடு
சத்வித்யா சன்மார்க்க சங்க அறக்கட்டளை
பேரூராதீனம், பேரூர், கோவை – 10

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | தவத்திரு சாந்தலிங்க அடிகளார் |
| உரையாசிரியர் | : | திருப்போரூர் தவத்திரு சிதம்பர சுவாமிகள் |
| **விலை** | **:** | **ரூ. 100** |
| மொழி | : | தமிழ் |
| தாள் | : | 70 ஜி.எஸ்.எம். மேப்லித்தோ |
| நூல் அளவு | : | டெம்மி 1 x 8 |
| எழுத்து | : | 10.5 பாயிண்ட் |
| கட்டமைப்பு | : | பெர்பக்ட் பைண்டிங் |
| வெளியீடு | : | சாந்தலிங்க அடிகளார் சத்வித்யா சன்மார்க்க சங்க அறக்கட்டளை, பேரூராதீனம், பேரூர், கோவை - 641 010 தொலைபேசி : 0422-2607995 |
| அச்சிட்டோர் | : | சௌமி பிரிண்டர்ஸ், 69டி, சிறுவாணி பிரதான சாலை பேரூர், கோவை - 10 அலைபேசி : 98422 52779 |

## அணிந்துரை

தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொல் போற்றுமின்
ஊனுண் துறமி ன்உயிர்க்கொலை நீங்குமின்

- இளங்கோவடிகள்

தெய்வந்தெளிந்தோர் எவ்வுயிரும் ஈசன் உறைகோவில் எனத் தெளிந்து எவ்வுயிரிடத்தும் அன்பாயிருப்பர். ஞானசாதகம் புரிவோருக்கு உயிரிரக்கம்தான் முதற்படி.

உயிர்களின் சீவத்துவத்தைப் போக்கிச் சிவத்தை நல்குவது இறைவனின் குறிப்பு. அதற்காக , இறைவன் ஆன்மாக்களின் வினைப்பக்குவத்திற்கேற்ப உடலையும் வினைப்போகத்தையும் தந்து அவற்றின் வினையைக் கழிப்பித்து ஈடேற்றுகின்றான். எனவே ஒன்றன் உயிரை அதனுடைய உடலினின்றும் பிரித்தல் இறைவனின் இச்சை செயல்களில் குறுக்கிட்டு தடைசெய்வதாகும். அதனால், ஆன்றோர் கொல்லாமையாகிய அறத்தினைக் கைக்கொண்டு ஒழுகுவதால் பிற அறவினைகளால் வரும் புண்ணியங்கள் அனைத்தும் கிடைக்கப்பெறும் என்றும், கொல்லுவதால் பிற தீயவினைகள் அனைத்தையும் செய்தலால் விளையும் பாவம் அனைத்தும் தோன்றும் என்று உரைத்தனர்.

எண்ணில் தவத்து முழுஞான வீரனாம் சாந்தலிங்கப் பெருமான் உயிர்கள் உய்யவேண்டி தம் கருணையினால் நான்கு நூல்கள் அருளிச் செய்துள்ளார். கொலைமறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்னும் அந்நான்கு நூல்களும் சாதகனுக்குப் படிமுறைகளாக அமைந்தன. அந்த நான்கு நூல்களும் முறையே உயிரிரக்கம், ஈசுரபத்தி, பாசநீக்கம், பரமஞானம் என்பனவற்றை உணர்த்துவன.

இருபத்தி இரண்டு செய்யுள்களால் அமைந்த கொலைமறுத்தல் என்னும் இந்நூல் கொலை, புலை பற்றிய பிறமதக் கோட்பாடுகளைக் கூறி அவர்களுடைய வினாக்களுக்கு மறுத்தற்கு இயலாத விடைகளைக்கூறி இவ்வுயர்ந்த ஒழுகலாறு குறித்துச் சைவசித்தாந்தத்தின் கோட்பாட்டை விளக்குகின்றது. இந்நூலுக்கு அதிகாரிகள் கொலைப்பாவத்துக்கு அஞ்சுபவர்கள்,

நரகத்தில் வீழ்வதற்கு நடுங்குபவர்கள். இந்நூல் வேதாகமங்களின் வழி வந்தது.

அரிய இந்நூலுக்கு நூலாசிரியர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் மரபில் வந்த திருப்போரூர் சிதம்பரசுவாமிகள மிகச்சிறந்த உரை அருளியுள்ளார்கள். தம்முடைய கருத்துக்களை விளக்க இவர் பலநூல்களிலிருந்தும் மேற்கோள்கள் காட்டியுள்ளார்.

அவற்றுள் பல இக்காலத்து வழக்கில் இல்லாதன. அரிய இம்மேற்கோள் பாடல்களுக்கும் குறிப்புரையுடன் இந்நூல் இப்பொழுது வெளிவருகின்றது. தமிழ்கூறு நல்லுலகம் பயன் கொள்ளுவதாக,

கோ.ந.முத்துக்குமாரசுவாமி

## கருத்துரை

நமது சமயமாகிய அருந்தவச் சைவம், செய்வான், செய்வினை, அதன்பயன் சேர்ப்பான் என நான்கு உறுதிப் பொருள்களை எடுத்து இயம்பும். அஃதே போன்று நமது ஆதி குரு முதல்வர் பெருமான், சாந்தலிங்க அடிகள் கொலைமறுத்தல் வைராக்கிய சதகம் , வைராக்கிய தீபம் , அவிரோத உந்தியார் ஆகிய நான்கு நூல்களை அருளிச் செய்தார். இந்நூல்களில் கொலை மறுத்தல் குன்றில் இட்ட குன்றா விளக்கமென ஒளிவீசி நலம் செய்யும் ஒன்று. அனைத்து உயிர்கட்கும் இறங்கி அருள் செய்யும் ஞானநல் ஒளியில் நமது இதயமெலாம் பரம சாந்த நிலையில் திளைக்கிறது. சிறுநூலாக இருந்தாலும் இது ஒரு திருநூல். திருமலி பூமகள் என்று மங்கலமாகத் தொடங்கித் திருநாடன்றே என மங்கலச் சொல்லுடன் நிறைவடைகிறது,

நமது குரு மகா சந்நிதானம் பேரூரடிகளாரின் அருளாணையின் வண்ணம் இந்நூல் வெளிவருகிறது . அருட்பெருந்திரு. சிதம்பர சுவாமிகளின் பல்வேறு மேற்கோள் செய்யுள்களுடன் அமைந்த விரிவான விளக்க உரை, நூலினை ஆழங்கால்படக் கற்கின்ற நமக்கெல்லாம் ஒரு அருள்ஞானக் கலங்கரை விளக்கம். இந்நூல் சைவப்பேருலகும் சைவப்பேருணர்வும் போற்றுகின்ற நூலாக நம் மனங்களில் எல்லாம் மகிழ மலர் மணம் பரப்புகின்றது.

இன்றைய அன்றாட வாழ்வு பலருக்கு உயிர்களைக் கொன்றிடும் வாழ்வாக அமைந்திட்ட அவல நிலையின் கீழ்மையை என்னென்று சொல்வது? இத்தகு கொடிய சூழலில் நெடிய அருட்தன்மை விளக்க எழுந்த இனிக்குமொரு தெள்ளமுதாம், தனிப் பெருங்கருணைத் திருநூல். சைவ சித்தாந்தத்தின் உயர் தனிப் பெருமுடியில் நின்று கொலையும் புலையும் கரந்துறையும் ஏனைய சமயம் சார்ந்தார்கட்கெல்லாம் சாந்தலிங்கப் பெருமான் அருட் தேன் சிந்திடும் கருணை மழை பொழிகிறார்.

திருவள்ளுவர் முதலாக அவிச்சின்ன தாதையாக அவதரித்து அருள்மணம் வீசிடும் அடியவரிடை சிவச்சின்னம் தாங்கி வந்த நம் அடிகள் கொலை மறுத்தலை அருளிச் செய்தது உயிர்கள்

பெற்ற பெரும் பேறு. இருபத்து இரண்டு திருப்பாடல்களையும் பன்முறை படித்துச்சிந்திக்கும் போது நம் மனம் நன்முறையில் உயிர்கள் மாட்டுக் காட்டும் கருணையினை வந்திக்கத் தொடங்கும். அருட்பாடல்கள் அனைத்தும் உயர் துணைச் செந்தமிழ் செய்யுள் நடையில் அமைந்துள்ளன. சைவமாம் சமயம் சார்ந்த பெருமக்களும் வையமாம் வாழ்வுடை வளர் மக்களும் தினந்தினம் ஓதவல்ல அருள் மணந்திடும் சிவ நூல் இந்நன்நூல். நமது செந்தமிழ்ப் பரசிவமாகிய பரம் பொருள் "மாசிக் கடலாட்டுக் காணும்" மாசி மகத் திருநாளில் இந்நூல் திருவருளும் குருவருளும் பெருக வெளிவருவது சாலப் பொருத்தம். புறத் தூய்மை நீரால் அமைந்தபடி அகத்தூய்மை இந்நூலால் அமையும். இந்நன்நூலை பொன்நூலாக, நம் யாவருடைய கரங்களிலும் தவழ விட்ட குரு மகா சந்நிதானங்களின் திருவருட் பெருங்கருணையை நீள நினைந்து வழிபட்டு நெஞ்ச நிறைவு அடைகின்றோம்.

கொல்லா நெறி குவலயமெல்லாம் ஓங்க
எல்லார்க்கும் சொல்வதென் இச்சை பராபரமே

என்ற அரும் பெரும் பிரார்த்தனையுடன் நூலின் செய்யுள்களைப் படிக்கத் தொடங்குவோம். பாலின் வெண்மையாய்ப் பரம காருண்யத்தில் திளைப்போம்.

என்றும் பணிவன்புடன்
**வி.மு.உமாபதி**

தமிழ்த்துறைத் தலைவர்(ஓய்வு)
கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி
கோவை - 29

இன்ப மாய தறாதிடை யோங்கவுந்
துன்ப மாயது தூரத்து ணீங்கவு
முன்ப ராபரன் மொய்குழ லோடணைந்(து)
அன்பி னீன்றவோ ரானையைப் போற்றுவாம் (1)

*இன்பம்ஆயது அறாதுஇடை ஓங்கவும்*
*துன்பம்ஆயது தூரத்துள் நீங்கவும்*
*முன்பராபரன் மொய்குழலோடு அணைந்து*
*அன்பின் ஈன்ற ஓர்ஆனையைப் போற்றுவாம்*

**இன்பமாயது இடையறாது ஓங்கவும்-** என்பது மனோரதமான (மனம் விரும்பியது) நன்மைகள் மேன்மேலும் உண்டாகவும், **துன்பமாயது தூரத்துள் நீங்கவும் -** தாபத்திரயங்களினாலே (தன்னைப்பற்றி வருவன, பிற உயிர்களைப்பற்றி வருவன, தெய்வத்தைப்பற்றி வருவன) வரும் இடையூறுகள் தூரத்தின் கண்ணே நீங்கவும், **முன் பராபரன் மொய்குழலோடு அணைந்து அன்பின் ஈன்ற ஓரானையைப் போற்றுவாம் -** ஆதிகாலத்திலே பரமசிவன் பராசக்தியோடு கூடி அன்புடனே பெற்றருளிய ஒப்பில்லாத விக்கினேசுரனாகிய யானையைத் துதிப்பாம் என்றவாறு.

துன்பம் தூரத்துள் நீங்க என்றதனால், தம்முடைய மனம், வாக்கு, காயத்தில் தோன்றாமல் நீங்க என்றார் எனக் கொள்க. இன்பமாயது ஓங்கவும் துன்பமாயது நீங்கவும் என்றதனால் ஆனந்தப்பேறும் (இன்பவளம்), அஞ்ஞானத்திழப்பும் (மயக்க நீக்கம்) என்றுமாம்.

இதன் கருத்து, இந்நூல் செய்து முடியும் அளவும் விக்கின நிவிர்த்தி உண்டாகவும் (இடையூறு நீங்குதல்), அதன் மேலும் உலகத்தின் கண்ணே குற்றம் தீர்ந்து விளங்கவும் வேண்டி விக்கின கர்த்தாவை (இடையூறுகளை உண்டாக்கவும் நீக்கவும் வல்ல விநாயகன்) வழிபட்டது.

திருமலிபூ மகனாதி யைவரும்
　ஒருபரமிச் சிறிய னேற்குந்
தருமிருதா டலைமிசைக்கொண் டஞ்சினர்தீக்(கு)
　அறங்கொலைமை தள்ளிச் சார்தற்(கு)
அருமறையாகம நெறிச்சொற் பொருளமைத்திக்
　கொலைமறுத்த லறஞ்சொன் மாண்பான்
இருமுணர்வி லேனுரையும் நலந்தருமென்
　றுளந்துணிந்தீண் டியம்பா நின்றேன். (2)

*திருமலி பூமகன்ஆதி ஐவருமாம்*
　*ஒருபரம் இச்சிறிய னேற்கும்*
*தரும்இருதாள் தலைமிசைக்கொண்டு அஞ்சினர்தீக்(கு)*
　*அறங்கொலைமை தள்ளிச் சார்தற்(கு)*
*அருமறைஆகம நெறிச்சொல் பொருள்அமைத்து இக்*
　*கொலைமறுத்தல் அறம்சொல் மாண்பால்*
*இரும்உணர்வு இலேன் உரையும் நலம்தரும்என்று*
　*உளம்துணிந்து ஈண்டு இயம்பா நின்றேன்*

**திருமலி பூமகனாதி ஐவருமாம் ஒருபரம் இச்சிறியனேற்கும் தரும் இருதாள் தலைமிசைக்கொண்டு** - அழகு நிறைந்த செந்தாமரை மலரிடத்தே தோன்றிய பிரமா முதலாய பஞ்ச கர்த்தாக்களும் (பிரமா, திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன்) தானேயாய் அவர்களையுங்கடந்த சர்வவியாபியாய் (எங்கும் நிறைந்தவர்), வாக்கு மனோ அதீதமாய் (மனத்திற்கும் வாக்குக்கும் எட்டாததாய்) இருக்கும் பரமசிவம் தன்னுடைய கருணையினாலே கரசரணாதி அவயவங்களையுடைய ஆசாரிய மூர்த்தியாய் இப்பூமியின் கண்ணே எழுந்தருளிவந்து ஒன்றுக்கும் பற்றாத சிறுமை உடையேனுக்கும் பிறவியாகிய கடலை நீந்தும்படி தெப்பமாகத் தந்தருளிய இரண்டு திருவடிகளையும் என் புன்தலைமேல் வைத்துக்கொண்டு அவைகளினது அருளினால், **தீக்கு அஞ்சினர் கொலைமை தள்ளி அறஞ்சார்தற்கு**- நரகத்தில் வீழ்வதற்கு அஞ்சினவர்கள் கொலைத் தன்மையாகிய இடுக்கணை (துன்பத்தை) அப்பாற்படுத்தித் தருமத்தை அடையும் பொருட்டு, **அருமறை ஆகமநெறிச் சொற்பொருள் அமைத்து**- அருமையாகிய வேதாகமங்களில் கொல்லாமைக்கு ஓதிய சத்தார்த்தங்கள் (சொல்லும் பொருளும்) பொருந்தச் செய்து, **இக்கொலை மறுத்தல்**- இந்தக் கொலைமறுத்தலாகிய நூலை, **அறஞ்சொல்**

**மாண்பான் இரும் உணர்வு இலேன் உரையும் நலந்தரும் என்று உளந்துணிந்து ஈண்டு இயம்பாநின்றேன்-** அறத்தின் பகுதியைக் கூறிய மாட்சிமையினாலே மிகுந்த அறிவின்மையாகிய என்னுடைய புன்மொழியும் பெரியோரது சபையின்கண் நன்மையைத் தரும் என்று மனத்திலே துணிந்து இவ்விடத்து யான் அறிந்த மாத்திரம் சொல்லுகின்றேன் என்றவாறு.

(இ-து) கடவுள் வணக்கமும் முதனூலும் இந்நூலின் பெயரும் விடய (பொருள்) பிரயோசனாதிகாரி (பிரயோசனம் - பயன், அதிகாரி - கேட்பதற்கு உரியோர்) சம்பந்தமும் (தொடர்பு) அவையடக்கமும் கூறியது.

தரும் இரு தாள் தலைமிசைக்கொண்டு என்பதனால் கடவுள் வணக்கமாயிற்று. அருமறை ஆகமநெறி என்பதனால் முதல்நூல் ஆயிற்று. இக்கொலைமறுத்தல் என்பதனால் நூற்பெயர் ஆயிற்று. இந்நூற்கு விடயமாவது (பொருள்) கொல்லாமை. அது கொலைமை தள்ளி என்பதனால் பெறப்பட்டது. பிரயோசனம் (பயன்) தருமப்பிராப்தி(அறனை அடைதல்), அது அறஞ்சார்தற்கு என்பதனாற் பெறப்பட்டது. அதிகாரி நரகத்துக்கு அஞ்சினான். அது அஞ்சினர் தீக்கு என்பதனால் பெறப்பட்டது. சம்பந்தமாவது சத்தார்த்தங்கள். அது சொற்பொருளமைத்து என்பதனால் பெறப்பட்டது. அறஞ் சொன்மாண்பால் என் உரையும் நலந்தரும் என்ற அதனால் அவையடக்கம் பெறப்பட்டது. அஃது எங்ஙனமெனின், சத்தத்திலே (ஓசை) எழுத்துச் சொற்பொருள் யாப்பணிக் குற்றங்கள் பொருந்தினும், அர்த்தத்தில் (பொருள் தன்மையால்) வேதாகம விருத்தமாயினும் (வேதாகமங்களுக்கு மாறுபாடு) முடிவின்கண் எவ்விதத்தாயினும் வேதாகம சித்தமாகிய (முடிவு) கொல்லாமையைச் சாதித்தலின் பெரியோர் இகழாரென்று உரைத்தது. என் போலுமெனின், **திருவள்ளுவர்**

> ''பொய்மையும் வாய்மைஇடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கும் எனின்''

*(மேற்கோள் பாடல் கருத்துரை : குற்றமற்ற நன்மையே விளைக்கும் என்றால் பொய்யான சொற்களும் உண்மை என்றே ஏற்றுக் கொள்ளப்படும் தகுதியைப் பெற்றுவிடும்)*

என்ற பிரமாணத்தால் என்றறிக.

எடுத்துளவெச் சமயிகளு முலகருஞ்சார்
ஓரவையி னிடையிற் தோன்றும்
உடுத்தனைச்சூழ் தரவிளங்கு மதியினுயர்
சைவரைவந் தொருவன் றாழ்ந்தீண்(டு)
அடுத்தபல வுயிர்த்தோற்றத் துயர்வுதாழ்
வருளுகென வவனைத் தேற்றித்
தடுத்தபுறச் சமயிகட்குத் தரமுறுத்தி
நிறுத்துகின்றார் தம்பா லூற்றம். (3)

*எடுத்துஉள எச்சமயிகளும் உலகரும்சார்*
*ஓர்அவையின் இடையில் தோன்றும்*
*உடுத்தனைச் சூழ்தர விளங்கும் மதியின்உயர்*
*சைவரை வந்து ஒருவன் தாழ்ந்து ஈண்டு*
*அடுத்தபல உயிர்த்தோற்றத்து உயர்வு தாழ்வு*
*அருளுகஎன அவனைத் தேற்றித்*
*தடுத்தபுறச் சமயிகட்கு உத்தரம் உறுத்தி*
*நிறுத்துகின்றார் தம்பால் ஊற்றம்*

**எடுத்துள எச்சமயிகளும் உலகரும் சார் ஓரவையினிடையில் தோன்றும் உடுத்தனைச் சூழ்தர விளங்கும் மதியின் உயர் சைவரை வந்து ஒருவன் தாழ்ந்து** - வேதாகமங்களைக் கைக்கொள்ளும் சைவர் முதலாகியோர் உட்சமயிகள் என்றும், அவைகளைக் கைக்கொள்ளாத உலோகாயதன் சமணன், பௌத்தன் முதலாகியோர் புறச்சமயிகள் என்றும், எடுத்துச் சொல்லப்பட்ட பல சமயவாதிகளும் இக்காலங்களில் விரிவாகத் தோன்றிய கற்பனா சமயிகளும் (பொருளற்ற சமயிகள்), இவர்கள் அல்லாத இலௌகிகளும் (உலகியலார்) கூடியிருந்த ஒரு பெரிய சபையின் கண்ணே, நட்சத்திரக் கணங்கள் (கூட்டங்கள்) தன்னைச்சூழ நடுவே விளங்கும் பூரணசந்திரனைப் போலத் தோன்றா நிற்கும் ஒரு சைவாசாரியரை ஒரு பக்குவி (ஏற்கத் தகுந்தவன்) யானவன் வந்து வணங்கி எழுந்து அஞ்சலியஸ்தனாய் (கூப்பியகையன்) நின்று, **ஈண்டு அடுத்த பல உயிர்த்தோற்றத்து உயர்வு தாழ்வு அருளுகென** - இவ்வுலகின் கண்ணேயுள்ள நானாபேதமாகிய(பலவகையான) சீவயோனிகளில் (உயிர்ப் பிறப்பு அல்லது உயிர்த்தோற்றம்) ஒன்றுக்கொன்று அதிகமும் தாழ்வுமாய் இருக்குமோ? எல்லாம் சமமாய் இருக்குமோ? தேவரீர்! திருவாய் மலர்ந்து அருள வேண்டும். **அவனைத்தேற்றி** - அவன் மனம் சம்மதிக்கும்படிக்கு வேதாகமங்களில் உள்ளபடியே கூறித் தெளிவிக்கும் அளவில்,

தடுத்த புறச்சமயிகட்கு உத்தரம் உறுத்தித் (விடைசொல்லி) தம்பால் ஊற்றம் நிறுத்துகின்றார். அப்படி நீர் சொல்லுகிறது கூடாதென்று தடுத்துக் கூறிய புறச்சமயிகளுக்கு எதிருத்தரமும் (மறுவிடை) உதாரணங்களும் அச்சபையினில் இருந்துள்ள ஆபால பண்டிதராகிய (இளைஞர் முதல் புலவர் வரை) எல்லா மக்களுக்கும் சம்மதம் வரும்படியே யுத்தி யுக்தமாக (அறிவு பொருந்த) எடுத்துக் காட்டித் தம்மிடத்தில் உண்டாகிய நிலைமையைத் தாபிக்கின்றார்(நிலைபெறச் செய்தல்) என்றவாறு

(இ-து) சகல சமயங்களுக்குள்ளும் சைவசித்தாந்தம் அதிகம் என்றும், அதில் உண்டாகிய வாக்கியம் வேத ஆகம சாரம் ஆகையால் அதுவே பிராமணம்(சான்று) என்றும் கூறியது.

இந்த உலகத்தின் கண்ணே உண்டாகிய இருவகைத் தோற்றமும் (சரம், அசரம்) அவற்றுள் உயர்வு தாழ்வுகளும் கூறுகின்றார்.

ஊற்றமிகுஞ் சராசரத்து ளுயர்ச்சிசரஞ்
சரத்துணரர் நரர்தம் முள்ளும்
ஏற்றமுந்தாழ்ச் சியுமுளபல் லுயிர்செகுத்துண்(டு)
உடலைவளர்த் திடுங்கீ ழம்மேல்
சாற்றுமுயிர்க் கொலைபுரித றுயர்நெடுநாள்
என்றுமுட றான்பொய் யென்றுந்
தேற்றமிக்கேன் றுயிர்தமைவீட்டினு மவற்றின்
உயிர்புரக்குந் தீதி லோரே. (4)

*ஊற்றம்மிகும் சராசரத்துள் உயர்ச்சிசரம்*
*சரத்துள்நரர் நரர்தம் உள்ளும்*
*ஏற்றமும் தாழ்ச்சியும் உளபல்உயிர் செகுத்துஉண்டு*
*உடலை வளர்த்திடும்கீழ் அம்மேல்*
*சாற்றும் உயிர்க் கொலைபுரிதல் துயர்நெடுநாள்*
*என்றும்உடல் தான்பொய் என்றும்*
*தேற்றம் மிக்குஎன்று உயிர்தமை வீட்டினும் அவற்றின்*
*உயிர்புரக்கும் தீது இலோரே.*

**ஊற்றம் மிகும் சராசரத்துள் உயர்ச்சி சரம்** - அறிவுடைமையை ஒன்றற்கு ஒன்று அதிகமாக உடைய தாபரங்களிலும் (நிற்பன, நடப்பன) சங்கமங்கள் என்று சொல்லப்படும் இருவகைத் தோற்றத்தினுள் அதிகம் (உயர்வு) என்று சொல்லப்படும், **சரத்துள்**

**நரர்** - அச்சரங்களினுள்ளும் அறிவின் உயர்ச்சியினால் மனிதரே அதிகம் என்று சொல்லப்படுவர். ஆகாரம் (உணவு), நித்திரை (உறக்கம்), மைதுனம்(கலப்பு), பயம் எல்லாச் சரங்களுக்கும் சமமாய் இருக்க, அதிகம் என்றது எப்படி என்னில், அப்படி ஆகாராதி மிருகங்களுக்கு உண்டாயினும், அவற்றுள்ளும் மனிதரிடத்தில் விசேடத் தன்மை உண்டு. அஃது எப்படியெனின், கார்த்தல் - புளித்தல் - துவர்த்தல் - உவர்த்தல் - கைத்தல் - தித்தித்தலாகிய அறுசுவைப் பதார்த்தங்களும் (பொருள்களும்) திவ்யாமுதமுமாகிய (தெய்வத்தன்மையுள்ள) போசனங்கள் (உணவு) அறிந்து புசித்தலும், சிறக்க ஒப்பனை (அலங்காரம்) செய்த தூங்கு மஞ்சத்தின் கண்ணே நுண்ணிய பஞ்சு பெய்த மெத்தையின் மேல் தலையணை முதலாகிய கொட்டைகளும் பரப்பிச் சிறந்த பட்டுவிதானத்தின் (மேற்கட்டி) கீழ் நித்திரை (உறக்கம்) செய்தலும், ஆலிங்கனம் (அணைத்தல்) ஆதியாகிய அறுபத்து நாலு கரணங்களுடன் (கைத்தொழில்) பெண்ணை மருவுதலும் (கலந்திருத்தல்), மனோவிசாரத்தின் (மனத்துன்பம்) மிகுதியால் அச்சம் அடைந்த காலையினும் தேறி, அதற்கேற்ற உபாயம் (வழி) செய்து துயரம் நீக்கிக்கொள்ளுதலும், மிருகாதிகளுக்கு இன்மையால்; அவற்றுள்ளும் மனிதர் அதிகம் எனக் கொள்க. இதற்குப் பிரமாணம் **அருட்பிரகாசம்,**

**ஆறுசுவையோடு அருந்துதல் நுண்பஞ்சணை துயிலல்**
**கூறு கரண விதங்களின் மாதரைக் கூடிடுதல்**
**தேறி விசாரத்தினான் அச்சம் நீங்குதல் தேறின் மண்மேல்**
**வேறும் உயிர்கள் தமக்கு இன்மை யாகநரர் மேல் என்பவே**

*(மே.கோ.பா.கருத்துரை : அறுசுவை உணவு உண்ணல், மெல்லிய பஞ்சணையில் உறங்குதல், கலைகளின்படி பெண்களைச் சேர்தல் ஆகியவையினால் உண்டாகும் கவலையினால் அச்சம் நீங்குதல் ஆகியவற்றை ஆராயின் அவைகள் மனிதர்களுக்கு உரியது. வேறு பிற உயிர்களுக்கு இல்லை)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க. இது அன்றியும், மிருகாதிகளுக்கு (விலங்கினங்களுக்கு) இன்மையாகிய நாணுடைமையும் மனிதருக்கு உளது. ஆதலினாலும் விசேடம் எனக் கொள்க. இதற்கப் பிரமாணம் **திருவள்ளுவர்,**

**ஊண்உடை எச்சம் உயிர்க்குஎல்லாம் வேறுஅல்ல**
**நாணுஉடைமை மாந்தர் சிறப்பு**

*(மே.கோ.பா.கருத்துரை : ஊண் உண்ணல், உடை உடுத்தல் போன்ற செயல்கள் எல்லா மக்களுக்கும் பொது. இழிசெயல் காரணமாக வெட்கப்படுதல் உயர்ந்த மக்களுக்கே உரிய சிறப்பான இயல்பு)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

**நரர் தம்முள்ளும் ஏற்றமும் தாழ்ச்சியும் உள** - இங்ஙனம் உயர்ச்சி என்று கூறப்பட்ட மனிதருள்ளும் உயர்ந்தோர்களும், தாழ்ந்தோர்களும் உண்டு. அங்ஙனமாயின், உயர்ந்தோர் யாவர், தாழ்ந்தோர் யாவர் எனின், **பல்லுயிர் செகுத்து உண்டு உடலை வளர்த்திடும் கீழ்** - விவேகத்தை உடைய மனிதராகத் தோன்றியும் மற்றும் உண்டாகிய பல உயிர்களையும் கொன்று அவைகளின் மாமிசத்தைப் புசித்துத் தமது மலஉடலை வளர்க்கா நிற்பர்கள் கீழோர். அம்மேல் சாற்றும் உயிர்க்கொலை புரிதல் நெடுநாள் துயர் என்றும், உடல்தான் பொய் என்றும், **தேற்றம் மிக்கு ஏன்று உயிர் தமை வீட்டினும் அவற்றின் உயிர் புரக்கும் தீது இலோரே** - அழகிய மேலோராவார் உலகின்கண்ணே சொல்லப்பட்ட யாதொரு சீவகொலையைப் பண்ணுமிடத்து அக்கொலைமையானது ஆன்மா நித்தியன் ஆதலால் அநேக காலம் தொடர்ந்து துக்கத்தை விளைக்கும் என்றும், இச்சரீர வாழ்க்கை அநித்தியம் (நிலையில்லாதது). இதனை நாம் காக்க எண்ணுதல் நீர்க்குமிழிக்குப் பூண்கட்ட நினைத்தலை ஒக்கும். ஆதலின் இதனைக் குறித்து நம்மை நெடுநாள் வருத்துவது ஒரு சீவகொலையைப் பண்ண ஒண்ணாது என்றும், அறிவினை மிகப் பொருந்தி ஒரு சீவனாலே தமக்குச் சரீர ஆனி (உடற்கேடு) வருமிடத்தும் அதனுடைய சரீரத்துக்கு ஒரு ஆனி பண்ணாமல் காப்பர் குற்றமற்ற நல்லோர்கள் எ-று.

இதற்குப் பிராமணம் : **திருவள்ளுவர்,**

> **தன்உயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது**
> **இன்உயிர் நீக்கும் வினை**

*(மே.கோ.பா.கருத்துரை : தன்னுடைய உயிர் தன்னைவிட்டுப் பிரிந்து செல்வதாக இருந்தாலும் அதனைத் தடுத்து நிறுத்த வேண்டி வேறோர் உயிரைக் கொலை செய்யக்கூடாது)*

என்றும், **காசிகண்டம்**

> பிறரிடை இன்னா இயற்றிடில் தமக்குப்
> பிழைப்பற எய்தும் என்பதனை

அறிகுநர் அறிஞர் ஆதலால் உயிர்கள்
அனைத்தையும் தம்உயிர்போல
நெறியினிற் கருதல் இனியவாம் ஐந்து
புலனையும் நெறிஅலா வழியில்
பொறியினில் செலுத்தாது அடக்கல் நன்கு
உணர்ந்தோர் புலமையோர் ஒழுங்கு எனப் புகல்வர்

*(மே.கோ.பா.கருத்துரை : பிறருக்கு துன்பம் செய்தால் துன்பம் செய்தவர்க்குத் அத்துன்பம் தவறாமல் எய்தும் என்பதனை அறிஞர்கள் அறிவர். எனவே அனைத்து உயிர்களையும் தம் உயிர்போலக் கருதுதல் நன்று. ஐம்புலன்களையும் நெறி அல்லாத வழியில் செலுத்தாது அடக்குதலே சிறந்த ஒழுக்கம் என்பர் புலமையோர்*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இதன் கண் தேற்றமிக்கு என்பதனால் உயர்ச்சி தாழ்ச்சி அறிவைப்பற்றி நின்றது எனக் கொள்க.

இ-து. சராசர பேதங்களின் (நிற்பன, நடப்பன) மனிதரே அதிகம் என்றும், அவர் உள்ளும் சீவகொலை பண்ணாதவர்களே உயர்ந்தோர் என்றும் கூறியது.

மேற் சீவகொலை செய்தமையால் வரும் தாழ்வு ஏது என்று கூறிய உலோகாயதனை நோக்கி உத்தரம் கூறுகின்றார்.

இங்ஙனம் வாதிகள் வினா பாட்டிலே கூறாமையின் கற்பனையே எனின், அப்படியன்று. இந்நூல் அவாய்நிலைப் பொருள். அஃதாவது வினாவினைக் காட்டுவதாகிய விடயம் (பொருள்) மாத்திரம் கூறுவது. ஆதலின் விடைக்கு இசைந்த வினாவினை உரையின்கண் வருவித்தது எனக் கொள்க.

தீயவினைத் தலைகொலைமா துயர்தரும்பின்
புண்மைதொன் னூறெரித்த வாற்றீ
டாயவொரோ வினைகளிகத் தினமுறலாற்
பலமருந்தற் கங்கோ ரங்கம்
ஏயுமதிற் பாயுமிதி லறிவுருவே
றிவண்புகலு முளதி யாமுங்
காயமிது கிடப்பமற்றோ ருடல்கனவிற்
றினம்புகலோர் காதை யன்றே. (5)

*தீயவினைத் தலைகொலை மாதுயர் தரும்பின்பு*
*உண்மை தொன்னூல் தெரித்த வாற்றுசுடு*
*ஆய ஒரோ வினைகள் இகத்திலும் உறலால்*
*பலமருந்தற்கு அங்கு ஓரங்கம்*
*ஏயும் அதில் பாயும் இதில் அறிவுஉரு வேறு*
*இவண் புகலும் உளது யாமும்*
*காயம்இது கிடப்ப மற்றோர் உடல்கனவில்*
*தினம்புகல் ஓர்காதை அன்றே*

**கொலை தீயவினைத்தலை** - கொலையானது ஒருவன் செய்யும் தீவினையாகிய ஓர்உருவிற்குத் தலை என்னப்படும். அஃது எத்தாலென்னில், உயிர்களுக்கு இதம் (இன்பம்) செய்தலே புண்ணியமும், அகிதம் (துன்பம்) செய்தலே பாவமும் என்று அறநூல்களெல்லாம் ஓதுதலின்; கொலைமைக்கு மேம்பட்ட பாவம் அதிகமின்மையின், கொலைமையே பாவத்துக்கு எல்லாம் முதன்மை எனப்படும். ஆதலின் கொல்லாமையே புண்ணியத்துக்கு எல்லாம் முதன்மை என்பதும் ஆயிற்று.

இதற்குப் பிரமாணம் : **திருவள்ளுவர்,**

**அறவினை யாதுஎனில் கொல்லாமை கோறல்**
**பிறவினை யெல்லாம் தரும்.**

*(மே.கோ.பா.கருத்துரை : அறச்செயல் எனப்படும் உயர்வுடைய நல்லசெயல் எது என்றால் எந்த ஓர் உயிரையும் கொல்லாமல் இருத்தலாகும். அதற்கு மாறாகக் கொல்லுதல் பிறதீய செயல்கள் அனைத்தையும் உண்டாக்கும்)*

**என்றும், சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்,**

**நல்ல நினைப்பு ஒழிய நாட்களில் ஆர்உயிரைக்**
**கொல்ல நினைப்பனவும் குற்றமும் மற்று ஒழியச்**
**செல்வ வயல்கழனித் தென்திரு வாரூர்புக்கு**
**எல்லை நினைத்து அடியேன் என்றுகொல் எய்துவதே**

*(மே.கோ.பா.கருத்துரை : நல்ல எண்ணங்கள் நீங்குதலால் தம் வாழ்நாள்களில் அரிய உயிர்களைக் கொல்லும் நினைப்பாகிய பிழை ஒழியும்படி உயர்ந்த செந்நெற்பயிர்களைக்கொண்ட கழனிகள் சூழப்பெற்ற தென்திசையிலுள்ள திருவாரூர் எல்லையை மிதிக்க அடியேன் செல்வது எப்பொழுதோ?)*

அன்றியும்,

கொன்று செய்த கொடுமையால் பல சொல்லவே
நின்றபாவ வினைகள் தாம்பல நீங்கவே
சென்றுசென்று தொழுமின் தேவர்பிரானிடம்
கன்றினோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே

*(மே.கோ.பா.கருத்துரை : உலகீர்! தேவர்கள் தலைவனான சிவபெருமானின் இடம், பெண் யானைகள் தன் கன்றுகளுடனே சூழ்ந்து திரிகின்ற திருக்கழுக்குன்றமே! பல உயிர்களைக் கொன்ற பாவத்தால் கண்டோர் பல நிலையில் பேச நிலைபெற்ற பாவமும் அதன் காரணங்களாகிய வினைகள் யாவும் நீங்கும்படி பல தடவைகள் சென்று வணங்கி உய்யுங்கள்)*

என்றும், ***சிவஞானதீபம்,***

கொலைஆதி நெறிஅகன்ற ஞானம்தானே
    கூறுஅரிய மேலான ஞானமாகும்
கொலைஆதி அகன்று ஒழுகும் தவங்கள் தாமே
    குற்றம் இல்லா நற்றவம் என்று உரைக்கும் நூலும்
கொலைஆதி அகற்றிய நல்அறங்கள் தாமே
    குவலயத்தில் ஒப்புஅரிய அறங்கள் ஆகும்
கொலைஆதி அகன்று பெறும் செல்வம்தானே
    கூறில்உயிர்க்கு இதமான வாழ்வு அதாமே.

*(மே.கோ.பா.கருத்துரை : மேலான ஞானம் என்பது கொலைமறுத்தலாகிய அகன்ற ஞானமாகும். கொலை செய்தல் நீங்கி ஒழுகும் தவங்களே குற்றமற்ற நல்ல தவமாகும் என்று நூல்கள் உரைக்கின்றன. அத்தகு கொலை நீங்கப்பெற்ற நல்ல அறங்கள் இந்த உலகில் ஒப்பற்ற அறங்களாகும். கொலை நீங்கப்பெற்ற செல்வமே உலக உயிர்களுக்கு இன்பமான வாழ்வைத் தரும்)*

என்றும், ***சிதம்பர புராணம்,***

வருணம் எண்இல உள்வேத மறையவர் உயர்ந்தோர்நீதி
அருளும் ஆச்சிரமம் தன்னில் துறந்தவர் அதிகர் எனப்
பெருகிய அறத்தில் கொல்லாப் பேரறம் பெரிதுநன்கு
தருபவர் அவருள் தக்க தேசிகர் தலைவர் ஆவார்.

*(மே.கோ.பா.கருத்துரை : உலகில் எண்ணற்ற குலங்கள் உள்ளன.*

*வேதங்கள் கற்ற மறையவர், சான்றோர் ஆகியோர் நீதி வழி நால்வகை நிலையில் உலகப்பற்றைத் துறந்தவர்களே அதிகம் என்பர். உலகில் செய்யப்படும் அறங்களில் பேரறமாகப் போற்றத்தக்கது கொல்லாமையாகும். அந்தக் கொல்லாமை அறத்தைப் போதிப்பவர்களுள் தக்க குருவே ஒருவருக்குத் தலைவராவார்)*

என்றும், **இதிகாசம் (பெருந்தேவனார் பாரதம்) :**

**ஆனை அடியில் அடங்கா அடியில்லை**
**தான்அதுபோல் நிற்கின்ற தன்மைதான் - ஊன்உயிரைக்**
**கொல்லா அறத்தின் கொழுநிழற்கே உள்ளடங்கும்**
**எல்லா அறமும் இசைந்து.**

*(மே.கோ.பா.கருத்துரை : ஆனையின் கால்சுவட்டில் அனைத்து உயிர்களின் கால்சுவடும் அடங்கும். உயிரைக் கொல்லாமையாகிய அறத்தின் நிழற்கு உலக அறங்கள் அனைத்தும் அடங்கும்)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா : இங்ஙனம் கொலைமையால் வரும் பாவமானது என் செய்யும்?

மேல்விடை : **மாதுயர் தரும்**-நெடுநாள் நீங்குதற்கு அரிதாகிய மகத்துவமுடைய (பெரிதான) துன்பத்தைத் தரும்.

மேல்வினா: இங்ஙனம் ஒருவன் கொலை செய்தவுடனே அதனால் வரும் துன்பத்தை அனுபவிக்கக் கண்டிலேம்.

மேல்விடை : பின்பு இம்மையில் சீவகொலைகளைப் பண்ணினவன் இம்மையிலே துன்பங்களை அனுபவியாவிடினும், சரீராந்தத்தில் (இறந்தபின்) நரகத்தை அடைந்து மகாதுயரங்களை அனுபவித்துப் பின்னும் பின்னும் நரக சேடத்தினால் (மிச்சத்தினால்) பூமியின்கண்ணே தோன்றி அந்தச் சேடபலமாகிய துன்பங்களையும் இவ்விடத்திலே அனுபவிப்பான் என்பதே நிச்சயம். அது என்போல எனின், ஒரு வேளாண்மை செய்தவனுக்கு அதன் பலமானது, காலாவதியிற் (காலமுடிவு) புசிப்புமாய் மேலைக்கு வித்தும் ஆனது போல எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் : ***சிவஞானசித்தி***

**மேலைக்கு வித்துமாகி விளைந்து அவை உணவுமாகி
ஞாலத்து வருமாபோல நாம்செயும் வினைகள் எல்லாம்
ஏலத்தான் பலமாச் செய்யும் இதம்அகிதங்கட்கு எல்லாம்
மூலத்ததுஆகி என்றும் வந்திடுமுறைமை யோடே**

*(மே.கோ.பா.கருத்துரை : விதைக்கப்பட்ட விதை முளைத்துப் பயிராகிப் பலன்தரும் காலத்தில் எதிர்காலத்தில் விதையாகவும், மக்களுக்கு உணவாகவும் இருக்கும். அதுபோல நாம் இப்பிறப்பில் செய்யும் வினைகள் எதிர்கால இன்ப துன்பங்களுக்குக் காரணமாகி வரும்)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இம்மையில் செய்த கொலையானது சரீராந்தத்தில் (இறந்தபின்) வருத்தும் என்பதற்குப் பிரமாணம் : **திருவள்ளுவர்,**

**உயிர்உடம்பின் நீக்கியார் என்பசெயிர் உடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்**

*(மே.கோ.பா.கருத்துரை :நோயால் நலிந்த உடம்பின் வறுமையிலும் உயிர் செல்லாமல் கொடிய வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருப்போர் வாழ்க்கையின் முற்பகுதியில் கொலைத்தொழில் செய்தவராதல் வேண்டும்)*

என்பர். அன்றியும்,

**கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிர்உண்ணும் கூற்று**

*(மே.கோ.பா.கருத்துரை : கொல்லாமையை விரதமாக் கொண்டு வாழ்பவன் வாழ்நாளின் மேல் உயிரைப் பருகும் எயமன் செல்லான்)*

என்றும், **திருமந்திரம் :**

**கொல்லிடு குத்து என்று கூறிய மாக்களை
வல்இடிகாரர் வரிகயிற்றால் கட்டிச்
செல்லிடு நீர் என்று தீவாய் நரகுஇடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே.**

*(மே.கோ.பா.கருத்துரை : கொலைத்தொழில் செய்வோரை இயமகணங்கள் வலிய கயிற்றால் கட்டி இழுத்துச் சென்று தீ முழங்கும் நரகத்தில் தள்ளுவர் )*

என்றும், **சிவதருமோத்தரம்,**

உற்றிடுவர் உரைத்ததுயர் அனைத்தினையும் உயிர்க்கு இரக்கம்
அற்றுவதைத்து அவைதம்மை அவலம் எனாது அவற்று ஊனைத்
துற்றினரும் மற்றுமுள கொலைபுரிந்த துரிசினரும்
பற்றும்இலர் படுந்துயர்க்குக் கடும்தூதர் வலைப்பட்டே

*(மே.கோ.பா.கருத்துரை : உயிர்களிடத்துக் கருணையின்றி அவற்றைக் கொன்று உண்போரும், கொலைத்தொழில் புரிவோரும் இயமதூதர்களுடைய வலையில் பட்டு, மீள வழிஇன்றித் துன்புறுவர்)*

என்றும், சிவஞானதீபம்,

எவ்வுயிரும் பராபரன் சந்நிதி அதாகும்
இலங்கும் உயிர்உடல் அனைத்தும் ஈசன்கோயில்
எவ்வுயுரும் எம்உயிர்போல் என்று நோக்கி
இரங்காது கொன்று அருந்தும் இழிவினோரை
வவ்வியம தூதரும் தண்டம் செய்து
வல்இரும்பை உருக்கிஅவர் வாயில்வார்த்து
வெவ்விய தீஎழுநரகில் வீழ்த்தி மாறா
வே,தனை செய்திடுவர் எனஓது நூலே

*(மே.பா.கருத்துரை : உயிர்கள் எல்லாம் இறைவன் உறையும் கோயில்கள்; எவ்வுயிரும் நம்முயிரே என்பதை உணராது கொன்று தின்னும் தீயோரை எமதூதர்கள் பற்றி, இரும்புக் குழம்பை அவர்தம் வாயில் ஊற்றியும் நெருப்புக் குழியில் தள்ளியும் தண்டிப்பர்)*

என அருள்நூல்கள் உரைக்கும். **இதிகாசம்,**

இந்நோய் நமக்கு உண்டு என்று எண்ணாதே எவ்வுயிரும்
முன்நோவக் கொன்றுஉண்ணும் மூர்க்கர்தாம் எந்நோவும்
பண்ணப் படுநரகில் பாவிகளில் பாவிகள் என்று
எண்ணப் படுவார் இசைந்து.

*(மே.கோ.பா.கருத்துரை : இந்தத் துன்பம் நமக்கு உள்ளது என்று எண்ணாமல் எந்த ஓர் உயிரும் நோகும்படி கொன்று உண்ணும் மூடர்கள் தாம் எல்லாத் துன்பமும் அடைந்து நரகத்தில் வாழும் பாவிகளில் பாவிகள் என்று எண்ணப்படுவர்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

நரகசேடமானது மறுசென்மத்திலும் (மறுபிறவி) துக்கம் தரும் என்பதற்குப் பிரமாணம் : **சிவதருமோத்தரம்,**

**கருவினுள் அழிவன் முற்றிக் கழிந்துஉடன் அழிவன் காளைப்**
**பருவம் உற்று அழிவன் ஈகை பகர்ந்துபின் உதவாப்பாவி**
**பெருவலை கண்ணியாலும் பிடித்துஉயிர் வதைத்தபேதை**
**கருதியபொருளைத் தக்கோர்க்கு உதவிடான் திளைத்த கையன்**

*(மே.கோ.பா.கருத்துரை : தாயின் வயிற்றில் கருவாக இருக்கும் போது அழிபவன்; பிறந்த உடன் அழிபவன்; காளைப் பருவம் அடைந்து அழிபவன். கொடுப்பதாகச் சொல்லிப்பின் கொடாதவன், உலக உயிர்களைச் சூழ்ச்சியால் பிடித்து உயிர் வதைத்தபேதை. பிறருடைய பொருளை அனுபவித்த கீழ்மகன்.)*

அன்றியும்,

**அவயவம் அனைத்தும் குன்றி அழிந்திடும் ஆக்கையார் ஊன்**
**சுவையினை விரும்பி உண்ட துட்டர்கள் சோலை தன்னைத்**
**திவலைய திரைநீர் தேங்கும் திண்ணிய தீரந்தன்னை**
**அவமதியாலே சால வழித்திடும் அற்பர் தாமும்**

*(மே.கோ.பா.கருத்துரை : தொழுநோயால் துன்புறுவோர் முன்பு பிற உயிர்களைக் கொன்று விருப்பத்தோடு உண்ட பாவிகள் ஆவர்)*

என்றும், **நாலடியார்,**

**இரும்பு ஆர்க்கும் கால்அரா ஏதிலார்க்கு ஆளாய்க்**
**கரும்புஆர் கழனியில் சேர்வர் - சுரும்பு ஆர்க்கும்**
**காட்டுஉளாய் வாழும் சிவலும் குறும்பூழும்**
**கூட்டுஉளாய்க் கொண்டு வைப்பார்.**

*(மே.கோ.பா.கருத்துரை : காட்டில் வாழும் கவுதாரி, காடை முதலியவற்றைப் பிடித்து வந்து கூட்டில் வைத்து வருந்தும்படி செய்வர். மறுபிறவியில் இரும்பு விலங்குகளால் பூட்டப்பட்ட கால்களை உடையராகி மற்றவர்க்கு அடிமைகளாகப் பயன்படாத நிலத்திலும், வயல்களிலும் தொழில் செய்து துன்பம் கொள்வர்.*

அன்றியும்,

**அக்கேபோல் அங்கைஒழிய விரல் அழுகித்**
**துக்கத் தொழுநோய் எழுபவே - அக்கால்**

அலவனைக் காதலித்துக் கால்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்.

*(மே.கோ.பா.கருத்துரை : முற்பிறவியில் நண்டின் தசையை விரும்பி அதன் கால்களை ஒடித்துத் தின்ற முன்வினை இப்போது வந்தடைந்ததால், விரல்கள் அழுகி இல்லாதனவாய்ச் சங்கு மணியைப் போல் வெண்ணிறம் கொண்டவனாய் உள்ளங்கை இருக்கும்படி துக்கத்தைத் தரும் தொழுநோய் உடையவர் ஆவர்)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா: அப்படிக் கொலைத் தீமைகளைப் பண்ணினவன் சென்மாந்தரத்தில் நரகத்தை அனுபவித்து நரக சேடத்தால் மறுபிறப்பிலும் துன்பத்தை அனுபவிப்பன் என்று துணிந்தது எதினால்?

மேல்விடை: **தொன்னூல் தெரித்தவாற்று ஈடாய ஒரோ வினைகள் இகத்தினும் உறலால் உண்மை** - ஒருவன் செய்த வலிய தீவினைகள் ஆனவை மறுமைக்கண் வந்து நரகத்தில் அழுத்தும். ஆயினும் இம்மையிலும் வருத்துவதாகிய தம்முடைய வேகத்தைக் காட்டும் என்று மறைமொழி கூறுகையால் அவ்வுரையின்படியே மிகுந்த பாவத்தின் வேகமானது செய்தவுடனே ஒருத்தனை வருத்தக் காணுதலின் மறுமைக்கண் நரகத்தில் அழுத்தும் என்பதே சத்தியம். வேகமானது யாது எனில் விடத்தை உண்டான் ஒருவனை அந்த விடமானது வருத்திக் கொல்லுதலின் முன்பே நெடிவு (வெப்பம்) தோன்றுதல் போலவும், நெருப்பினால் சூடுண்டான் ஒருவனுக்கு அது புண்ணாவதன் முன்பே எரிதல்போலவும், சிவத்துரோகாதி அதிபாதகமும், பிரமகத்தியாதி மகாபாதகமும், மறுமைக்கண் எரிவாய் நரகமாதிய நரகத்தில் அழுத்துதலின் முன்பே இம்மையில் செய்தவுடனே சித்தப் பிரமையாதி (பைத்தியம்) துக்கங்களும், பிரமகத்தியாதி (உயர்ந்தோர் கொலை) துக்கங்களும் அடைதல் எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் : **சுந்தரர் தேவாரம்,**

குற்று ஒருவரைக் கூறைகொண்டு கொலைகள் சூழ்ந்த களவு எலாம்
செற்று ஒருவரைச் செய்ததீமைகள் இம்மையேவரும் திண்ணமே
மற்று ஒருவரைப் பற்றிலேன் மறவாது ஒழி மடநெஞ்சமே
புற்று அரவுடைப் பெற்றம் ஏறி புறம்பயம் தொழப்போதுமே.

*(மே.கோ.பா.கருத்துரை : பொருள் பெறல் வேண்டி ஒருவன் பொருளுடையானைச் சுற்றிப் பொருள் பெற்றதோடு அவரது ஆடையையும் பறித்து, பலகொலைச் செயல்களையும் துணிவோடு செய்து வருவதால் வரும் பாவங்களும், முறைமையோடு நிற்பாரை முறையின்றி வருத்தி, கொடுமை செய்வதால் வரும் பாவங்களும், மறுமையில் துன்புறுத்தாது இம்மையிலே நம்மை இடர்ப்படுத்தும். எனவே உன்னைப் பற்றினேன்)*
என்றும், **சசிவர்ணபோதம்,**

**மிகமேவிய புண்ணிய பாவம் எனும் வினையின்**
**பயன் வேறுஒரு காலம் உறாது**
**இகமே வரும் என்பதனால் உளநோய் எல்லாம்**
**இவனைச் செற எய்தினவே**

*(மே.கோ.பா.கருத்துரை : ஒருவரிடம் பொருந்தியிருக்கக்கூடிய புண்ணியம், பாவம் என்ற வினைகளின் பயன் அவை வேறொரு பிறவியில் அவனை அணுகாது. இந்தப் பிறவியிலே வரும் என்பதனால் உலகில் உள்ள நோய்கள் அவனை இப்பொழுதே அடைந்து விட்டன)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா: அப்படி இம்மைக்கண் ஒருபாவத்தைச் செய்தவன் சரீராந்தத்தில் நரகத்தை அனுபவிப்பான் என்று நீர் சொல்லுகிறது கூடாது. அஃது எத்தால் எனில், இவ்விடத்தில் பாவாதிகளைச் செய்தவன் இறந்து போகவும் அவனைத் தகனம் (எரித்தல்) பண்ணிப்போடவும் காண்கையால்?

மேல்விடை: **பலமருந்தற்கு அங்கு ஓரங்கம் ஏயும்** - புண்ணிய பாவங்களைப் பண்ணினவன் அவற்றினது பலன்களைச் சுவர்க்க நரகத்தின் கண்ணே அனுபவித்தற்குச் சரீராந்தத்தில் பாவப் பருவமானால் யாதனாதேகமும் (நரக உடல்) புண்ணியப் பருவமானால் பூதசார தேகமும் (தேவ உடல்) யம தூதர் ஒருகணத்திலே உண்டு பண்ணுவார்கள். அந்தச் சரீரம் சுகதுக்க அனுபவத்தைப் பொருந்தும்.

இதற்குப் பிரமாணம்: **சிவதருமோத்தரம்.**

அருந்துயர்க் குழியின் ஆழ்வார் ஆகமே பாவத்து ஆகும்
பொருந்திய பூதத்தாலே இமைத்திடும் போதுதன்னுள்
புரிந்துவிண் புகுவார் ஆகம் புண்ணியத்தாலே ஆகும்
பொருந்திய பூதசாரத்து ஒருகணப் பொழுது தன்னில்

*(மே.கோ.பா.கருத்துரை : பாவிகள் இறந்தபிறகு அவர்களைத் தண்டிப்பதற்கு யாதனா சரீரம் என்னும் உடல் அளிக்கப் பெறுவர். புண்ணியம் செய்தோர் இறந்த பிறகு இன்பங்களை அனுபவிக்க பூதசார சரீரம் என்னும் உடல் அளிக்கப் பெறுவர்)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா: ஒருவன் இம்மையிலே செய்த பாவத்துக்கு ஏதுவாய் மறுமையிலே ஒரு சரீரத்தை உண்டுபண்ணி நரகத்தில் வாதிப்பர் என்பது எத்தினுக்கு ஒக்கும் எனில், குற்றம் செய்தவன் தப்பிப்போகக் குறுக்கே வந்தவனை வாய்மேல் அடித்தான் என்பதுபோலும்; ஒருவன் பசிக்கு மற்றொருவன் உண்டான் என்பது போலும்; இப்படி அனேகமாக உலகத்தின் கண்ணே சொல்லும் பரியாச (வேடிக்கைப் பேச்சு) வார்த்தைகளுக்கு ஒக்கும். இந்தச் சரீரம் செய்த பாவத்துக்கு அந்தச் சரீரம் வாதைப்படும் என்றீர். அதற்கும் இதற்கும் சம்பந்தம் ஏது?

மேல்விடை: **அதில் பாயும் இதில் அறிவு**-அந்தச் சரீரத்தின்கண் சென்று புகும் இந்தச் சரீரத்தினின்றும் புண்ணிய பாவங்களுக்கு ஏதுவாகி இதாகிதங்களைப் (நன்மை, தீமை) பண்ணினவனுடைய அறிவு.

இதற்குப் பிரமாணம் : **சிவதருமோத்தரம்,**

**திரள்உறு செளுகைபோல் சீவன் தீண்டியே**
**வரும்உருவு அதனைமுன் உடலை மாற்றிடும்**
**தருமமே பருவமேல் சாரும் வானினைப்**
**பருவமேல் தீவினை நிரயம் பற்றுமே.**

*(மே.கோ.பா.கருத்துரை : ஒன்றைப்பற்றி ஒன்றைவிட்டு நகரும் அட்டை போல இவ்வுடலை விட்டு வேறு உடலைப்பெறும் உயிர் அறம் செய்திருப்பின் நல்லுலகையும், பாவம் செய்திருப்பின் நரகத்தையும் பற்றும்)*

என்பதனால் காண்க.

மேல்வினா: அப்படி ஒரு சாரீரத்தின் கண்ணே மற்றொரு சரீரத்தின் கண் உண்டாகிய அறிவு சென்று புகும் என்னும் இடத்துத் தருண (இளமை) பருவத்தை இச்சித்து (விரும்பி) உடைய ஒரு விருத்தன் (முதுமையான்) ஒரு தருணபருவன் இறக்கக் கண்டவிடத்து அவனது சரீரத்தில் பாய்தல் வேண்டும். அஃது இல்லாமையின் ஒரு சரீரத்தின் அறிவு மற்றொரு சரீரத்தில் புகும் என்றல் கூடாது.

மேல்விடை : இவண் வேறு உருப்புகலும் உளது. இவ்விடத்தும் பரகாயப் பிரவேசம் (கூடுவிட்டுக் கூடு பாய்தல்) பண்ணுவோரும் உண்டு.

மேல்வினா: அப்படிப் பரகாயப் பிரவேசம் பண்ணுதல் இவ்விடத்து நாம் கண்டோம் இல்லை. அதுவும் அம்மி பறக்கக் கண்டேன் என்பது போலும் உலகக் கற்பனா (கட்டு) கதை.

மேல்விடை: **யாமும் காயம் இது கிடப்ப மற்று ஓர் உடல் கனவில் தினம்புகல் ஓர் காதையன்றே**-அப்படிப் பரகாயப் பிரவேசம் பண்ணுதல் இப்பொழுது இவ்விடத்தில் காணாமையால் கற்பனாகதை என்றாய் ஆயினும், நாள்தோறும் யாம் எல்லோரும் சொப்பனத்தின் கண்ணே இந்த தேகத்தைவிட்டு வேறு ஒரு தேகத்தில் பாய்ந்து எவ்விடத்தும் சஞ்சரித்தலால், ஒரு சரீரத்தின் கண் இருந்துள அறிவு மற்றொரு சரீரத்தின்கண் கன்மத்தால் சென்று புகும் என்பதே உண்மை என்று அறிவாயாக. எ-று.

இதற்குப் பிரமாணம் : **சிவஞான சித்தி,**

**பன்னகம் அண்டசங்கள் பரகாயம் தன்னில் பாய்வோர்
துன்னுதோல் முட்டைஆக்கை துறந்துசெல்வதுவேபோல
உன்னிய உயிர்கள்தூல உடல்விட்டு வானின்ஊடு
மன்னிடு நனவு மாறிக் கனவினை மருவுமாபோல**

(மே.கோ.பா.கருத்துரை : பாம்பு சட்டை விடுவது போலவும், முட்டையிலிருந்து குஞ்சுகள் வெளிப்படுவது போலவும் கூடுவிட்டுக் கூடு பாய்வோர் போலவும் பரு உடலை விட்டு, நீங்கிய உயிர்கள் செல்லும். இது நனவுநிலையிலிருந்து கனவுநிலைக்குச் செல்லுவதை ஒக்கும்)

என்றும், **திருமந்திரம்,**

**நாகம் உடல்உயிர் போலும்நல் அண்டசம்
போகும் நனாவைக் கனாவின் மறத்தல்போல்
ஆகும்அரன் அருளால் சென்று அருவினைக்கு
ஏகும் இடம் சென்று இருபயன் உண்மையே**

(மே.கோ.பா.கருத்துரை : நாகபாம்பு தோலை உரித்துவிட்டுச் செல்லுதல் போலவும், முட்டையிலுள்ள குஞ்சு முட்டையை விட்டு வெளிவருவது போலவும், கனவில் கண்டவற்றை நனவில் விளங்காது மறந்து விடுதல் போலவும், உடலை விட்டு உயிர் போகும். சிவன்

*ஆணையால் உடலைவிட்டுப் பிரிந்துபோய் அதன் தகுதிக்கு ஏற்ப நல்வினை, தீவினைகளைச் சொர்க்க நரகங்களைப் பொருந்தி உண்ணும்.)*

அன்றியும்,

காயும் கடும்பரி கால்வைத்து வாங்கல்போல்
சேயும் இடம்சென்று உலவவும் வல்லது
ஓயும் துயில்போல ஒன்றைவிட்டு அங்குஒன்றி
ஏயும் அவர்என்ன எய்திடும் காயமே

*(மே.கோ.பா.கருத்துரை :போர்க்குதிரை கடுமையான வேகத்தோடு பாய்ந்து மீளுதல் போல சூக்கும உடல் சமீபத்திலும் தூரத்திலும் சென்று மீளும் தன்மையது.)*

என்றும்,

சொப்பனத்து இயங்குகாயம் சூக்குமம் அதனால் துய்க்கு
நற்பயன் துறக்கம் துன்பம் நரகுபின் நனைவைச் சார்தல்
உற்பவம் இவைகள் நீங்கி ஒன்றையும் உணராய் ஆகில்
நிற்பன சுழுத்திமேல்வை நிகழ்வ சங்காரம் போலும்

*(மே.பா.கருத்துரை : கனவில் பல்வேறு காட்சிகளைக் காண்பது போல இறந்த பிறகு துறக்கம் நரகம் முதலிய அனுபவங்களை உயிர் பெறுகிறது. கனவு கண்டபின் விழிப்பதை ஒத்தது பிறப்பு. உறக்கம் போன்றது இறப்பு. இம்மூன்று நிலைகளிலும் நுண்உடலுக்கு கேடு இல்லை என்பது கருத்து)*

என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

இ·து: கொலைத் தீமையுடையார் நரகம் அனுபவிக்குமிடத்துத் தத்தம் பாவத்து அளவிற்குத் தக அவ்விடத்து உண்டாகிய ஒரு பூததேகத்தைப் பொருந்துவர் என்று கூறுகின்றான்.

இப்படிக் கூறிய சைவ சித்தாந்தியை நோக்கிப் பின்னும் உலோகாயதன் கூறுகின்றான்.

சொப்பனத்தின்கண் வேறொருசரீரம் வந்து பொருந்தும் என்ற வார்த்தை பழுது. கனவிலே தோன்றுவதெல்லாம் நனவின் கண்கண்ட நினைவாகும் என்ற வார்த்தைக்குப் பதில் கூறுகின்றார்.

காதறரு முருவிதுவான் பறத்திலின்றாங்
    கதற்கியல்பாய்க் காண்ட லானும்
போதுறைவோ ணாதியர்கள் முகமாதி
    கனவிலியாம் பொருந்தா தானும்
ஓதுநினை வலவுணர்வா ருயிர்க்குணமிவ்
    வுடல் பிணத்தொன் றுணரக் காணேம்
வாதமுள திலையுறக்கத் துணர்வுணர்வ
    துயிரெனக் கொண் மதித்தே சில்லோய். (6)

*காதல்தரும் உருஇது வான்பறத்தல் இன்று ஆங்கு*
    *அதற்கு இயல்பாய்க் காண்டலானும்*
*போதுஉறைவோன் ஆதியர்கள் முகம்ஆதி*
    *கனவில்யாம் பொருநாதா தானும்*
*ஓதும் நினைவுஅல உணர்வார் உயிர்க் குணம்இவ்*
    *உடல்பிணத்து ஒன்றுஉணரக் காணேம்*
*வாதம்உளது இலை உறக்கத்து உணர்வு உணர்வது*
    *உயிர்எனக்கொள் மதித்தேசு இல்லோய்*

**காதல் தரும் உரு இது வான்பறத்தல் இன்று ஆங்கு அதற்கு இயல்பாய்க் காண்டலானும் போது உறைவோன் ஆதியர்கள் முகமாதி கனவில் யாம் பொருந்தாதானும் ஓதும் நினைவு அல-** இவ்விடத்து நம்மால் இச்சிக்கப்பட்ட இந்தச் சரீரத்துக்கு ஒரு காலும் ஆகாயத்தில் பறக்கும் தன்மை இன்மையானும், கனவின்கண்ணே தோன்றிய சரீரத்துக்கு ஆகாயத்தில் பறக்குதல் இயல்பாய்ப் புதுமையும் அதிசயமும் தோன்றக் காண்டலினாலும், பிரமா ஆதியாகிய தேவதைகளுக்கு உண்டாகிய பலமுகம் முதலிய உறுப்புக்கள் நமக்குக் கனவின்கண் உண்டாகாமையானும், சொப்பன தேகத்தை இச்சரீரத்தின்கண் கண்டு கேட்டு இருந்தமையால் அந்த நினைவு என்குதல் கூடாது. அது எப்படி என்னில் சொப்பன தேகம் பறக்கக் காண்கையாலும், இத்தேகத்துக்கு அஃது இல்லாமையாலும் கண்டநினைவு அல்ல. அல்லது தேவதைகள் ஆகாயமனம் (வானத்தில் செல்லுதல்) பண்ணுவார்கள் என்று கதைகளில் கேட்ட நினைவு என்னில் புராண காவியங்களில் பிரமா ஆதி தேவதைகளுக்கு அநேக முகங்களும் அநேகக் கண்களும் அநேகக் கைகளும் உண்டு என்று கேட்டு இருக்கின்றோம். ஆகையால் அவ்வடிவமும் நமக்குச் சொப்பனத்தின்கண் பொருந்துதல் வேண்டும். அஃது இல்லாமையால் கேட்ட நினைவும் அல்ல; ஆதலின் சொப்பனத்தின்

கண் வேறு ஒரு தேகம் வரும் என்பதே சத்தியம்.

*இதற்குப் பிரமாணம் :*

**இவ்வுடல் கனவூடு எங்கும் இயங்குஉரு அலஅன்று என்பர்**
**அவ்வுடல் பறத்தலால் கண்டுஉள நினைவு அல்ல ஆகும்**
**எவ்வம்இல் இமையோர் கேள்வி நினைவுஎனில் இந்திராதி**
**திவ்விய உருக்கொளேமால் திகழ்ந்த அவ்வுருவேறு என்னே**

*(மே.கோ.பா.கருத்துரை : இவ்வுடல் கனவில் காணும் உடல் அல்ல; கனவில் காணும் உடல் பறத்தல் முதலியவற்றைச் செய்வது போல இது செய்வதில்லை. கனவில் காணும் உடல் நினைவின் வெளிப்பாடும் அல்ல. ஏனெனில் நினைவில் இருக்கும் பதிவுகள் எல்லாம் கனவில் வருவது இல்லை. எனவே கனவில் காணும் உடல் நுண் உடலே ஆகும்)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா : அப்படிச் சொப்பனத்தின்கண் இவ்விடத்தில் காணாதன கண்டேம் ஆயினும் அதுவும் இத்தேகத்தின் குணம் அல்லது வேறு ஒரு தேகம் என்பது கூடாது. ஆதலின், ஒரு தேகத்தின் குணம் மற்றொரு தேகத்தின்கண் சென்று பொருந்துவதே இல்லை. உண்டு என்னில் ஓர் இரத்தினத்தினது ஒளி மற்றொரு இரத்தினத்தில் சென்று பொருந்த வேண்டும். அஃது இன்மையால், இச்சரீராந்தத்தில் இதனுடைய குணமாகிய அறிவு வேறொரு தேகத்தில் சென்று புகுவதுமில்லை.

மேல்விடை : **உணர்வார் உயிர்க்குணம்** - நீ ஒன்றின் குணம் ஒன்றில் சென்று புகாது என்பது ஒக்கும். இங்ஙனம் உண்டாகிய அறிவு இத்தேகத்தின் குணம் அன்று. இத்தேகத்தின்கண் கன்ம (வினைப்பயன்) வசத்தால் பொருந்தி இருந்துள ஓர் ஆன்மாவின் உடைய குணம்.

மேல்வினா : நீர் இங்ஙனம் இத்தேகத்தின்கண் இதற்கு அன்னியமாய் (வேறாய்) ஒரு சீவன் உண்டு என்பது கூடாது. அஃது ஏன் எனில் இங்ஙனம் காணப்பட்டுள்ள பிருதிவி- அப்பு (கடல்) - தேயு (நெருப்பு) - வாயு என்னும் இந்த நான்கு பூதமும் நித்தியமாய் உள்ளன. அவற்றுள் வாயு சலன (அசையும் இயல்பு) குணத்தை உடையது. ஆகையால் மற்றுள பூதங்கட்கு அதனோடு கலப்பு உண்டாகுதலின், இச்சரீராதிகள் தோன்றும். அப்படித் தோன்றின என்பது எத்தால் கண்டது என்னில், மண் கடினமாய் இருத்தல்

போல, சரீரத்தில் எலும்பு தோலாதிகள் கடினமாய் மலம் தடித்து விழ்தலினாலும், சலம் நெகிழ்ந்து பதம் செய்தலின் இரத்தாதிகள் நெகிழ்ச்சி உடையனவாய்ச் சலம் வீழ்தலினாலும், நெருப்புச் சுட்டு ஒன்றுவித்தலின் உதராக்கினி (வயிற்றுத் தீ) அன்னபானாதிகளைச் சுட்டு ஒன்றுவித்துத் தொக்கின்கண் (தோல்) வெப்புத் தோற்றுதலினாலும், வாயுச் சலித்துத் திரட்டுதலின் இச்சரீரத்துக்கு ஓடுதலாதி சலனத்தைப்பண்ணி நாசியாதிகளின் இயக்கம் காணுதலினாலும் அந்தப் பூதக்கலப்பு இந்தச் சரீரம் என்பது பிரத்தியட்சம் (ஐம்பொறிகளால் கண்டது). பாக்கு, வெற்றிலை, சுண்ணாம்பு மூன்றும் கூடின இடத்தில் ஒரு சிவப்புத் தோன்றுதல் போல, பூத சையோகத்தினால் (பூதங்களின் சேர்க்கையால்) முன்பில்லாத மனமும் தோன்றும். இதுவன்றி நீர் இந்தச் சரீரத்தில் ஓர் ஆன்மா உண்டு எனில் இப்படிப் பிரத்தியட்சமாகக் காணவேண்டும். அப்படிக் காணப்படாமையின் ஆகாசத் தாமரைப்பூவும் முயல்கொம்பும் ஆமைமயிரும் மணலில் தைலமும் உண்டு என்பதை ஒக்கும். ஆதலின், ஆன்மா உண்டு என்பதை இல்லை. இவ்விடத்துத் தோன்றும் உணர்வு எல்லாம் தேக குணம்.

மேல்விடை : **இவ்வுடல் பிணத்து ஒன்று உணரக் காணோம்** - நீ இந்தத்தேகத்தின் குணம் அறிவு என்னும் இடத்துப் பிணமான அவதரத்தில் (வேளையில்) தேகம் கிடக்கக் கண்டேம். உணர்வு அங்ஙனம் கண்டிலேம். ஆதலின் உணர்வு தேகத்தின் குணம் என்பது கூடாது.

மேல்வினா : பிணமான சரீரத்தில் வாயு நீங்குதலால் அக்கினி அவியும். அப்பொழுது அறிவும் கெடும். அவைகள் நீங்கியது எவ்விதத்தால் கண்டது என்னில், பிணத்தின் நாசியில் காற்றும் கண்டிலேம். தொக்கில் (தோலில்) வெப்பமும் கண்டிலேம். ஆதலின் அவைகள் நீங்கியது உண்மை. நீங்குதலின் சரீரத்தின்கண் அறியாமை அடையும்.

மேல்விடை : **வாதம் உறக்கத்து உளது இலை உணர்வு உணர்வது உயிர் எனக்கொள் மதித்தேசு இல்லோய்** - நீ இங்ஙனம் பிணமான காலையில் நீங்கும் என்ற வாயு உறக்கத்தின் கண்ணே நீங்காமே இருக்கவும், அப்பொழுது தேகத்தின்கண்ணே பாம்பு ஏறிவருதலும், சத்துரு (பகை) வருதலும், சரீரம் அறியாமல் கிடத்தலால், வாயு நீங்க அறிவு கெடும் என்பது கூடாது. ஆதலின் கன்ம வசத்தால் அவத்தைகள்தோறும் ஒடுங்கியும் உணர்ந்தும் வருவானோர்

ஆன்மா உளன் என்று அறிவாய் ஞானப்பிரகாசம் (அறிவு விளக்கம்) இன்றி இருள் அடைந்த புத்தியினை உடையோய். ( எ.று)

இதற்குப் பிரமாணம் : **சிவஞானசித்தி,**

உடலின்வேறு உயிர்ஏல் இந்தஉடல் அன்றோ உணர்வது என்னின்
உடல்சவம் ஆனபோதும் உடலினுக்கு உணர்வு உண்டோதான்
உடலினில் வாயுப்போனால் உணர்ச்சிஇன்று உடலுக்கென்
உடலினின் வாயுப்போகாது உறக்கத்து உணர்வது இன்றே

*(மே.கோ.பா.கருத்துரை : உடலின் வேறானது உயிர் என்பதை ஏற்றுக்கொள்ளாமல் உணர்கின்றது என்றால் பிணமான போது உடல் இருப்பினும் எதையும் உணர்வது இல்லையே. உடலைவிட்டுக் காற்று வெளியேறி விட்டால் உணர்ச்சி இருக்காது என்றால் உறக்க நிலையில் உணர்ச்சி இல்லையே. எனவே உடலின் வேறாக உயிர் உண்டு)*

என்றும், **சிவப்பிரகாச வெண்பா,**

உடம்புநீ யல்லை உறக்கத்தில் எல்லாம்
அடங்கப் பிணம் ஆகையாலே - திடம்படவும்
வேறுதான் உண்டோ விடாதே அருந்துகின்ற
சோறுகாண் காயச் சுமை.

*(மே.கோ.பா.கருத்துரை : நீ வேறு. உன் உடல் வேறு. ஏனெனில் உறக்கத்திலும் சாவிலும் இவ்வுடல் அடங்கிவிடுகின்றது. உணவினால் வளர்க்கப்படுகின்ற இவ்வுடல் உயிருக்கு ஒரு சுமையே)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இ·து. சொப்பன தேகம் இத்தேகத்துக்கு அன்னியம் என்றும், இத்தேகங்களைக் கன்மவசத்தால் பொருந்துவானோர் ஆன்மா உளன் என்றும் கூறியது.

இவ்வுளவும் சரீரமே ஆன்மா என்னும் உலோகாயதனை மறுத்துச் சரீரத்துக்கு அன்னியமாய் ஓர் ஆன்மா உண்டு என்றும், அவன் இம்மைக்கண் செய்த கொலைத் தோடத்தைச் (குற்றத்தை) சரீராந்தத்தில் வேறொரு தேகத்தைப் பொருந்தி நரகத்தில் அனுபவிப்பது உண்டு என்றும் சாதித்தது. இப்படிக் கூறிய சைவ சித்தாந்தியை நோக்கி மேல் ஏசுமதவாதி கூறுகின்றான்.

இங்ஙனம் உலோகாயதன் கூறிய உரைபழுது. நீர் கூறியவற்றுள்ளும் சிறிது ஒக்கும். சிறிது ஒவ்வாது. யாது ஒக்கும் யாது ஒவ்வாது எனில், நீர் கொலையால் பாவம் உண்டு என்பது ஒக்கும். எல்லாக் கொலையாலும் பாவம் உண்டு என்பது கூடாது. அஃது எங்ஙனம் எனின் மனிதரை மனிதன் கொன்றால், கொன்றவன் நரகத்து அழுந்துவான். அஃது உண்மை. மிருகாதிகளைக் கொன்றதனால் பாவம் உண்டு என்பது இல்லை. அஃது ஏன்எனில் மிருகாதிகளை மனிதருக்கு உபகாரமாகக் கர்த்தர் (கடவுள்) படைத்துக் கொடுத்தார் என்று எங்கள் சத்திய வேதத்தில் (பைபிள்) இருக்கிறது என்று கூறிய அவனுடைய உரையை மறுத்து மேல் உத்திரம் கூறுகின்றார்.

தேசிறைமா னுடர்க்கெவையு மருளினுண்(டு)ஈக்
   கீடமையென் செய்வாய் மாந்தர்க்கு
ஆசருள்வ தெனைவேங்கை யாதியச்சா
   திகளவர்சொற் கடங்கு மாறென்
காசடைந்திம் முறையுமோரோர் காற்றிரிவ
   தெனைமுனஞ்செய் கருமந் தன்னால்
பேசுமச ராதியுரு வுயிர்களுறல்
   உண்மையுன்சொற் பிழையா மன்றே. (7)

*தேசுஇறை மானுடர்க்கு எவையும் அருளின்உண்டு ஈக்*
   *கீடம்ஐஎன் செய்வாய் மாந்தர்க்கு*
*ஆசுஅருள்வது எனைவேங்கை ஆதிஅச்சாதி*
   *கள்அவர் சொற்கு அடங்குமாறு என்*
*காசு அடைந்து இம்முறையும் ஓரோர் கால்திரிவது*
   *எனை, முனம்செய் கருமம் தன்னால்*
*பேசும் அசராதி உருஉயிர்கள் உறல்*
   *உண்மைஉன் சொல்பிழையாம் அன்றே*

**தேசு இறை மானுடர்க்கு எவையும் அருளின் உண்டு ஈக்கீடம் ஐ என் செய்வாய்-** ஞானரூபியாகிய ஈசுரன் மனிதருக்கு உபகாரமாக மிருகாதிகளைப் படைத்தானாகில் மலத்தின்கண் ஈயால் உண்டாகிய நுண்ணிய புழுவும் மற்றும் பரமாணு (சூரியனின் கதிரில் படரும் துகளில் முப்பதில் ஒரு பாகமாகிய மிகச் சிறிய அளவு) வினும் நுண்ணிய செந்துக்களும் உனக்கு என்ன பிரயோசனத்துக்கு (பயன்) வரும். அவைகள் அப்பிரயோசனம் (பயனற்றது) என்னில், கருத்தா ஞானமயன் என்பது கூடாது.

இதற்குப் பிரமாணம் : ஏசுமத நிராகரணம் (இது வீரமாமுனிவர் என்னும் கிருத்துவரிடம் சிவப்பிரகாச சுவாமிகள் வாதிட்டு எழுதியது)

அறிகிலை நரர்க்காய் வேண்டி அளித்தனன் மிருகம் ஆதி
இறையன் என்றாய். ஓர்ஈ ஈன்றிட மலம்மீது ஊரும்
சிறுபுழு இரைவுறாது என்செய்குவை அதனை நோக்க
அறிவரு நுணியதேகி அனந்தநீ அவைஎன் செய்வாய்

*(மே.கோ.பா.கருத்துரை : இறைவன் மனிதர்களுக்காக மிருகம் முதலிய உயிரினங்களைப் படைத்தான் என்றால் ஈயினால் உண்டான மலத்தின் ஊரும் சிறுபுழு முதலிய நுண்ணியிரிகளை எதன் பொருட்டுப் படைத்தான்)*

என்பதனால் காண்க.

வாதியுத்தரம் : சீவன்களிலே சிறியவைகள் எல்லாம் பெரியவைக்கு இரையாய் ஒன்றுக்கு ஒன்று வேண்டி இருத்தலின், எவையும் பாரம்பரியத்தில் மனிதருக்கு உபகாரமாகப் படைத்ததே.

மேல்விடை : **வேங்கையாதி மாந்தர்க்கு ஆசு அருள்வது எனை** - மனிதருக்கு உபகாரமாகப் படைத்த மிருகவர்க்கத்துள் சிங்கம், புலி,யானை,கரடி,பாம்பு,தேள் முதலியவைகள் மனிதருக்கு இதப்பிரயோசனத்துக்கு (நல்லதற்குப் பயன்படாமல்) வாராமல் வருத்துதலும் கொல்லுதலும் செய்வதால் உபகாரமாகப் படைத்தது என்பது கூடாது.

மேல்வாதிஉத்தரம் : கருத்தா ஆதியிலே ஒருமனிதனைப் படைத்து, மிருகாதிகளும் அவனுக்கு அடங்குவனாகப் பண்ணி, இன்னபடி நட என்று ஒரு புத்தியும் கூற, அவன் அந்தப் புத்தியின்வழி நடவாமல் தவறு செய்தலால், மிருகாதிகள் உனக்கு அடங்காமல் போக என்று சபித்தலின், அவனுக்கும் அவனது சந்ததியாகிய மனிதனுக்கும் மிருகாதிகள் அடங்காமல் போயின.

மேல்விடை : ***அச்சாதிகள் அவர்சொற்கு அடங்குமாறு என்*** - அங்ஙனம் சாபத்தால் மிருகாதிகள் அடங்காவிடின் ஆடு, மாடு, எருமை,பன்றி,நாய்,கோழி முதலிய சில சீவன்கள் மனிதருக்கு அடங்குதலால் சபித்தது பொய்யாம். சாபம் தவறிற்று என்னில் கருத்தா அசத்தனாம் (ஆற்றல் இல்லாதவன்) ஆதலின் சபித்ததே இல்லை.

இதற்குப் பிரமாணம் : **ஏசுமத நிராகரணம்.**

**வாய்திறந்து அலறும் வேங்கை வல்விடம் உமிழ்பாம்பு ஆதி**
**நேயம்மற்று எவர்கூற்றாய் நிகழ்வதுஎன் உலகத்து அந்நாள்**
**தூயவன் ஆதிக்கு ஓதும்செல்நெறி அடங்காது என்னின்**
**ஆயகோ ஆதிமாந்தர்க்கு அடங்கிய விதம்என் கொல்லோ**

*(மே.கோ.பா.கருத்துரை : மனிதனுக்கு அடங்கும்படி படைக்கப்பட்டதாகக் கூறப்படும் விலங்குகளில் புலி, பாம்பு முதலியவை அடங்காமல் போனது ஏன்? மனிதன் இறைவழியில் நடவாத காரணத்தால் அவை அடங்காமல் போகட்டும் என இறைவன் பின்னர் சபித்தான் எனில் ஆடு,மாடு முதலியவை மனிதருக்கு அடங்கிப்போவதால் உன் கருத்து பொய்யாம்.)*

என்பதனால் காண்க.

மேல்வாதி உத்தரம்: அங்ஙனஞ் சாபம் தவறிற்று என்பது இல்லை. மனிதருக்குப் புலியாதிகள் அடங்காமலும் மாடு முதலிய அடங்கவும் கருத்தாவினது சாபமே

மேல்விடை : **இம்முறையும் காசு அடைந்து ஓரோர்கால் திரிவது எனை** - நீ அங்ஙனம் கூறிய முறைமையும் பழுதுடைத்தாக, ஒருகாலத்தில் பாம்பு முதலியன ஒருவனுக்கு அடங்குதலினாலும், பசு முதலியன ஒருவனைக் கொல்லுதலினாலும் அதுவும் கூடாது. ஆதலின், மனிதருக்கு உபகாரமாக மிருகாதிகளைப் படைத்ததே இல்லை.

இதற்குப் பிரமாணம் : **ஏசுமத நிராகரணம்,**

**சொல்லினன் அவர்க்கு அச்சாதி அடங்கவும் துயரம் செய்தே**
**கொல்ல மற்றையவும் ஈசன் என்றிடில் கொடுநர காதி**
**நல்லவாஓர் ஓர் காலத்து அடங்கலான் நவில் அச்சாதி**
**அல்லல்செய்து இடலால் தீயோய் அறைந்தசொல் பழுதேஆகும்.**

*(மே.கோ.பா.கருத்துரை : சில அடங்கவும் சில அடங்காமலும் போகுமாறு இறைவனே சபித்தான் எனில் ஒரு காலத்தில் கொடிய விலங்குகள் அடங்கவும், மற்றொரு காலத்தில் சில விலங்குகள் மனிதனைக் கொல்வதையும் காணும்போது உன் கருத்து தவறாகவும் முடிகிறது.)*

மேல்வாதி உத்தரம் : அங்ஙனமாயின், கருத்தா பட்சவாதியாம் (ஒருபக்கத்தில் விருப்பு); சர்வ சீவன்களையும் ஒரு படித்தின்றி ஊர்த்த யோனியாகவும் (தேவ, மனித பிறப்பு), திரியக்கு யோனியாகவும் (விலங்குப்பிறவி) படைத்தமையால்.

மேல்விடை : **உயிர்கள் முனம் செய் கருமம் தன்னால் பேசும் அசராதி உரு உறல் உண்மை உன்சொல் பிழையாம் அன்றே** - ஆன்மாக்கள் எல்லாம் ஒருவருக்கு ஒருவர் அநாதி சென்மாந்தரங்களில் செய்த இத அகிதங்களில் (நன்மை, தீமைகள்) உண்டாகிய புண்ணிய பாவத்தினாலே இங்ஙனம் சொல்லப்பட்ட சராசர வடிவங்களைப் பொருந்துதல் சத்தியம். ஆதலின், உன்னுடைய வேதம் சத்திய வேதம் ஆகாது; அசத்திய வேதம் ஆயிற்று என்றவாறு.

இதற்குப் பிரமாணம் : திருவாசகம்,

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅநின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்

*(மே.கோ.பா.கருத்துரை : பருவுடல் எடுத்துப் பிறக்கும் வகையில் ஓரறிவுடைய புல் பூண்டுகளாகியும், ஈரறிவுடைய புழு, மரம், ஐயறிவுடைய விலங்குகள், பறவை வகைகள், பாம்பு, கல்லுள் வாழும் தேரைகள், ஆறறிவுடைய மனிதர்கள், பேய்கள், பூதங்கள், முனிவர், தேவர் முதலாகச் சொல்லப்படுகின்ற எல்லா இனத்திலும் பிறந்து அலுத்துப்போனேன்)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இ·து. ஈசுரன் மனிதருக்கு உபகாரமாக மிருகாதிகளைப் படைத்தான் என்பது அசத்தியம் என்றும், ஆன்மாக்கள் கன்மத்தால் நானாரூபம் (பலவிதவடிவம்) பெற்றது உண்மை என்றும் கூறியது.

இப்படிக் கூறிய சைவ சித்தாந்தியை நோக்கி வாமி (தேவி பக்தன் - வாம தந்திரத்தின்படி சக்தியை வழிபடுவோர்) கூறுகின்றான்.

இங்ஙனம் ஆன்மாக்களெல்லாம் கன்ம வசத்தினாலே சராசர வடிவம் அடைந்தார்கள் என்றும், கொலையினால் பாவம் உண்டு என்றும் கூறியது ஒக்கும். ஏசுமதவாதி கூறிய உரை பழுது. கொலையினாலே பாவம் உண்டாயினும் சிறிதிடத்து உண்டு; சிறிதிடத்து இல்லை. அதுவும் மேலே உம்முடைய வசனத்தினாலே தானே அறிவிக்கின்றேன். நீர் இப்பொழுது இந்த ஒரு வினாவிற்கு

உத்தரம் கூறல்வேண்டும். அஃது யாது எனில், சராசரங்கள் எல்லாம் சீவன் என்றீர். அவற்றுள் அசரமாகிய மரம் முதலிய சீவன்களை நீர் கொன்று அருந்துகின்றீர். அவற்றினால் உமக்குத் தோசம் இல்லாதது என்னை? கூறும் என்ன, மேல் உத்தரம் கூறுகின்றார்.

பிழையுறுதல் சிறிதசரக் கொலையதனால்
சரக்கொலையிற் பெருகா திங்ஙன்
இழிவு தரும் பருவமடை தலினாற்கீ
ராதியைந்து மீயுந் தூய
அழகியவா னூணயின்றோன் கீழெனமே
லாவர்குறைந் தடைபா வத்தான்
முழுமலப் பன்றியை யருந்தும் புலையர்பன்றிக்(கு)
உறும்பருவ முறையி னாமால். (8)

*பிழைஉறுதல் சிறிதுஅரசக் கொலை அதனால்*
*சரக் கொலையில் பெருகாது இங்ஙன்*
*இழிவுதரும் பருவம்அடை தலினால்கீர்*
*ஆதிஐந்தும் ஈயும்தூய*
*அழகிய ஆன்ஊன் அயின்றோன் கீழ்எனமேல்*
*ஆவர் குறைந்து அடைபாவத்தால்*
*முழுமலப் பன்றியை அருந்தும் புலையர் பன்றிக்கு*
*உறும்பருவ முறையின் ஆமால்*

**அசரக் கொலை அதனால் பிழையுறுதல் சரக் கொலையில் பெருகாது சிறிது** - சராசரமெல்லாம் சீவனாதலில் அசரக் கொலையினாலும் பாவம் உண்டென்பது நிச்சயம். பாவம் உண்டாயினும் சரக்கொலையில் பாவம்போல மிகுதியில்லை. கிஞ்சித(சிறிது)பாவம்.

மேல்வினா : சீவன்கள் எல்லாம் சமமாய் இருக்க அசர சீவ கொலையில் பாவம் குறைந்து இருப்பானேன்?

மேல்விடை : **இழிவுதரும் பருவம் அடைதலினால் இங்ஙன்**-அந்த அசரசீவிகள் இங்ஙனம் கூறப்பட்ட எழுவகைத் தோற்றத்துள் (தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம்) தாழ்ந்த பருவத்தினை உடைய ஆதலினால் பாவம் கொஞ்சமே.

மேல்வினா : அப்படிப் பருவத்தினது உயர்ச்சி தாழ்ச்சியால் பாவம் ஏறிக் குறைந்திருப்பதற்குத் திட்டாந்தம் (உதாரணம்) யாது?

மேல்விடை : **கீர் ஆதி ஐந்தும் ஈயும் தூய அழகிய ஆன் ஊன் அயின்றோன் கீழென மேலாவர் குறைந்து அடைபாவத்தால் முழுமலப்பன்றியை அருந்தும் புலையர்-** பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் பஞ்ச கவ்வியங்களையும் உலகின்கண் வழங்காநிற்கும் நிர்மலதேகி (மலமற்றது) என்னும் சிறப்பினை உடைய பசுவினது மாமிசத்தைப் புசித்தோன் தாழ்ந்த குலமாக, அவனினும் உயர்ந்த குலம் என்று சொல்லப்படா நிற்பார்கள் முழுமல தேகியாகிய பன்றி மாமிசத்தைப் புசியா நிற்கும் சண்டாளர். பன்றிக் கொலையால் பாவம் குறைதலின்.

மேல்வினா : பன்றியின் பாவம் குறைய வேண்டியது ஏன்?

மேல்விடை : **பன்றிக்கு உறும் பருவ முறையின் ஆமால்-**பன்றி மிருக வர்க்கத்துள் தாழ்ந்த பருவத்தினை உடையது. ஆகையால் எனக் கொள்க. எ-று.

பசு பஞ்சகவ்வியங்களையும் வழங்கும் நிர்மலதேகி (மாசில்லாத உடல்) என்பதற்குப் பிரமாணம் : **திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்,**

**ஆவினில் ஐந்தும் அமர்ந்தாய் நீயே**
**அளவில் பெருமை உடையாய் நீயே**
**பூவினில் நாற்றமாய் நின்றாய் நீயே**
**போர்க்கோலம் கொண்டுஎயில் எய்தாய் நீயே**
**நாவின் நடுவுரையாய் நின்றாய் நீயே**
**நண்ணி அடிஎன்மேல் வைத்தாய் நீயே**
**தேவர் அறியாத தேவன் நீயே**
**திருவையாறு அகலாத செம்பொன் சோதீ**

*(மே.கோ.பா.கருத்துரை : ஆவினால் பெறப்படும் பஞ்சகவ்வியத்தை விரும்புவர்; அளவில்லாத பெருமை கொண்டவர். பூவினில் விளங்கும் மணம் ஒத்தவர். திரிபுரத்தை எரித்தவர். அறம் பிறழா சொல்லினர். விண்ணவரும் அறியா தேவ தேவர். அடியவனையும் ஒரு பொருட்டாக எண்ணித் தம் சேவடியை வைத்தவர். திருவையாறு அகலாத செம்பொன் சோதியானவர்)*

என்றும், **சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்,**

**மாவை உரித்துஅதள்கொண்டு அங்கம் அணிந்தவனை**
**வஞ்சமனத்து இறையும் நெஞ்சு அணுகாதவனை**

மூவர் உருத் தனதா மூலமுதல் கருவை
    மூசிடுமால் விடையின் பாகனை ஆகம்உறப்
பாவகம் இன்றி மெய்யே பற்றும் அவர்க்கு அமுதைப்
    பால்நறு நெய்தயிர்ஐந்து ஆடு பரம்பரனைக்
காவல் எனக்கு இறைஎன்று எய்துவது என்றுகொலோ
    கார்வயல் சூழ் கானப்பேருறை காளையையே

*(மே.கோ.பா.கருத்துரை : யானைத்தோலைத் போர்த்து உள்ளானை, வஞ்சக மனத்துடையார்பால் சிறிதும் தன் மனத்தால் பொருந்தாதவனை, மூவர் உருவும் தன் உருவாயவனை, மூலமுதற் கருவானவனை, சீறுகின்ற பெரிய இடப வாகனனை, மெய்யாக மனம் பற்றுவார்க்கு அமிழ்தம் ஒத்தானை, ஆனைந்து ஆடுகின்றவன், அழகிய வயல்கள் சூழ்ந்த திருக்கானப்பேர் ஊரிலுள்ள வடிவொத்த காளையை, எனக்குக் காவலாகின்ற இறையை என்று காணப்பெறுவது எந்நாளோ)*

என்றும், **சிவதருமோத்தரம்,**

இங்கும் இன்சுவை ஈயும்இறைஞ் சுவார்க்கு
அங்கும் இன்பம் அடைகைக்கும் காரணம்
பொங்கு தண்புனல் உண்டு புல்தின்றுநல்
மங்கலம் தரும்கோ எனும்வான் பொருள்

*(மே.கோ.பா.கருத்துரை : போற்றுகின்றவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் நன்மைகளை அளிப்பது தெய்வத்தன்மை வாய்ந்த பசுவே ஆகும்)*

என்றும், **சிவஞான தீபம்,**

பொற்பு அமரும் பாற்கடலின் உற்பவமாம் சுரபி
    புகலில்இதன் கோமயத்தில் கூவிளந்தான் உளவாம்
அற்புதமாம் திருமகள்அவ் வில்வம்அதில் பொருந்தும்
    அகில் ஆரம்பளிதம் அளை அதனின் உளவாம்
கற்பம் அருஞ்சுரர் அமுதம் நவநீதத்து உதிக்கும்
    கதிர் உடனே செந்நெல் அதன்பால் அதனில் தோன்றும்
சொற்பயில் குங்குலியமறை உற்பலநீர் அதனில்
    தோன்றியிடும் ரோசனையும் அதன் உதரத்து உதிக்கும்

*(மே.கோ.பா.கருத்துரை : பாற்கடலில் தோன்றிய காமதேனுவின் சாணத்தில் வில்வம் தோன்ற வில்வத்தில் திருமகள் பொருந்தினாள். பயன்தரும் பல்வேறு பொருட்களும் கோரோசனையும் காமதேனுவில்*

*இருந்தே தோன்றின)*

என்றும், **காசி காண்டம்,**

> **ஆன்குளப் படியில் தோன்றும் அருந்துகள் தோயப்பெற்ற**
> **ஊன்பயில் யாக்கை கங்கை தோய்ந்ததாம் மருப்பின்உச்சி**
> **வான்புனல் கடவுள்பேரிஆறு இருக்கும் வான்நிலவுகாலும்**
> **கூன்பிறை முடித்த சென்னிகொம்பிடை வதியும் மாதோ**

*(மே.கோ.பா.கருத்துரை : பசுவின் குளம்படியில் தோன்றும் புழுதியில் படிந்த உடல் கங்கையில் படிந்த தூய்மையைப் பெறும். அதன் கொம்பில் கங்கை தோயும். அதன் கொம்புகளின் இடையில் பிறை சூடி விளங்குவான்)*

என்றும், **பெரியபுராணம்,**

> **சீலமுடைய கோக்குலங்கள் சிறக்கும் தகைமைத்தேவருடன்**
> **காலமுழுதும் உலகுஅனைத்தும் காக்கும் முதற்காரணர்ஆகு**
> **நீலகண்டர் செய்யசடை நிருத்தர் சாத்து நீறுதரு**
> **மூல அவதாரம் செயும் மூர்த்தம் என்றான் முடிவு என்னோ**

*(மே.கோ.பா.கருத்துரை : தேவர்களையும் பிற உயிர்களையும் காக்கும் சிவபெருமான் விரும்பி அணியும் திருநீற்றை ஆக்குவதற்குரிய சாணத்தைத் தருவதால் பசுக்கூட்டங்கள் சொல்லற்கரிய சிறப்போடு விளங்குகின்றன)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

பன்றி முழுமலதேகி என்பதற்குப் பிரமாணம்:

> **ஏறாத மேட்டுக்கு இரண்டு துலைஇட்டால்போல்**
> **பேறாய் ஏணங்கோழிப் பேர்இட்டு - மாறாத**
> **புன்மக்கள் வாயில் புலையர் மலம்இறைக்க**
> **நன்மக்கள் கண்டு நகும்.**

*(மே.கோ.பா.கருத்துரை : இரண்டு ஏற்றங்களில் நீர் இறைத்தாலும் மேட்டு நிலத்தில் அந்நீர் ஏறாது. அதுபோல வாரணம் என்னும் யானைக்குரிய பெயரை புன்மக்கள் மலம் தின்னும் பன்றிக்கும் கோழிக்கும் இட்டு அவற்றைத் தின்றாலும் அவர்களைக் கண்டு பெரியோர் நகைப்பர்)*
என்றும்,

> **பன்றிதுன்மலம் உண்டால்என் பரந்துறாது உடலம்எங்கும்**
> **என்று இருந்தனையோ பேதாய்! இளைத்தது பருக்குமாறு ஏன்**

அன்றியும் நோயர் ஊண்ஆல்அபத்தியம் அடையக் கண்டும்
உன்தனுள் உணராய் நாளும் உண்டனை மலம் மீது உண்மை

*(மே.கோ.பா.கருத்துரை : பன்றி மலத்தை உண்டால் அது உடல் முழுதும் பரவாது என்று நினைப்பது பேதமை. ஏனெனில் இளைத்த பன்றி மலம் தின்ற பிறகு பருத்தே அது உடல் முழுவதும் பரவி உள்ளது என்பதற்குச் சான்றாகும்)*

என்றும்,

அசுத்த மாம்மலத்தையே தின்று அவற்றினால் உடலம் தாங்கும்
அசுத்தமாம் பன்றிஆதி அருந்திமா நரகத்து ஆழும்
அசுத்தரும் சுத்தர்போல அருவருப்பு உடையராகி
அசுத்தமா நிலத்தில் கீரைஆதி தீது என்பது என்னோ

*(மே.கோ.பா.கருத்துரை : அசுத்தமான மலத்தை உண்டு அதனாலேயே உடம்பை வளர்த்த பன்றி முதலியவற்றைத் தின்று நரகத்திற்குச் செல்லும் தீயோர் அசுத்தமான இடத்தில் விளைந்த கீரை முதலியவற்றைக் கண்டு அருவருப்பு அடைவது ஏனோ?)*

என்றும்,

கூறுநாய் கழுதை பன்றி கோழியும் மலத்தைத் தின்னும்
வீறுடன் கழுதை நாயை விரும்பியே தின்னாது என்கொல்
தேறியே தெளிந்து பார்க்கில் தீதான மலமாம் எல்லாம்
வேறும்ஓர் நரகத்து எல்லை விதிக்கவும் இவர்க்கு வேண்டாம்

*(மே.கோ.பா.கருத்துரை : நாயைக், கழுதையைத் தின்னாதது ஏன்? இவற்றை ஆராய்ந்து பார்த்தால் மலம் உண்ணும் தீயவர்களுக்கு வேறோர் நரகமும் விதிக்க வேண்டவது இல்லை)*

என்றும்,

தம்மினும் உயர்ந்தோர் கீழோர் தமதுஇலத்து அறல்உண்டாரேல்
அம்ம அங்கு அவரும் கீழ் என்று அவர்மனைப் புனலும் உண்ணா
இம்மனிதர்கள்தாம் சீச்சீ ஈனர்தம் மலத்தை உண்டு
விம்முஉடல் பன்றிஆதி விரும்பிஉண்டு உவப்பது என்னோ

*(மே.கோ.பா.கருத்துரை : மேல்சாதியினர் கீழ் சாதியினர் வீட்டில் தண்ணீர் குடித்தால் அவரும் கீழ் சாதியினர் என்று ஒதுக்கும் மனிதர்கள்*

*அக்கீழ்சாதியினர் மலத்தை உண்ணும் பன்றியை விரும்பி உண்பது ஏனோ?)*

என்றும் வருவனவற்றால் காண்க.

பன்றியாதிகளை உண்டோரும் புலையர் என்பதற்குப் பிரமாணம் : திருவள்ளுவர்,

**கொலைவினையர் ஆகிய மாக்கள் புலைவினையர்**
**புன்மை தெரிவார் அகத்து**

*(மே.பா.குறிப்புரை: கொலைத்தொழில் செய்யும் மக்கள் அதன் இழிவை ஆராய்ந்தவரிடத்தில் புலைத்தொழிலுடையவராய்த் தாழ்ந்து தோன்றுவர்)*

என்றும், சிவவாக்கியர்,

**புலையரைப் புலையர் என்னும் புத்திஅற்ற மாந்தரே**
**புலையனார் மலம்புசிக்க நாடுமீது புத்தியோ**
**புலையருக்குள் ஒக்கும் உம்மை என்றுஉரைத்த புல்லரும்**
**புலையர்ஆகி நரகினுள் புகுவர் ஐயர் ஆணையே**

*(மே.கோ.பா.கருத்துரை :மனிதர்களில் சிலரைப் புலையர் என்று ஒதுக்கி அப்புலையர் மலம் புசிக்கும் பன்றியை உண்ணும் இழிந்தவர்கள் புலையராகி நரகம் புகுவர் என்பது திண்ணம்)*

என்றும்,

**ஈவானே தெய்வம் இரப்பே இழிவு** *வரவு என்று*
**ஆய்வானே நூலின்பயன் அறிவான் - பேய்வாழும்**
**காடே கரப்பவர் தம்இல்லம் கடும்புலையன்**
**வீடே விடக்கு உண்பான் வீடு**

*(மே.கோ.பா.கருத்துரை : ஈபவனே தெய்வம்; இரத்தலே இழிவு என்று ஆராய்பவன் நூலின் பயன் அறிந்தவன். பிறருக்கு இல்லை என்று கரப்பவர் வீடே காடு; புலால் உண்பவன் வீடே புலையன் வீடு)*

என்றும்,

**பறையரைப் பறையர் என்று பறைந்திடு மனிதர் கேளீர்**
**பறையர்தம் மலத்தைத்தின்ற பன்றியைப் புசிப்பது என்னோ**
**கறையதே ஆகும் அந்தக் கறிதனைக் கலத்தின் இட்டு**
**மறையவே வைத்துத் தின்னும் மனிதரே பறையர் கண்டீர்**

*(மே.கோ.பா.கருத்துரை : பறையர் மலம் உண்ணும் பன்றியைத் தின்றுவிட்டுப் பறையரை இழிவானவர்கள் என்று கூறும் மனிதர்களே பறையர்கள் ஆவர்)*

என்றும்,

புலை என்னும் புலைதீரப் புனல் என்னும் புனல் மூழ்கி
அலைகின்ற முழுமூடர் அறிவுஎன்ன அறிவுஎன்ன
புலையன்தன் மலம்உண்ணும் எமைஉண்ணும் புலையர்க்குக்
குலம் என்ன நலம்என்ன கூகூஎன்றனகோழி

*(மே.கோ.பா.கருத்துரை : புலையன் மீது பட்டாலும் நீராடும் மூடர்கள், புலையன் மலம் உண்ணும் எம்மை உண்டுவிட்டுக் குலம் பற்றிப் பேசுவது என்னே என்று கோழிகள் கூவுகின்றன)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

பன்றி மிருகவர்க்கத்துள் தாழ்ந்த பருவத்தினையுடையது என்பதற்குப் பிரமாணம் : திருவிளையாடல்,

அன்றியும் பெருமைமிக்க அலகில் யோனிகளில் தோயாது
என்றும் மேலாக ஓங்கும் தலைவ!நீ இழிந்த பொல்லாப்
பன்றியும் நாற்காலுள்ள பல்பெரும் சாதிக்கெல்லாம்
ஒன்றிய கடையது அன்றோ உளத்துஇடை ஒருங்காலே

*(மே.கோ.பா.கருத்துரை : எண்ணற்ற பிறப்புக்களில் சேராது மேம்பட்டு விளங்கும் பெருமானே! நீ நாற்கால் விலங்குகளில் கடையான பன்றியின் வடிவத்தைத் தாங்கி குட்டிகளுக்குப் பால் கொடுத்தது என்னே?)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இ·து. சராசரபேதம் உணர்த்துவான் பருவத்தால் பசு உயர்ந்தது என்றும், பன்றி தாழ்ந்தது என்றும் கூறியது. இப்படிக்கூறிய சைவ சித்தாந்தியை நோக்கிப் பின்னும் வாமி கூறகின்றான்.

பசுவும் பன்றியும் மிருகசாதிய அபேதமாய் (வேற்றுமையின்மை) இருக்கப் உடல் பேதம் வருவானேன் என்ற அளவில் அவனை நோக்கி மேலுத்தரம் கூறுகின்றார்.

முறைமைதெரி அந்தணரும் புலையருமா
னுடரெனலின் மொழிந்த வானுஞ்
செறிமலப்பன் றியுமிருக மெனப்படுமாங்கு
அவர் கொலையிற் றிகழா நிற்கு
நிறைவினோடு குறைவெனவான் பன்றியிவற்று
அருங்கொலைக்க ணிகழும் பாவம்
அறிஞரிவை யெனக்கொலைமை யசரமதிற்
குறைதருமென் றறைவ ரன்றே (9)

*முறைமைதெரி அந்தணரும் புலையரும்*
*மானுடர் எனலின் மொழிந்த ஆனும்*
*செறிமலப் பன்றியும் மிருகம் எனப்படும் ஆங்கு*
*அவர் கொலையில் திகழா நிற்கும்*
*நிறைவினோடு குறைவுஎன ஆன்பன்றி இவற்று*
*அருங்கொலைக் கண்நிகழும் பாவம்*
*அறிஞர்இவை எனக் கொலைமை அசரம் அதில்*
*குறைதரும் என்று அறைவர் அன்றே*

**முறைமைதெரி அந்தணரும் புலையரும் மானுடர் எனலின் மொழிந்த ஆனும் செறிமலப் பன்றியும் மிருகம் எனப்படும்** - வேதாகம விதிகளை அறிந்த அந்தணரும் அவைகளை அறியாத புலையரும் மனிதஇனம் என்று சொல்லப்படுதல்போல முற்கூறிய நிருமல (தூயது) தேகி (உயிர்) யாகிய பசுவும், சமலதேகியாகிய (தூய்மையில்லாதது) பன்றியும் மிருகஇனம் என்று சொல்லப்படும். **பாவம் ஆங்கு அவர் கொலையில் திகழா நிற்கும் நிறைவினோடு குறைவு என ஆன் பன்றி இவற்று அருங்கொலைக்கண் நிகழும்** - இங்ஙனம் பாவமானது மனிதக் கொலைகளுள் பிரமக் கொலையிலே ஏறியும், நீசக் கொலையிலே குறைந்தும் இருத்தல் போல, மிருகங்களுள் பசுக்கொலையில் ஏறியும், பன்றிக்கொலையிலே குறைந்தும் இருக்கும் எனக் கொள்க. **இவையென அசரமதில் கொலைமை குறைதரும் என்று அறிஞர் அறைவர்** - இத்தன்மை போலச் சரக்கொலையிலே பாவம் ஏறியும், அசரக்கொலையிலே குறைந்தும் இருக்கும் என்று சொல்லுவர் அறிவுடையோர். எ-று.

அந்தணரும் பசுவும் உயர்ந்த பருவத்தினையுடைய என்பதற்குப் பிரமாணம் : **சிவதருமோத்தரம்,**

அரன்ஆதி ஒருமூவர் அமரேசர் மருமானும்
ஒருவாமல் உறைவார்கள் உமைஆதி மடவாரும்

அரிதாய மறையோர்கள் உடல்ஆவி உடன் ஆர்வம்
ஒருவாது வழிபாடு புரிவார்கள் உயர்வாரே

*(மே.கோ.பா.கருத்துரை : பசுவின் உடலில் சிவபெருமான் முதலிய எல்லாத் தெய்வங்களும் உறைவர். எனவே அதை வழிபடுவோர் நலம் பெறுவர்)*

என்றும், காசிகாண்டம்,

உறுபுலன் அடக்கிவேத நெறிவழி ஒழுகிநின்ற
அறுதொழிலோரும் ஆனும் குலம் ஒன்றாம் அவருள் ஆய்ந்து
மறுவறு மறையோர் தம்பால் மந்திரம் அனைத்தும் வைத்தேன்
தொறுவிடை அவிகளியாவும் தோமறத் தொகுத்து வைத்தேன்

*(மே.கோ.பா.கருத்துரை : அந்தணரும் பசுக்களும் ஒரே குலம். அந்தணரிடத்தில் வேதங்களையும், பசுக்களினிடத்தில் அவிசொரிவதற்கு உரியவற்றையும் வைத்தோம்)*

என்றும் வருவனவற்றால் காண்க.

இ·து. பிரமகத்தியில் (அந்தணக் கொலை), கோகத்தியில் (பசுக்கொலை) பாவம் ஏறியும், நீசக் கொலையில் பாவம் குறைந்தும் இருத்தல் போலப் பருவபேதத்தால் சரக்கொலையில் பாவம் குறைந்தும் இருக்கும் என்று சாதித்தது.

பின்னும் வாமியை நோக்கி அசரக்கொலையில் பாவம் குறையும் என்பதற்கு மேலும் ஓர் உத்தரம் வலியுறுத்திக் கூறுகின்றார்.

அன்றியுந்தா வரவுருவஞ் சரமதுபோற்
குறைப்பினுயி ரகலா பாவங்
குன்றியுற லுண்மையவை குருவாதிக்
களித்துணவக் கொலைமை தன்னோ(டு)
ஒன்றியுழ வாதியிற்சார் பாவமுந்தேய்ந்
தழியுமன் னோர்க்கூட் டொணாதூன்
நன்றறிகண் ணப்பரினம் பனைச்செருப்பா
லுதைப்பதெவ னலமில் லோயே. (10)

*அன்றியும் தாவர உருவம் சரமதுபோல்*
*குறைப்பின் உயிர்அகலா பாவம்*
*குன்றிஉறல் உண்மைஅவை குருஆதிக்கு*
*அளித்து உணஅக் கொலைமை தன்னோடு*
*ஒன்றிஉழவு ஆதியில்சார் பாவமும் தேய்ந்து*
*அழியும் அன்னோர்க்கு ஊட்டு ஒணாது ஊன்*
*நன்றுஅறி கண்ணப்பரின் நம்பனைச் செருப்பால்*
*உதைப்பது எவன்நலம் இல்லோயே*

**அன்றியும் தாவர உருவம் சரமதுபோல் குறைப்பின் உயிர் அகலா பாவம் குன்றி உறல் உண்மை**-தாழ்ந்த பருவத்தினாலே அசரக்கொலையிற் பாவம் குறைந்திருக்கும் என்பது அன்றியும் பின்னும் ஒருவிதத்தானும் அக்கொலையில் பாவம்குறையும் என்று கூறப்படும். அது எதனால் என்னில், அசர வடிவங்களானவை சரவடிவங்களைப் போலக் குறைக் கருவிகொண்டு குறைக்குமிடத்து நாசத்தை அடையாது பின்னும் கிளைத்து எழுதலானும், தறித்த கோட்டினை மற்றோர் இடத்தில் வைக்க அதுவும் தளிர்த்தலானும், அக்கொலையால் வரும் பாவம் சரக் கொலையிற் போலாது குறையும் என்பதே சத்தியம்.

இதற்குப் பிரமாணம் : புலான் மறுத்தல்.

**மரக்கோட்டைக் காதிவந்து வைத்தான் மரமும்**
**மரக்கோடும் தான்இரண்டாய் வாழும் - சரிக்கின்ற**
**ஓர்உயிரின் கால்வாங்கி ஓரிடத்தே வைத்தால் மற்று**
**ஈர்உயிர்தான் ஆமோ இயம்பு**

*(மே.கோ.பா.கருத்துரை : ஒரு மரத்தின் கொம்பை வெட்டி ஓரிடத்தில் நட்டால் மரம் தனியாகவும், மரக்கோடு தனியாகவும் வளரும். வெட்டப்பட்ட ஓர் உயிரினது காலை எடுத்து ஓரிடத்தில் வைத்தால் அவை இரண்டு உயிர்களாக மாறுமோ?)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா : அப்படி அசரக்கொலையால் பாவம் அற்பமாய் வரினும் நாள்தோறும் வந்து கூடுதலால் சரீராந்தத்தில் (இறந்தபின்) அநேகமாகச் சுமக்கும். அஃது அன்றியும், அசர முயற்சியால் உண்டாகும் சரக்கொலைகளும் அனந்தமாதலின் (அளவற்றவை), அவற்றினது பலத்தினை நீர் அனுபவியாது நீக்குமாறு எங்ஙனம்?

மேல்விடை : **அவை குருவாதிக்கு அளித்து உண அக்கொலைமை தன்னோடு ஒன்றி உழவு ஆதியில் சார்பாவமும் தேய்ந்து அழியும்.**

- ஒரு விவேகியானவன் அசர பதார்த்தங்களை வேதாகமங்களில் இல்லறத்திற்கு ஓதிய தருமம் வழுவாமல் தேவர், அதிதி, அனல், தேசிகர் என்னும் நால்வகையோர்க்கும் முன் ஊட்டிப் பின் உண்பான் ஆகில், அன்னம், காய், தழை முதலிய அசரக் கொலையால் வரும் தோடமும் அற்று, உழுதல், கூலிவேலைசெய்தல், வாணிகம் செய்தல், சினம் மிகுத்தல், அசத்தியம் கூறல், வீடுதூர்த்தல், மெழுகுதல், நெருப்பு மூட்டல், தண்ணீர் கவர்தல், நெல் குத்துதல் என்பன கூடப் பத்து விதத்தான் வரும். அவ்வக் காலத்தில் நட்டம் ஆதலின், அவனக்குச் சரீராந்தத்தில் சுமக்கும் பாவமே இல்லை.

இதற்கு பிராமணம் : **சைவ சமய நெறி.**

**தேவர் அதிதியன் தேசிகர்க்கு என்று அட்டஅனம்**
**தேவர் உலகத்தில் அமிர்து என்**

*(மே.கோ.பா.கருத்துரை : தேவர்கள், முன்பின்ற அறியாது வந்தவர், ஆசான் ஆகியோர்களுக்குச் சமைத்த உணவு தேவர் உலகில் அமிழ்து போன்றது)*

என்றும், **சிவதருமோத்தரம்,**

**தலத்துஉழல் கூலிவேலை சந்தையில் கொண்டுவிற்கை**
**குலைத்தசொல் கூட்டும்கோபம் அசத்தியம் கூறல்உள்ளும்**
**அலக்குஇடன் மெழுகல் அங்கிஆக்கின் நீர் அரிசி என்றே**
**இலக்கணத்து இயம்பும்பத்தும் தமக்குஎனில் பாவம் ஈட்டும்**

*(மே.கோ.பா.கருத்துரை : உழுதல், கூலிவேலை செய்தல், சந்தையில் பொருள்களை விற்றல், பொய் சொல்லல், சினம் கொள்ளுதல், வீடு பெருக்கல், மெழுகுதல், நெருப்பு மூட்டல், தண்ணீர் இறைத்தல், நெல் குத்துதல் என்று சொல்லப்படும் பத்தும் தமக்காகச் செய்கையில் பாவத்தைத் தரும்)*

அன்றியும்

**தேசுறு சிவஆதிபூசைக்கு எனஇவை தம்மைச் செய்யின்**
**நாசமாம் பாவபேதம் தம்மையே நாடிச் செய்யின்**

பாசமா நரகபேதப் படுகுழிப் படுத்தி என்றும்
ஊசல்போல் உழல்வித்து ஆக்கும் துயரினுக்கு அளவும் உண்டோ.

*(மே.கோ.பா.கருத்துரை : பெருமைமிக்க சிவபூசை போன்றவற்றிற்கு மேற்சொன்ன பத்தையும் செய்தால் பாவம் அழிந்து போகும். அவ்வாறு இல்லாமல் தமக்காகச் செய்யின் நரகம் என்ற படுகுழியில் மிக்க துயரினை அடையச் செய்யும்)*

அன்றியும்,

அட்டவை தம்மைச்சொன்ன நால்வரும் அருந்த அவன்பால்
இட்டுமிக்கு அதனை உண்கை அமுதம் ஈயாதே உண்கை
கட்டமும் கடுவும் ஆவிகழிந்த ஊன்காயம் தானும்
ஒட்டியே உடலில் தோன்றும் புழுவும் என்று ஒழிக ஓர்த்தே

*(மே.கோ.பா.கருத்துரை : சமைத்தவற்றைத் தெய்வம், விருந்து, வேள்வித்தீ, குரு என்பவருக்குப் படைத்துவிட்டு உண்டால் அது அமுதம். அவர்களுக்கு ஈயாது உண்பது விடம், பிணம், புழு இவற்றை உண்பதற்கு நிகராகும்)*

அன்றியும்,

இறவாதே இருக்கச் செய்யும் மருந்து யாதேஎனினும் இல்லகத்துத்
துறவாது இருந்தார் மூவரொடும் துய்த்தல்கடனே துய்க்குற்றுப்
பிறர்சொல் பழியும் பேணாதே பெரியோர் தமக்குக் காணாதே
சிறிதும் இரக்கம் செய்யாதே தானேஅருந்தும் சிதடனுமே.

*(மே.கோ.பா.கருத்துரை : அமுதமாயினும் இல்வாழ்வான் இயல்புடைய மூவரோடு உண்பது கடமையாகும். அவ்வாறன்றி பழியைப் பொருட்படுத்தாது பெரியோர் காணாதவாறு தானே அருந்துபவன் இழிந்தவன் ஆவான்)*

என்றும், **காசி கண்டம்,**

தேவர்தென் புலத்தோர் துறந்தவர்க்கு அளித்த
சேடநல் அமிர்தினும் இனிதாம்
யாவரே எனினும் அதிதிஅரி இறந்தோர்
இமையவர் இங்கு இவர்க்கு இன்றிக்
கூவல்போல் ஆழ்ந்த பாழ்வயிறு அதனில்
கொட்டுதற்கு அமைத்த வெண்சோறு

நாவுறை புழுவாம் எனமறை அனைத்து
நவின்றிடும் என்பர் நன்கு உணர்ந்தோர்

*(மே.கோ.பா.கருத்துரை :தேவர், தென்புலத்தோர், துறந்தவர்க்கு இட்டபின் உண்ணும் உணவு அமுதமாகும். விருந்தினர், துறவிகள், தெய்வம் ஆகியோர்க்குப் படைக்காமல் உண்ணும் உணவு புழுவுக்கு நிகராகும்)*

அன்றியும்,

உம்பர்வேதியர் விருந்தினரை ஊட்டி நுகரார்
தம்பசிக் கனல்தணிப்ப நனிதுய்த்த இவரை
வெம்புகண்டு தகர்உளத்தின் மிகவெம்மை புரியும்
கும்பிபாக நரகத்திடை குளிப்ப எறிவாய்

*(மே.கோ.பா.கருத்துரை : தேவர், அந்தணர், விருந்தினரை ஊட்டாமல் உண்போரைக் கும்பிபாகம் எனும் நரகத்தில் எம தூதர்கள் செலுத்துவர்)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா : இம்முறைமை புலால் நிவேதித்தால் குருவாதிக்கு அர்ப்பிதமாகாதோ?

மேல்விடை : **அன்னோர்க்கு ஊன் ஊட்ட ஒணாது**- எ.து. குருவாதி நால்வர்க்கும் புலாலை நிவேதிக்க ஒண்ணாமையின், அது செய்தலில் சரக்கொலைமை நீங்குதல் கூடாது. அஃது என்போல் எனில், ஒருவன் ஒரு குற்றம் செய்து அக்குற்றத்தை நீக்கும் பொருட்டு இராசாவைப் பிரார்த்திக்கச் செல்லுமளவில் அந்த அரசனுக்குப் பிரீதியில்லாத (விருப்பம்) காரியத்தைச் செய்துகொண்டு போனானே ஆகில்,முன்பு அவன்செய்த குற்றமும் தீராது பின்பும் தண்டிக்கப்படுவான். அதுபோலப் பிரீதியில்லாத புலாலை ஈசுரர் ஆதி தேவதைகளுக்கு நிவேதித்தால் சரக்கொலையும் தீராமல் அநார்ப்பிதமாதலின் (படைக்கத் தகாதது) அதிபாதகமும் வரும்.

மேல்வினா : மாமிசம் ஈசுரப்பிரீதியன்று என்பது கூடாது. முன்பு கண்ணப்பர் நிவேதித்திருத்தலின்.

மேல்விடை : **நன்று அறி கண்ணப்பரின் நம்பனைச் செருப்பால் உதைப்பது எவன் நலம் இல்லோயே.** எ.து. கண்ணப்பர் மாமிசம் இட்டு முத்தி பெற்றார் என்பது சத்தியம். அதுபோலப் பிறரும்

புலாலை நிவேதித்தல்கூடாது. அது ஏனெனில்,கண்ணப்பர் பூர்வ சன்மத்தில் செய்த தபோபலத்தினாலே (தவப்பயன்) ஒருகாலத்தில் காளத்தி ஈசுரரைக் கண்டமாத்திரத்திலே பேயின்கண் பிடியுண்டான் ஒருவனுக்கு அவனது சரித்திரம் பேயின் சரித்திரமாகி நின்றது போலக் கண்ணப்பருடைய சரித்திரம் எல்லாம் காளத்தி ஈசுரருடைய சரித்திரமாக நிற்றலால், அவர்க்கு மோட்சம் கை கூடிற்று. அவர் உன்னைப்போல ஓர் ஆசாரியானை அடைந்து இது பாவம், இது புண்ணியம், இது செய்யலாம், இது செய்யலாகாது என்று ஒருகாலும் கேட்டறிந்தவரும் அல்லர் ; அவர் முன்பு பழகியிருந்த பழக்கத்தைப் பின்னும் பக்தி மிகுதியினால் செய்தனர். அவர்போல ஒருவன் ஈசுரனுக்கு புலால் நிவேதிப்பானாகில், வாய்நீரால் அபிடேகம் பண்ணிச் செருப்புக்காலால் உதைப்பதும் செய்யவேண்டும். அப்படியும் செய்யலாம் என்று ஒருவன் நினைத்தானாகில் அவன் போய்விழும் நரகத்திலே பின் வீழ்வார் ஒருவரும் இல்லை. ஆதலின் கண்ணப்பருடைய பத்தியை நீ விதியென்று பிரமாணித்தல் (சான்றாகக் காட்டுதல்) கூடாது. மிகுதியும் நல்லறிவு அடையாத தீயோனே. எ,று.

இ-து.எவ்விதத்தானும் அசரக் கொலையில் பாவம் குறையும் என்றும், அக்கொலைமையும் ஈசுராதி பூசையாலே கெடும் என்றும், புலால் நிவேதித்தல் அவர்களுக்கு ஆகாது என்றும், கண்ணப்பர் செயல் பத்தி என்றும் கூறியது.

பின்னும் வாமியை நோக்கிப் பத்திமார்க்கத்தை விதிபோலப் பின்பற்றக் கூடாது என்று மேலும் வலியுறுத்திக் கூறுகின்றார்.

நலந்தருதா தையைவதைத்து முத்திபெற்றோ
ருளரெனிலிஞ் ஞாலத் தூடே
கலந்துமுத்தி யடையுநர்க்கெல் லாமதுவோ
கதியுலகங் கடந்த பத்தி
வலந்தனைநீ விதியெனக் கூறுதல் பழுதூன்
றனையிமய வரைமா துக்கிந்
நிலந்தனிற்பத் திரைமுதலாஞ் சத்திகட்கும்
வரைவெனனீ நிகழ்த்த றீதே. (11)

*நலம்தரும் தாதையை வதைத்து முத்திபெற்றோர்*
*உளர்எனில் இஞ்ஞாலத்து ஊடே*
*கலந்து முத்தி அடையுநர்க்கு எல்லாம் அதுவோ*
*கதிஉலகம் கடந்த பத்தி*

*வலந்தனை நீ விதி எனக் கூறுதல் பழுதுஊன்*
*தனை இமயவரை மாதுக்குஇந்*
*நிலந்தனில் பத்திரை முதலாம் சத்திகட்கும்*
*வரைவு எனல்நீ நிகழ்த்தல் தீதே*

**நலந்தரு தாதையை வதைத்து முத்திபெற்றோர் உளரெனில் இஞ்ஞாலத்தூடே கலந்துமுத்தி அடையுநர்க்கு எல்லாம் அதுவோ கதி உலகங்கடந்த பத்திவலந்தனை நீ விதி எனக் கூறுதல் பழுது** - உலகத்தின்கண் ஓர் ஒருவர் பத்தி மிகுதியால் செய்த சரித்திரங்களை நீ விதியென்று ஒருகாலும் பிராமாணித்தல் கூடாது. அது ஏது என்னில் சண்டேசுர நாயனார் பிதாவைக்கொன்று முத்தி அடைந்தார் என்றும், சிறுத்தொண்ட நாயனார் பிள்ளையை அறுத்து முத்தி அடைந்தார் என்றும், அதுவே வழியாகப் பிறரும் பிதாவைக் கொன்றும் பிள்ளையைக் கொன்றும் முத்தி அடைவார் இல்லை. அப்படிப்போல இப்பொழுதும் ஒருவனுக்கு மிகுந்த பத்தி வந்தது ஆயினும், விசேடித்து ஒரு கருமத்தைச் செய்வது ஒழித்து முன் ஒருவர் பத்திமையால் செய்தபடி தானும் செய்யவேண்டும் என்பது இல்லை. பின் ஒருவன் முன்னோர் சரித்திரத்தைப் பிரமாணித்தல் கூடாது. மேலும், விதிமார்க்கத்தை ஒழிந்து பத்தி மார்க்கத்தை ஒருகாலும் பிரமாணிக்க ஒண்ணாது. அது எப்படியென்னில், ஓர் ஏரியின் கண்ணே மிகுந்த வெள்ளமானது ஒருகாலையில் நடுவே முறித்துக் கொண்டு சென்றதாயின், அதுவே ஏரிக்குக் கலிங்கு (மதகு - நீர் போதல்) என்று விடுவாரில்லை. ஏரியின் கடையில் கலிங்கு விடுவதே உண்மை. அதுபோலக் கண்ணப்ப நாயனார் முதலாயினோர் செய்த உலகாதீதமாய (உலக இயல்புக்கு அப்பாற்பட்ட) சிவானுக்கிரக வலியினை உடைய மிகுந்த பக்தியை நாளும் விதி என்று கொண்டு ஈசுரனுக்கு நீ புலால் நிவேதிப்பல் என்பது மிகுந்த குற்றம் என்று அறிவாயாக.

இதற்குப் பிரமாணம் :

வெள்ளமிகுத்து ஏரிநடுவு உடைத்து
ஓடின்அது கலிங்காய் விடுகிலார் அப்
பள்ளம் அடைத்து இருபுறத்தும் கடை
விடுவர் உலகோர் அப்பரிசு போல
உள்ளமிகுத்து அறிவுஎழலால் பத்திமிகுத்
தமையான் ஒன்று ஒருவர் செய்யின்
தெள்உணர்வோர் அதனை விதிஎன்று பின்னும்
புரிகுவரோ தெளிவிலோயே

*(மிகுதியான வெள்ளப்பெருக்கால் ஏரியானது கரையின் நடுவில் உடைத்துக் கொண்டு ஓடினால் அதையே மதகாக ஆக்கி விடுவாரல்லர் உலகோர். பெரிய பள்ளத்தை அடைத்து ஏரியின் இறுதியில் நீர்க்கடவு அமைப்பர். அதுபோல அறிவின் எழுச்சியால் உள்ளத்தில் பக்தி மிகுந்து ஒருவர் உலக நடைமுறைக்கு அப்பாற்பட்ட ஒன்று செய்தால் தெளிந்த அறிவுடையோர் அதனை விதி என்று கொண்டு மேலும் அதைச் செய்யார் )*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா : ஈசுரனுக்கு புலாலை நிவேதித்தற்கு விதி இல்லை என்பது கூடாது. ஈசுராபின்னமாகிய (பரமேசுவரனுடன் ஐக்கியமாயிருக்கும்) உமா பரமேசுவரிக்குப் பிரீதி (விருப்பம்) ஆகையா ல்.

மேல்விடை : **இந்நிலம் தன்னில் பத்திரை (காளி) முதலாம் சத்திகட்கும் வரைவு எனின் இமயவரை மாதுக்கு நீ ஊன்தனை நிகழ்தல் தீதே** - தம்பனம் (அசையாது இருத்தல்), மோகனம் (மயக்குதல்), உச்சாடனம் (ஏவுதல்), வசியம் (வயப்படுத்துதல்), ஆகருடனம்(வரவழைத்தல்), வித்துவேடணம் (விரோதித்தல்), பந்தனம் ( கட்டுதல்), மாரணம் (கொல்லுதல்) என்று சொல்லப்பட்ட அட்ட (எட்டு) கன்மங்களையும் குறித்து இந்நிலத்தின்கண் பத்திரை (பரமேசுவரியின் பணிப்பெண்கள்) யாதிய அனந்த சக்திகளில் ஒவ்வொரு சக்திகளை அர்ச்சிப்போரும் அச்சக்திகட்கு புலால் நிவேதித்தல் அயோக்கியம் ஆதலின் அவர்கட்குச் செய்யும் முறைமையே சுத்தோபசாரம் செய்து அச்சக்திகளது பரிசாரக பேதமாகிய (உதவியாளர்) பைசாசங்கட்கு மது புலாலை நிவேதிப்பார்கள். ஆதலின், எல்லாச் சக்திகட்கும் காரணமாய் உலகத்தின்கண் உயிர்களையெல்லாம் வளர்ப்பனவாகிய முப்பத்திரண்டு அறங்களையும் வளர்க்கும் பேரருளினையுடைய உமாபரமேசுவரிக்கு நீ புலால் நிவேதிக்கலாம் என்று சொன்னவார்த்தையே அதிபாதகம், எ.று.

இதற்குப் பிரமாணம்,

மண்டலத்தும் காளிமுதல் சத்திகள்
தேவர்கள் எவர்க்கும் வழங்குறாஊன்
அண்டி இருந்துள பூதபிசாசங்கட்கு
அளித்திடுவர். அதனை நீயும்
கண்டிருந்து உமைக்கு உரைத்தாய் அதிபாவம்
எண்கருமம் கருதினோர் ஊன்

கொண்டுஅவண் சூழ் பூதாதிக்கு இடுவர் அன்றிச்
சத்திகள்பால் குறுகார் அன்றே

*(மே.கோ.பா.கருத்துரை :உலகிலுள்ள காளிமுதலாய சக்திகள் மற்றும் தேவர்கள் யாருக்கும் வழங்கப்படாத ஊனை அத்தெய்வங்களை அண்டி வாழும் பூத பிசாசுகளுக்கு அளித்திடுவர். அதனை நீ கண்டிருந்தும் உமைக்கும் படைக்கலாம் என்று சொன்னது அதிபாதகம். எண்கருமம் கருதியவர்கள் ஊனைச் சத்திக்குப் படைக்கார்)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இ·து· பக்தி மார்க்கத்தை விதிமார்க்கம் போல நெறியாகக் கொள்ளொணாது என்றும், சக்தி பூசைக்கு புலால் நிவேதனம் அயோக்கியம் என்றும் கூறியது.

இப்படிக்கூறிய சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னும் வாமி கூறுகின்றான்.

புலால் நிவேதனம் சத்திகட்கு அர்ப்பிதமாகாவிடினும் (படைக்கத்தக்கது) அச்சத்திகளது பரிசாரக பைசாசங்கட்கு (வேலையாட்களாகிய) இடுதலினாலும் சரக்கொலைமை நீங்கும். எந்தக் குயவன் சுடினும் பானை வேகல் பிரமாணம் போலும் என்றாயாகில், அது கூடாது என்று மேல் உத்தரம் கூறுகின்றார்.

தீதிலசத் திகட்சூழ்ந்தோர் இடுமூனாண்
டமரரன்றிச் செறிபூ தாதிக்கு
ஆதலின்மற் றவையுணலா னகலினுமக்
கொலைமைமுழு தகன்றி டாவான்
மீதலத்து மசுரரிராக் கதருமுண்ப
ரூனதனை விரும்பா ரென்றுஞ்
சோதிமணி முடியமுதா சனார்சுரத்தன்
மையினாற்பூ சுரரைப் போலும். (12)

*தீதில சத்திகள் சூழ்ந்தோர் இடும்ஊன் ஆண்டு*
*அமரர் அன்றிச் செறிபூதாதிக்கு*
*ஆதலின் மற்றுஅவை உணலான் அகலினும் அக்*
*கொலைமை முழுது அகன்றிடாவால்*
*மீதலத்தும் அசுரர் இராக்கதரும் ஊன்உண்பர்*
*ஊன்அதனை விரும்பார் என்றும்*

*சோதிமணிமுடி அமுதாசனர் சுரத்தன்மை*
*யினால் பூசுரரைப் போலும்*

***தீதிலசத்திகள் சூழ்ந்தோர் இடும் ஊன் ஆண்டு அமரர் இன்றிச் செறிபூதாதிக்கு ஆதலின் மற்றவை உணலான் அகலினும் அக்கொலைமை முழுது அதன்றிடாவால்*** - குற்றமற்ற பத்திரையாதி சக்திகளிடத்து அட்டகன்மங்களைப் பெறுவோர்கள். அவரது சமூகத்துள்ள தேவகணங்களுக்கு அன்றிப் பூத பைசாசங்கட்கு மாமிசம் நிவேதிப்பது உண்டாகி இருத்தலின் அன்றோ, நீ அவற்றினால் பாவம் நீங்கும் என்பது கூறினை. அதுகூடாது. அவ்விடத்து உண்டாகிய பூதாதிகளுக்கு மாமிசம் நிவேதித்தலால் அக்கொலைமை நீங்கினும் சிறிது அல்லது முழுதும் நீங்காது. அது எப்படி எனில் ஒருவன் தான் செய்த குற்றம் அற்பமாய் இருக்கவும் அக்குற்றத்தை இராசாவை வழிபட்டு அவனது கருணையால் தீர்த்துக் கொண்டான் ஆகில் இராசாவுக்கு மிகவும் வெறுப்பு வருவதாகிய மிகுந்த குற்றத்தைச் செய்தவன் இராசாவின் வாயில் காப்போன் அனுசரணையால் தீர்த்துக்கொள்ளுதல் கூடாது. அவர்களால் தீருமிடத்தும் கிஞ்சித்மிதஞ் செய்வது (ஒரு சிறிது குறைத்தல்) ஒழிந்து குற்றம் முழுதும் பரிகரித்தல் (அகற்றுதல்) கூடாது. குற்றம் முழுதும் பரிகரிக்க நினைக்கும் இடத்து அவர்களுக்கும் கூடவே தண்டனை வரும். அப்படிப்போல நாம் அசரத்தினால் வரும் அற்பப் பாவத்தைச் சிவனுக்கு உகந்தது பண்ணித் தீர்த்துக் கொண்டோமாயின், ஈசுரப்பிரீதி அல்லாத சரக்கொலைத் தோடத்தைச் சத்திபரிசன பைசாசங்களால் நீக்கிக் கொள்ளுவேன் என்பது கூடாது. அந்தப்பிசாச கணங்களும், அந்தப்பிசாச குணங்களுக்கு அதிபதியாகிய சத்தியாதி தேவதைகளும் தங்களுக்கு ஈசுரன் அமைத்த முறைமை ஒழிந்து ஏறக்குறைய நடந்தார் ஆயின் அவர்களும் சனன (பிறப்பு) மரணப்பட்டு வருந்துவார் என்பது நிச்சயம்.

*இதற்குப் பிரமாணம் ஃ சிவஞானசித்தி,*

**யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகிஆங்கே**
**மாதொரு பாகனார்தாம் வருவர்மற்றுஅத் தெய்வங்கள்**
**வேதனைப்படும் இறக்கும் பிறக்கும்மேல் வினையும்செய்யும்**
**ஆதலான் இவை இலாதான் அறிந்து அருள் செய்வன் அன்றே**

*(சிவபெருமானது மகேசுவர வடிவங்களுள் மனம் விரும்பிய*

வடிவத்தை வணங்கினால் அங்கு மாதொரு பாகனார் எழுந்தருளி அருள் புரிவார். மற்ற தெய்வங்கள் பிறக்கும்; வினை செய்யும்; இறக்கும். ஆனால் இறைவன் இந்நிலைகளைக் கடந்தவன். அவனே எல்லோருக்கும் திருவருள் புரிபவன்)

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா : துர்க்காதி சத்திகளுக்கு புலால் நிவேதிப்பது ஆரோக்கியமாயினும், வானுலகத்தின் கண் இருந்துள முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் (இருவர் மருத்துவர், எண்மர் வசுக்களோடு ஈராறு ஆதித்தர், இனிய உருத்திரர், ஏகாதசரிவர்) அவற்றினை நிவேதிப்பது யோக்கியமாம்.

மேல்விடை : **மீதலத்தும் அசுரர் இராக்கதரும் ஊன் உண்பர் என்றும் சோதிமணிமுடி அமுதாசனர் (அமிழ்த உணவினர்) அதனை விரும்பார் சுரத்தன்மையினால் பூசுரரைப்போலும் -** வானுலகத்தும் அசுர ராக்கத பூதபிசாசாதிகளே புலால் பட்சண யோக்கியர். பிரகாசம் பொருந்திய மணிமுடிகளைத் தரித்துள தேவர்களாவார் அமுதபட்சண யோக்கியர். அத்தேவர்கட்கு புலால் நிவேதிக்க ஒண்ணாது என்பதற்குப் பிரமாணம் அநுமானம். அஃது எங்ஙனம் எனின், வானுலகத்துத் தேவர்கள் ஊன் தின்பது இல்லை. தேவத் தன்மையுடையவர்கள் ஆதலின் எங்கே தேவத்தன்மையுண்டோ அங்கே ஊன்தின்பது இல்லை. இங்ஙனம் பூசுரர்போலும் ஆதலின் தேவர்கட்கு புலால் நிவேதனம் அநர்ப்பிதம் என்று அறிவாயாக.

இ-து. சத்திகள் பரிசன பைசாசங்கட்கு புலால் நிவேதித்தலால் சரக்கொலைமை முழுதும் நீங்காது என்றும், எவ்விடத்தும் அசுராதிகளுக்கே புலால் அர்ப்பிதம் என்றும், தேவத் தன்மையுடையவருக்கு அநர்ப்பிதம் என்றும் கூறியது.

இப்படிக்கூறிய சைவ சித்தாந்தியை நோக்கிப் பின்னும் வாமி கூறுகின்றான்.

நீர் இங்ஙனம் கூறிய அனுமானத்திலே தோடமுண்டு. வியாத்தி (மாறுபடாதது) இன்மையின், அஃது எங்ஙனம் எனின் சபக்கமாகிய (துணியப்பட்ட துணிபொருளை உடையது) அந்தணரிடத்துத் தேவத்தன்மை உண்டாயினும் புலால் உண்ணாமை நியமம் இல்லை; யாகத்தின்கண் புசித்தல் காணப்படுதலின் என்ற அளவில் உத்தரம் கூறுகின்றார்.

பூசுரருக் கிழிவிலையா கத்துயிர்கொன்
றருந்தலின்விண் புகுதா நிற்பர்
கோசமெடுத் துரை நவிற்றா சிரியர்சிறார்க்
கிதமதுபின் கொடுப்பான் முன்னர்
ஆசுமிகு துயர்விளைத்து மிதவதுவாப்
பொருள் பெறலி னரியவேத
ஓசைமிகு மமருலகை யவர்வதைத்த
சீவனும்பெற் றுய்தலாலே. (13)

*பூசுரருக்கு இழிவுஇலை யாகத்து உயிர்கொன்று*
*அருந்தலின் விண்புகுதா நிற்பர்*
*கோசம் எடுத்து உரைநவிற்று ஆசிரியர் சிறார்க்கு*
*இதம் அதுபின் கொடுப்பான் முன்னர்*
*ஆசுமிகு துயர்விளைத்தும் இதம்அதுவாப்*
*பொருள் பெறலின் அரியவேத*
*ஓசைமிகும் அமர் உலகை அவர் வதைத்த*
*சீவனும் பெற்று உய்தலாலே*

**யாகத்து உயிர்கொன்று அருந்தலின் பூசுரருக்கு இழிவு இலை விண்புகுதா நிற்பர்** - பூசுரர் யாகத்தின்கண் சீவகொலை பண்ணிப் புலால் உண்டார்கள் ஆயினும், புலால் உண்டோர்கள் அடையும் பாவத்தினை அடையாமல் அதனால் மிகுந்த புண்ணியராகித் துறக்கலோகம் அடையா நிற்பர்கள். ஆதலின், அன்னோர் ஒருகாலும் புலால் உண்டதே இல்லை.

மேல்வினா: பூசுரர் யாகத்தின்கண் சீவகொலை செய்தும் புலால் உண்டும் தாழ்வு அடையாது சொர்க்கம் அடைய வேண்டியது என்?

மேல்விடை : **கோசம் எடுத்து உரை நவிற்று ஆசிரியர் சிறார்க்கு இதமதுபின் கொடுப்பான் முன்னர் ஆசுமிகு துயர் விளைத்தும் அது இதம் அதுவாய் பொருள் பெறலின் அவர் வதைத்த சீவனும் அரிய வேத ஓசை மிகும் அமருலகைப் பெற்று உய்தலாலே** - புத்தகத்தின்கண் உண்டாகிய சத்தங்களைப் பள்ளியின்கண் சிறுவர்கட்கு ஓதுவிக்கும் உபாத்தியாயர் ஆனவர் அன்னோர்க்குப் பின்பு சுகத்தை விளைக்கும் பொருட்டு முன்னர் அநேகக் குற்றமாகத் தோன்றும் துக்கங்களை விளைவித்தும் அவரது மாதா பிதாக்கள் அவற்றினை மிகவும் இதமாகக் கொள்ளுதலின் உபாத்தியாயரும் பொருள் பெற்றுச் சுகம் அடைதல் போலப் பூசுரர்

*(அந்தணர்) யாகத்தின்கண் கொன்ற சீவன் அப்பொழுது துக்கத்தை அடைந்ததாயினும் பின்பு மிகவும் வேத ஓசை முழங்குதலையுடைய தெய்வலோகத்தை எய்திச் சுகம் அடைதலால் யாகம் புரிந்த பூசுரரும் பரமேசுரனது அருளினாலே வானுலகம் புகுந்து உய்யா நிற்பார்கள். எ-று.*

இ-து. யாகத்தின்கண் பூசுரர்விதி புரிதலால் பாவம் இல்லை என்று கூறியது.

இப்படிச்சொன்ன சைவசித்தாந்தியைப் பின்னும் வாமி நோக்கி யாக நிமித்தம் இறந்த சீவன் சொர்க்கம் அடைவது எவ்விதத்தான் என்று வினாவ, மேல் உத்தரம் கூறுகின்றார்.

உய்ந்திடுமம் மகத்தவிமுன் பரன்கொளலா
 னவ்வூன் தூய் துறலாற் சுத்தி
தந்தமறை மந்திரராற் றழல்விடங்கெட்
 டுருவிருக்குந் தன்மைத் தவ்வூன்
இந்தடைவு புரியவுனக் கிருமறைகூ
 றாதியற்றற் கியம்பா நிற்கு
அந்தவுரை யிறைமொழியன் றாரணத்துக்
 கதுவிருத்த மாகை யாலே. (14)

*உய்ந்திடும் அம்மகத்து அவிமுன் பரன்கொளலான்*
 *அவ்வூன் தூய்து உறலால் சுத்தி*
*தந்தமறை மந்திரரால் தழல்விடம் கெட்டு*
 *உரு இருக்கும் தம்மைத்து அவ்வூன்*
*இந்த அடைவு புரிய உனக்கு இருமறை கூறாது*
 *இயற்றற்கு இயம்பா நிற்கு*
*அந்தஉரை இறைமொழி அன்று ஆரணத்துக்கு*
 *அது விருத்தம் ஆகையாலே*

**உய்ந்திடும் அம்மகத்து அவிமுன் பரன்கொளலான்** - எ-து யாகத்தின்கண் இறந்துள சீவன் சொர்க்கமடையும். அவ்விடத்து உருத்திராவிப்பாகம் முதற்கொடுத்து மற்றுள்ள தேவர்கட்கு முறை தவிராது பின்பு அவிப்பாகம் (வேத மந்திரத்தால் அனல்வழி தேவதைகட்குக் கொடுக்கும் உணவு) கொடுத்தலின்

உருத்திராவிப்பாக முதல் என்பதற்குப் பிரமாணம் : **சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம்.**

கட்டக் காட்டில் நடமாடுவர் யாவர்க்கும் காட்சி ஒண்ணார்
சுட்ட வெண்ணீறு அணிந்து ஆடுவர்பாடுவர் தூயநெய்யால்
வட்டக் குண்டத்தில் எரிவளர்த்து ஓம்பி மறை பயில்வார்
அட்டக்கொண்டு உண்பத்து அறிந்தோம் ஏணாம் இவர்க்கு ஆட்படோமே

*(எங்கள் பெருமான் இடுகாட்டில் நடனமாடுபவர். யாவராலும் காண முடியாதவர். வெண்ணீறு பூசி ஆடிப்பாடி மகிழ்பவர். ஓம குண்டத்தில் இடப்பட்ட உணவை ஏற்று உண்பவர். இதனை நாம் முன்பே அறிந்திருப்போமாயின் இவருக்கு ஆட்படுவோமோ?)*

என்றும், **பெரியபுராணம்,**

வெய்யகனல் பதங்கொள்ள வெந்து எதோ எனும் அன்பால்
நையு மனத்து இனிமையினி னையமிக மென்றிடலால்
செய்யுமறை வேள்வியோர் முன்புதரும் திருந்து அவியின்
எய்யும்வரி சிலையவன்தான் இட்ட ஊன் எனக்கு இனிய

*(கண்ணப்பர் தணலில் வாட்டிய இறைச்சியைச் சுவைத்துப் பார்த்து அன்போடு சிவபெருமானுக்குப் படைக்க அதை ஏற்றுக் கொண்ட இறைவன் வேள்வியில் அளிக்கப்படும் அவியினும் இவ்வூன் தனக்கு இனிமை தருவது)*

என்றும் வருவனவற்றாற் காண்க.

மேல்வினா : நன்றாயிற்று. முன்னம் தேவார்ப்பிதமல்ல புலால் உணவு என்று சாதித்தல் வேண்டி அந்தணரைத் திட்டாந்தம் கூறினீர். அவர்கள் யாகத்தின்கண் புசிக்கின்றார் என்பது கொண்டு இங்ஙனம் தேவர்களுக்கும் தேவாதிபராகிய உருத்திரற்கும் ஆகும் என்றீர். முதல் ஆகாது என்றது எது? இவ்விடத்து ஆகும் என்ற விசேடம் யாது?

மேல்விடை : **அவ்வூன் தூய்து உறவால்**-யாகத்தின் கண் இருந்த புலால் அல்லாத இடத்து இருந்த புலால் போல அசுத்தமாகாமல் சுத்தியடைதலால்.

மேல்வினா : யாகத்தின் கண் இருந்த புலால் யாதினால் சுத்தி அடைந்தது?

மேல்விடை : சுத்தி தந்தமறை. அது வேதமந்திரத்தால் சுத்தி அடையும்.

மேல்வினா : அப்படி மந்திரத்தால் சுத்தி அடையின் புலால் உருமாறி மரக்கறி ரூபம் அடைய வேண்டும். அஃது இன்மையால் சுத்தி அடைந்ததற்கு

அடையாளம் யாது?

மேல்விடை : **மந்திரரால் தழல்விடம் கெட்டு உரு -இருக்கும் தன்மைத்து அவ்வூன்** மந்திரவாதிகளினாலே அக்கினி உருவம் இருக்கத் தக்கதாகச் சத்தி தம்பனையடைந்தது (தடுத்தல்) போலவும், மந்திரத்தால் அடைப்பட்ட எட்டி, அலரி முதலிய விடங்கள் எல்லாம் ஒருவரை மிகக் கொல்லும் தன்மை கெட்டது போலவும் வேள்விக்கண் இருந்த புலாலும் புலால் தன்மை கெட்டு நிருமலத் தன்மை அடையும். அப்படி ஆதலின், அது உருத்திராதி தேவார்ப்பிதமாம் (தெய்வத்திற்குப் படைத்த பொருள்). அதனாலே அந்த உடலத்தின்கண் இருந்த சீவனும் திவ்விய போகத்தை அடையும். அப்படிப் பரசீவகிதம் (அன்னியவுயிர்க்கு நலம்) சாதித்தலின், வேள்வி முடித்த பூசுரரும் திவ்விய பதவிக்கு அனுகூலமாகிய சிறப்பினை அடையா நிற்பார்கள்.

ஆகம விதியென்பதற்குப் பிரமாணம் : **திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தேவாரம்.**

பறப்பைப் படுத்து எங்கும் பசுவேட்டுஎரி ஓம்பும்
சிறப்பர்வாழ் தில்லைச் சிற்றம்பலம் ஏய
பிறப்பு இல் பெருமானைப் பின்தாழ் சடையானை
மறப்பிலார் கண்டீர் மையல்தீர் வாரே

*(வேள்விச்சாலை அமைத்து ஆன்ம போதத்தைக் கொன்று சிவாக்கினியை வளர்க்கும் சிறப்பினைக் கொண்ட தில்லைவாழ் அந்தணர்கள் வாழும் தில்லையில் வீற்றிருக்கும் பிறப்பற்ற பெருமானை, தாழ்ந்த சடையானை, மறவாது எப்பொழுதும் நினைந்து வழிபடுபவர்கள் உலக மாயையிலிருந்து நீங்கியவராய்த் திகழ்வர்.)*

என்றும், **திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்,**

சிந்தையைத் திகைப்பியாதே செறிவுஉடை அடிமை செய்ய
எந்தை நீ அருளிச்செய்யாய் யாதுநான் செய்வது என்னே
செந்தீயார் வேள்விஓவாத் தில்லைச் சிற்றம்பலத்தே
அந்தியும் பகலும் ஆட அடிஇணை அலசும் கொல்லோ.

*(சிந்தையை மாறுபடச் செய்யாதே; அடியவனை அடிமையாகக் கொள்ள யாதும் நீ அருளிலை. யான் என் செய்வேன்! செம்மை தரும் தீ வளர்க்கும் அந்தணர் வேள்வியினை ஓய்வின்றி ஓம்பி வருகின்றனர். அந்தியும் பகலும் சந்தியும் ஆடல் கொள்ளும் நின் திருவடிகள் தான்*

*வருந்தும் தன்மையதோ! அன்று)*

என்றும், **சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம்.**

ஒருமேக முகில்ஆகி ஒத்து உலகம் தானாய்
ஊர்வனவும் நிற்பனவும் ஊழிகளும் தானாய்ப்
பொருமேவு கடல்ஆகிப் பூதங் களைந்தாய்ப்
புனைந்தவனைப் புரிசடையினானைத்
திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த
திருத்தக்க அந்தணர்கள் ஓதுநகர் எங்கும்
கருமேதி செந்தாமரைமேயும் கழனிக்
கானாட்டு முள்ளூரில் கண்டு தொழுதேனே.

*(ஒப்பற்ற மேகமாகியும், உலகமாகியும், அவற்றிலுள்ள உயிர்களும், ஊழிக்காலங்களும் தானேயாகி, கடலாகி, பூதங்களாகி, அவற்றைப் படைத்து நிற்பவனும், அற வடிவானவனுமான இறைவனை அடியேன் கண்டு வணங்கப் பெற்றேன்.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வாதியுத்தரம் : இப்படி நீர் சொன்னது உண்மை. யாவன் ஒருவன் ஆகினும் சரக்கொலை பண்ணும்பொழுது அவற்றினை மந்திரோபதேசத்தினாலே சுத்தி பண்ணி அவற்றின் ஊனைத் தேவார்ப்பிதம் பண்ணாமல் தன்னைக் குறித்துக் கொன்று தின்றான் ஆயின் அவன் நரகத்து அழுந்துவான் என்பது உபயமதசித்தமே, (இருவர் கருத்தும் ஒத்தது) ஆதலால் நாமும் மந்திரோபதேசத்தினால் பசுவைச் சுத்திபண்ணி அதன் ஊன் புனிதம் ஆதலின் மாதாவுக்கும் அவளது சமுகத்துள்ள ஈசுராதி தேவதைகளுக்கும் நிவேதனம்பண்ணி அவ்விடத்து இறந்த பசுவை முத்தி அடைவித்து நாமும் தேவியுடைய பிரசாதம் கொள்ளுதலால் அவளுடைய பாதத்தை அடைதல் உண்மை ஆதலின் உம்முடைய வேள்விபோலும் நம்முடைய வாமபூசா சரித்திரம்.

மேல்விடை : **இந்த அடைவுபுரிய உனக்கு இருமறை கூறாது** எ-று. நம்முடைய வேள்விபோலப் பசுப்படுத்து வாமபூசை பண்ணலாம் என்று உனக்கு வேதவிதியின்மையின் அப்படிச் செய்தல் கூடாது.

மேல்வாதியுத்தரம் : வேதவிதியில்லாதது கொண்டு நமக்கு ஒரு குறையில்லை. பசுப்படுத்தும் மாதாவுக்கு அர்ப்பிதம் (உரியதாக்கல்) பண்ணலாம் என்று வாம தந்திர (ஆகமம், நூல்) விதிதம் (விதி) உண்டு.

மேல்விடை : **இயற்றற்கு இயம்பா நிற்கும் அந்த உரை இறைமொழி அன்று** - அப்படி உனக்குச் சத்தி பூசை பண்ணலாம் என்று கூறிய வாமதந்திரம் ஈசுவர வாக்கியம் அன்று.

மேல்வினா : வாமதந்திரம் அநீசுர வாக்கியம் (கடவுள் மொழி அல்லாதது) என்பது எதனால்?

மேல்விடை : **ஆரணத்துக்கு அதுவிருத்தம். ஆகையாலே** எ-து. நம்மால் அங்கீகரிக்கப்பட்ட வேதங்களுக்கு உன்னுடைய வாம தந்திரம் விரோதமாய் இருத்தலின் எனக் கொள்க எ.று.

இ-து. வேள்விக்கண் இறந்த சீவன் சொர்க்கம் அடையும் என்றும், அங்ஙனம் வாமதந்திரம் வேதவிதி அன்று என்றும் ஆதலின் அந்நூல் ஈசுவர வாக்கியம் அன்று என்றும் கூறியது.

இப்படிச் சொன்ன சைவ சித்தாந்தியை நோக்கி மேல்வாமி கூறுகின்றான்.

உம்முடைய வேதத்துக்கு நம்முடைய வாமதந்திரம் விரோதமாதலின் வாம தந்திரம் அநீசுவர வாக்கியம் ஆவது இல்லை. வாம தந்திரத்துக்கு வேதம் விரோதம் ஆதலின் வேதம் அநீசுவர வாக்கியம் என்று கூறுதலும் அவனை நோக்கி உத்தரம் கூறுகின்றார்.

ஆகியவெக் கலைத்துணிவு மவற்றுளவற்
றுளதெவற்று மடங்கா தாதல்
ஏகனுரை மறையாதி யியம்புமவற்
றுளதிழுக்கென் றெவர்க்குஞ் சித்தி
வாகுறவுண் டதைமதியே லருளானா
கமவேத வழிவந் தோர்க்குண்(டு)
ஓகைதரும் பிரமசித்தி வொழிந்தவையு
மவர்க்கெளிதென் றுளத்துட்டேரே. (15)

*ஆகிய எக்கலைத் துணிவும் அவற்றுள அவற்று*
*உளது எவற்றும் அடங்காது ஆதல்*
*ஏகன் உரை மறையாதி இயம்பும் அவற்று*
*உளது இழுக்கு என்று எவர்க்கும் சித்தி*
*வாகுஉற உண்டுஅதை மதியேல் - அருளால்*
*ஆகம வேத வழிவந்தோர்க்கு உண்டு*
*ஓகைதரும் பிரமசித்தி ஒழித்தவையும்*
*அவர்க்கு எளிது என்று உளத்துள் தேரே*

**ஆகிய எக்கலைத்துணிவும் அவற்றுள அவற்றுளது எவற்றும் அடங்காது ஆதல்மறையாதி ஏகனுரை**-உலகின் கண் உள்ள பல சமய நூல்களுள் மிருதி புராண கலை ஞானாதிகளும் வேதாகமத்தின்(காமிகம் முதலாக வாதுளம் ஈறாக 28ஆம்) வழிநூல் (முதல்நூல் வழி நூல்களது பொருள் திரிபு வேறுடையது) ஆதலானும் அவைகளில் முடிந்த பொருள்களை வேதாகமத்துள் ஒரோவிடத்து எடுத்துக் காட்டுதலானும் வேதாகமத்துள் துணி பொருள்கள் அவைகளின் அளப்பரிய அத்தம் (முடிபு) ஆகையினாலும் வேதாகமங்களில் இரண்டுமே ஈசுவரவாக்கியம். அது எப்படி என்னில் இராசாவின் வாயிற்கணக்கில் கிராம வழிக்கணக்குகள் அளவிடப்பட்டு அக்கிராமவழிக் கணக்குகளில் இராஜாவின் வாயிற்கணக்குகள் அளவிடப்படாமை போலும் எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் : **சிவஞானசித்தி,**

அருமறை ஆகமம் முதல்நூல் அனைத்தும் உரைக்கையினால்
அளப்பு அரிதாம் அப்பொருளை அரன்அருளால் அணுக்கள்
தருவர்கள்பின் தனித்தனியே தாம்அறிந்த அளவில்
தர்க்கமொடு உத்தரங்களினால் சமயம் சாதித்து
மிருதிபுராணம் கலைகண் மற்றும் எல்லாம்
மெய்ந்நூலின் வழிபுடையாம் அங்கம் வேதாங்கம்
சுருதி சிவாகமம் ஒழியச் சொல்லுவது ஒன்றில்லை
சொல்லுவார் தமக்கு அறையோசொல் ஒணாதே

(மே.கோ.பா.கருத்துரை : வேதாகங்களின் அடங்காத பொருளால் ஒன்றனை எடுத்துக்கொண்டு சுதந்தரமாய்ச் செய்யும் நூல் ஒன்றுமில்லை. உண்டென்று சொல்லில் பிணங்கும் பேதைகள் ஆவார்.)

என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

மேல்வினா : எல்லாச் சமயங்களின் முடிபொருளும் வேதாகமத்து அடங்குமாயின், எம்முடைய வாமதந்திரத்தை வேதாகமங்கள் சொல்லா என்றது எப்படி?

மேல்விடை : **இயம்பும் அவற்றுளது இழுக்கென்று** - உன்னுடைய வாமதந்திரத்தை வேதாகமங்கள் சொல்லும்; சொல்லுமிடத்துச் செந்நெறி என்று துதியாது கொடு நெறி என்று நிந்திக்கும். அஃது ஏனெனில் கொலைமை சூழ்தலின்

இதற்குப் பிரமாணம் : **திருவள்ளுவர்.**

நல்லாறு எனப்படுவது யாதுஎனின் யாதுஒன்றும்
கொல்லாமை சூழும் நெறி

*(அறநூல்கள் அறிவிக்கும் நல்லநெறி என்று சொல்லப்படுவது எது எனில் அஃது எந்த ஓர் உயிரையும் கொல்லாது இருத்தல் ஆகும்)*

என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

மேல்வாதியுத்தரம் : அப்படி வாமதந்திரம் கொடுநெறியாகில் அந்நெறி நின்றோர்க்குத் தெய்வீகசித்திகள் உண்டாகாமல் போக வேண்டும். நாதாந்திகள் (நாதத்தின் முடிவை உணர்ந்தவர்கள்) ஆயினோர் சத்தியை அர்ச்சித்து அவளது கருணையால் அனந்த சித்திகளை (அளவிலா ஆற்றல்) அடைந்து உலகின் கண்ணே வந்து விளையாடுதலின் வாம தந்திரம் செந்நெறியே என்றாயாகில்.

மேல்விடை : **எவர்க்கும் சித்திவாகு உற உண்டு அதை மதியேல் -** உன்னிலும் உயர்ந்தோராகி வேதம் சொன்ன தருமத்திலே நடக்கும் உட்சமயிகளுக்கும் உன்னோடு சமான கீழ்மக்கள், வைதிக மார்க்கத்திற்கு புறம்பானவர்கள் வேதத்துக்கு அன்னியராகிய புறச்சமயிகளுக்கும் உன்னிலும் தாழ்ந்தோராய் உலகத்தின் கண்ணே துர்த்தேவதை, பூத பைசாசாதிகளை அனுசரிப்போர்க்கும் அவரவர் முன் செய்த கன்மபலத்தினாலே அத்தேவதையை உண்டு என்று கருதி வைராக்கியங்களைச் செய்தலினால் அந்தத் தேவதைகள் தங்கள் தங்களுக்கு உண்டான சக்திக்கு இசைய ஒவ்வொரு சித்திகளைக் கொடுக்கும் ஆதலின் உன் சமயத்துக்கு மாத்திரம் உண்டாகி மற்றோரிடத்தும் இல்லாவிடின் அன்றோ, சித்தி பிரதானமாகி (முதன்மை) நாட்டவேண்டும். சர்வரிடத்திலும் உண்டாயிருத்தலின் அவற்றினைக் காரணமாக மதித்து வாதித்தலை விட்டுவிடு.

மேல்வினா : சர்வரிடத்திலும் சித்திகள் உண்டாகில் எல்லாச் சமயங்களும் சமமே என்னாது உம்முடைய வேதாகமம் சொன்ன தருமத்திலே நடப்பது அதிகம் என்று சொல்லுவானேன்?

மேல்விடை : **அருளால் ஆகமவேதவழி வந்தோர்க்கு ஓகை தரும் பிரமசித்தி உண்டு -** திருவருள் துணையாக வேதாகம வழியை உள்ளபடி அறிந்து அடைந்தோர்க்கு யாவரானும் கிட்டுதற்கு அரிய நித்தியானந்தத்தைக் (நிலைத்த மகிழ்ச்சி) கொடுப்பதாகிய

*பரமசிவசித்தி கிடைக்கும் (மெய்ஞ்ஞானம்).*

*இதற்குப் பிரமாணம் ः சிவஞான சித்தி,*

**அருளினால் ஆகமத்தே அறியலாம் அளவி னானும்
தெருளலாம் சிவனை ஞானச் செய்தியால் சிந்தை உள்ளே
மருள்எலாம் நீங்கக்கண்டு வாழலாம் பிறவிமாயா
இருள்எலாம் இரிக்கலாகும் அடியரோடு இருக்கலாமே**

*(இறைவனை வேதசாரமாகிய சிவாகமத்தின் அனுபவமுடைய குருவின் உபதேசத்தால் கேட்டறியலாம். கேட்டதை சிந்தித்தும் அறியலாம். சிந்தித்ததைத் தன் அறிவின் கண்ணே சிவஞானத்தால் குற்றமறத் தெளிந்தும் அறியலாம். அதனால் பாசநீக்கம் செய்து நிட்டை கூடி சிவானந்த அனுபூதியும் பெறலாம்.*

*என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.*

சுத்தமுத்தி (*விதேக முத்தி*) அடைந்தால் ஒழிந்து யாவன் ஒருவன் அடையும் பதமுத்திகளும் துன்பமே அல்லாது இன்பம் இல்லை என்பன குறித்து ''*ஓகை தரும பிரமசித்தி*'' என்று கூறினார் எனக்கொள்க.

*இதற்குப் பிரமாணம்;* **திருவள்ளுவர்,**

**தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது**

*(அறிவால் உயர்ந்து நிற்பானின் நல் நெறிகளைப் பின்பற்றுவோர் தவிர மற்றவர் எவரும் தன் மனக்கவலை நீங்கி மகிழ்ச்சி அடைய இயலாது)*

**திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம்,**

**செல்வ நெடுமாடம் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம்பலம் மேய
செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே**

*(செல்வத்தில் மிக்க மறை ஞானச் செல்வர்கள் வாழும் தில்லையில் சிற்றம்பலநாதனாகிய செல்வனின் கழலைப் போற்றி வாழ்தல் நல்ல மாண்பாகும்.)*

என்றும், **திருமந்திரம்,**

ஒழிந்தேன் பிறவிஉறவு என்னும் பாசம்
கழிந்தேன் கடவுளும் நானும் ஒன்று ஆனேன்
அழிந்துஆங்கு இனிவரும் ஆக்கமும் வேண்டேன்
செழும் சால்பு உடைய சிவனைக் கண்டேனே

*(நன்மையைத் தரும் சிவனைக் கண்டேன். அதனால் பிறப்பு நீங்கப் பெற்றேன். சிவத்துடன் பொருந்தினமையால் இறந்த பின் இனி மீளவும் பிறத்தலை விரும்பேன்)*

என்றும், **சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம்,**

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
அடையில் அன்பு உடையானை யாவர்க்கும் அறிய ஒண்ணா
மடையில் வாளைகள் பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையில் கங்கை தரித்தானைச் சாராதார் சார்வுஎன்னே

*(பனங்காட்டூரில் எழுந்தருளியுள்ள எவராலும் அறியவொண்ணாதானை சடையில் கங்கையை உடையானை அடையாதவர் சார்பினால் பயன் தான் யாதே?)*

என்றும், **திருவாசகம்,**

நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும் வண்ணம்
குறிஒன்றும் இல்லாத கூத்தன்தன் கூத்தைஎனக்(கு)
அறியும் வண்ணம் அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே

*(தீயவழியே நல்லவழி என்று நினைப்பேனைக் கீழான நெறிகளில் செல்லாமல் திருவருள் நெறியிலே சேரும்படி கூத்தப்பெருமான் காட்டினான். அவ்வருளை யார் பெறுவார்.)*

என்றும், **சிவதருமோத்தரம்,**

இம்முறை அமரரும் இடுக்கண் எய்துவர்
தம்மினும் உயர்ந்தவர் பதத்தைத் தாமுனி
எம்முறையானும் மெய் இடுக்கண் ஏதுவே
செம்மைய செல்வமே சிவானு பூதியே

*(தேவர் பதவிகளும் நிலையானவை அல்ல. தம்மைவிட மிகுதியாக*

*தவம் செய்தாரை நினைந்து வணங்க வேண்டும். சிவானுபூதியே உண்மையான செல்வம் ஆகும்.)*

என்றும், **தத்துவாமிர்தம்,**

"மூவரே முதன் மொழிந்திடும் இமையவர் பதமும்
சாவதோடு உறு சனனம்என் சாகரத்து அழுந்தி
மேவு பாதியில் பட்டுநாள் மிகுதியுற்று அழியும்
தேவர்தம் பதம்தீது எனமிக வெறுத்தன னால்

*(தேவலோக வாழ்வும் தோற்றம், முடிவு என்பனவற்றிக்கு உட்பட்டதே. எனவே துன்பம் தரும் இத்தகைய பதங்களும் தீமையானவையே என்று உணர வேண்டும்.)*

என்றும், **சொரூபானந்தசித்தி,**

ஆதலான அறியும் அறிவுஎலாம் கைவிட்டு
அறிவினுக்கு அறிவதாய் நின்ற
பேதம்இல் பிரமம் ஒன்றுமே காண்பான்
பேறும் பேரின்பமாய்ப் பிறத்தல்
சாதல்அற்று இருக்கும் மகனை ஓர்வருத்தம்
இன்றியே சாரலாய் இருக்க
ஆதரித்து அறியார் அற்பமே விரும்பி
அனந்த துக்கத்திலே அமைவார்

*(தன் அறிவினுக்குப் புலப்படுவதாய் நிற்கும் பேதமில்லாத பிரமத்தை வருத்தமின்றிச் சாரலாய் இருக்க விரும்பார் கீழான ஆசை கொண்டு மிக்க துன்பத்தில் அழுந்துவர்.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க. இத்தன்மை உடையன வேதா ஆகம நெறிகள் ஆதலின் அவைகளே அதிகம் என்றது எனக் கொள்க.

மேல்வினா : ஆனால் உமக்குப் பிரமம் சித்திக்கும் ஆயின் அச்சித்தி அப்பிரத்தியட்சமே(கண்ணுக்குத் தோன்றாதது), எமக்கு உண்டாகிய பிரத்தியட்ச சித்திகள் உமக்கு உண்டாகா.

மேல்விடை : **ஒழிந்தவையும் அவர்க்கு எளிதென்று உளத்துள் தேரே** - எ-து. வேதம் சொன்ன தருமத்திலே நடந்து பூரண சித்தி அடைந்தோர்க்குக் கைவசம் ஆகாத சித்திகள் உலகத்தின் கண்ணே இல்லை. அஃது எங்ஙனம் எனின், பூச்சக்கிரவர்த்தி (மன்னன்)யாகிய

ஒருவனுக்கு ஒரு கிராம மணிய விசாரணை இன்மையால் அந்தக் கிராமாதிகாரம் அவனுக்கு உண்டு என்றும் இல்லை என்றும் சொல்ல வேண்டுவது இல்லை ; அதுபோலும் எனக்கொள்க எ.று.

இதற்குப் பிரமாணம் : **திருவாசகம்.**

**மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்கறும் ஆகாதே**
**வானவ ரும்அறியா மலர்ப் பாதம் வணங்குதும் ஆகாதே**
**கண்இலி காலம் அனைத்திலும் வந்த கலக்கறும் ஆகாதே**
**காதல்செயும் அடியார்மனம் இன்று களித்திடும் ஆகாதே**
**பெண் அலி ஆண்என நாம்என வந்தபிணக்கறும் ஆகாதே**
**பேர் அறியாத அனேக பவங்கள் பிழைத்தன ஆகாதே**
**எண்இலி ஆகிய சித்திகள் வந்துஎனை எய்துவது ஆகாதே**
**என்னை உடைப் பெருமான் அருள்ஈசன் எழுந்து அருளப் பெறிலே**

*(எம் பெருமானாகிய கருணையாளன் எழுந்தருளப் பெற்றால் மண்ணுலகில் மாயாகாரியங்களைக் கருதுவதால் ஏற்படும் மயக்க உணர்ச்சி ஒழியும். பல பிறவிகளும் நிகழாது, அளவற்ற அற்புதத் திறன்கள் என்னை வந்தடையும்)*

என்றும், **பட்டினத்துப் பிள்ளை பாடல்,**

**பொருளும் குலனும் புகழும் திறனும்**
**அருளும் அறிவும் அனைத்தும் ஒருவர்**
**கருதாஎன் பார்க்கும் கறைமிடற்றாய் தொல்லை**
**மருதாஎன் பார்க்கும் வரும்**

*(இடை மருதர் எனப் போற்றி வணங்குவார்க்கு பொருளும், நற்சார்பும், புகழும், திறனும், அருளும் ஆகிய அனைத்தும் கிட்டும்.)*

என்றும், **அனுபவசாரம்,**

**அறமும் நல்கிடும் பொருளுடன் இன்பமும்**
**அருந்தவங்களும் நல்கும்**
**துறவும் கல்வியும் துணிவொடு**
**நிலைமையும் தூய்மையும் மிகநல்கும்**
**நிறமும் நீர்மையும் நினைந்தவை**
**முழுவதும் நிகரில்வீடுஅது நல்கும்**
**அறிவனன் கழல்ஒழிய அங்குஅவை**
**நினைத்து அழிபவர் அறிவுஎன்னே**

*(அறம், பொருள், இன்பம், தவம், துறவு, கல்வி, துணிவு, தூய்மை, வீடுபேறு எல்லாவற்றையும் அளிப்பது இறைவன் திருவடிகள். ஆனால் அத்திருவடிகளில் இருக்கும் பேற்றை விரும்பாது அழிகின்றவற்றையே வேண்டுவோர் அறிவு என்னே!)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இ-து. வேதாகமம் ஈசுரவாக்கியம் என்றும், அவற்றின் வழி நடப்பதே செந்நெறி என்றும், பூரண (நிறைவான) சித்தியே சித்தி என்றும் கூறியது,

இப்படிச் சொன்ன சித்தாந்தியை நோக்கி மேலும் வாமி கூறுகின்றான்.

உம்முடைய வேதாகம வழிப்படி நடந்துளோர்க்குப் பூரண வசுத்து சித்திக்கும் என்றுநீர் சொல்லுவதே ஒழிந்து நம்முடைய வாமதந்திரானுசாரணை (தொடர்ந்து நடத்துதல்) போல உமக்கு அந்தவஸ்து உடனே பிரசன்னம் (வெளிப்படுதல்) ஆவதில்லை. ஒருவன் கூழேனும் காடி (பழையது)யேனும் பசிக்கு உதவினதே தேவாமுதம் என்பது போல உம்முடைய வேதாகமவழி நின்று வசுத்து சித்திக்குமோ சித்தியாதோ என்று பிரயாசைப்படுவதிலும் (முயற்சி) வாமதந்திரத்தில் சொன்னபடி நின்று சத்தியை ஆராதித்து (வழிபட்டு) எளிதில் சித்தி அடைவதே விவேகம் என்று கூறுதலும் அவனுக்கு உத்தரம் கூறுகின்றார்.

தேர்ந்திலைகொல் கீழினொடு சேர்வதெளி
  துயர்மனையுஞ் சேரக் கிட்டா
சார்ந்திடின் வேண்டிய தருமாற்றனைத் தருமெம்
  மிறையுமிவண் டனிற்சார் வாய்ப்பின்
பேர்ந்திடுமெண் கருமிகள்சார் வுன்னதுலோ
  கிதன்மகிழும் பெரியோய் ஞானங்
கூர்ந்தவர்வான் சிறப்பெனினுங் கொலையின்வரு
  மெனிற்கடையாய்க் கொள்வ ரன்றே. (16)

*தேர்ந்துஇலை கொல்கீழினொடு சேர்வது எளிது*
  *உயர் மனையும் சேரக் கிட்டா*
*சார்ந்திடின் வேண்டிய தருமால் தனைத் தரும்எம்*
  *இறையும் இவண்தனில் சார்வாய்ப்பின்*
*பேர்ந்திடும் எண்கருமிகள் சார்வு உன்னது உலோகிதன்*
  *மகிழும் பெரியோய் ஞானம்*

*கூர்ந்தவர் வான்சிறப்பு எனினும் கொலையின்வரும்*
*எனில் கடையாய்க் கொள்வர் அன்றே*

**தேர்ந்திலைகொல் கீழினொடு சேர்வது எளிது உயர்மனையும் சேரக்கிட்டா சார்ந்திடின் வேண்டிய தருமால் எம்மிறையும் தனைத்தரும் இவண்தனில் சார்வாய்ப் பிற்பேர்ந்திடும் எண்கருமிகள் சார்வு உன்னது** - இங்ஙனம் கூறியவற்றுள்ளும் இதனை நீ மிகவும் விசாரியாது கூறினை; அஃது எங்ஙனம் எனின், இப்பூமியின்கண் ஒரு புலையனைக் காண்டலும், அவனது நட்புக் கொள்ளுதலும் அரிதல்ல; எளிதாகும். அவனால் பெறும் பயனும், புல், விறகு முதலிய கருமமாம். தேசாதிபதியைச் சிநேகித்தல் ஒருவருக்கும் எளிதில் கூடாது. அவனது வாயில் மந்திரி ஆதியோர்களை ஒருவன் அனுசரித்துச் செய்கிற உபசாரத்து அளவில் ஏக காலத்தாயினும் அநேக காலத்தாயினும் இராச சமூகம் கிட்டுதல் செய்வர். அப்படி அந்த இராசாவை அடைந்து அவனது சித்தம்வர நடந்தான் ஆகில் அவனைத் தன் போலும் தேசாதிபதி ஆக்குவன். அப்படி எம்முடைய கர்த்தாவை யாவன் ஒருவன் கருதிச்சுருதி(சாத்திரம்) குரு(ஆசாரியார்) சுவானுப சித்தமாக (அவனவனுக்கு அதன் மூலம் உண்டாகும் அனுபவம் - தான் கண்ட உண்மை முடிபு) அடைந்தானாகில், அவனைத் தன்மயமாக்குவன். அதுவன்றி,இவ்வுலகின்கண் ஒருமகத்துவம் (பெருமை) போலக் காட்டி அவற்றினால் தமது சரீரத்துக்கு அருந்தல் பொருந்தலையும் கீர்த்தியையும் பிறரால் அடைந்தும் அச்சரீராந்தத்து அழிவனவாகிய தம்பனாதி (அட்ட கன்மங்களுள் ஒன்று) அட்டகன்மங்களை ஒரு பொருளாகக் குறித்த புல்லறிவாளர் அனுசரிக்கும் நெறிகாண். உன்னுடைய வாமதந்திராதி கொடுநெறிகள்.

இதற்குப் பிரமாணம் :

வலிதொரு புலையன்தன் மனைக்கு உயர்ந்தோர்
வரின்எதிர் தொழுதுபுன் கருமம்
சொலும்முன் முடிப்பன் அமைச்சர் ஆதிகளால்
துரைதனைப் பல்பகல் அடைந்தோர்க்கு
அலகில் வாழ்வு அருள்வன் எனத்தமை நினைந்தோர்க்கு
அருள்வர் புன்தேவர் எண் கருமம்
குலவும் ஈசனும் தன் அடியரால் தனையே
குறுகினர்க்கு அருளுவன் தனையே

*(தம்மை நினைப்பவர்களுக்கு சிறுதெய்வங்கள் எண் கருமம் முதலியவற்றை அருளும். ஆனால் ஈசன் தன்னை அடைந்த அடியவர்களுக்குத் தன்னையே தந்தருள்வான்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா : ஆனால் வாமதந்திரத்தை அட்டகன்மங்களை இச்சித்தோர் (விரும்பியோர்) அன்றி மோட்சத்தை வேண்டிய ஞானிகள் அனுசரியார்களோ? (பின்பற்றார்களோ)

மேல்விடை : **உலோகிதன் மகிழும் பெரியோய் ஞானங் கூர்ந்தவர் வான் சிறப்பு எனினும் கொலையின் வரும் எனில் கடையாய் கொள்வர் அன்றே** - கொலையாதிகட்கு அஞ்சாமை செய்தலினாலும், சத்திபூசையின் கண் அநேக சத்தி கணங்கள் சூழ நடுநாயகமாய்த் தோன்றிக் களித்து விளையாடுதலினாலும் உனக்கு ஒருவர் நிகர் இல்லையென்றும், நீயே என்னுடைய பிராண (உயிர்) சிநேகன் என்றும், இதற்குச் சந்தேகமில்லை வலக்கைதா என்றும் உலகின் கண் மூடருள் எல்லாம் முழுமூடனாகிய உலோகாயதனாலே மகிழப்பட்டுள்ள பெரியோனே ! கேட்பாயாக. ஆருட ஞானத்தையுடைய (ஞானபூமிகளில்) நாதாக்கள் (பெரியோர்கள்) மோட்சம் எளிதில் கிடைப்பதாயினும் ஒரு கொலை முன்னிலையாகக் கிடைக்குமாயின் அதனைக் கடையான மோட்சமாகக் கைவிடுவர். ஆதலின் இங்ஙனம் கொலை முன்னிலையாக, மறுமைக்கண் நரகத்தை விளைக்கும் அட்டகன்மங்களைத் தருவதாகிய உன்னுடைய கொடுநெறியை ஒருகாலும் விரும்பார்கள். எ-று.

உலோகயதன் மகிழும் பெரியோய் என்பதற்குப், பிரமாணம்: ***சிவஞானசித்தி,***

வாழவே வல்லை வாமி வலக்கைதா என் உயிர்க்குத்
தோழன்நீ உன்னை ஒப்பார் சொல்லிடின் இல்லை கண்டாய்
கோழைமானுடர் தீது என்னும் கொலை களவு ஆதிகொண்டே
சூழும்வார் குழலார் மொய்ப்பச் சுடர் எனத் தோன்றினாயே

*(இவ்வுலகத்துள் எம்மைப்போல நீயும் ஒழுகுகிறாய். பயந்த மனிதர்கள் பொல்லாங்கு என்று சொல்லும் கொலை களவு முதலியவற்றை எம்மைப் போலவே நீயும் கடைப்பிடித்தும் பெண்களோடு மகிழ்ந்தும் விளங்குகின்றாய்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

கொலையால் வரும்பேற்றைக் கடையாகக் கொள்வர் என்பதற்குப் பிரமாணம் ; திருவள்ளுவர்,

**நன்றுஆகும் ஆக்கம் பெரிது எனினும் சான்றோர்க்குக்**
**கொன்றுஆகும் ஆக்கம் கடை**

*(ஒரு கொலை செய்வதால் விளையும் உயர்வு மிகப் பெரிதாயினும் சான்றோர்க்கு அத்தகைய உயர்வு கீழ்த்தரமானது ஆகும்.)*

அன்றியும்,

**அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர்செகுத்து உண்ணாமை நன்று**

*(பொருள்களை நெருப்பில் சொரிந்து ஆயிரம் வேள்விகளைச் செய்வதால் பெறும் பயனைக் காட்டிலும் ஓர் உயிரை அழித்து அதன் உடம்பைத் தின்னாது விடுவதால் பெறும் பயன் நல்லது.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

ஞானிகள் அட்டகன்ம நெறியை வேண்டார்கள் என்பதற்குப் பிரமாணம்; திருமந்திரம்,

**வேண்டார்கள் கன்மம் விமலனுக்கு ஆட்பட்டோர்**
**வேண்டார்கள் கன்மம் அதில்இச்சை அற்றபேர்**
**வேண்டார்கள் கன்மம் மிகு சிவயோகிகள்**
**வேண்டார்கள் கன்மம் விழுமியோர் ஆர்ந்து அன்பே**

*(அட்ட கன்மம் என்று சொல்லப்படும் சித்திகளைச் சிவபெருமானுக்கு ஆட்பட்ட சிவயோகிகள் ஒருபோதும் விரும்பமாட்டார்கள்.)*

என்றும், புலான் மறுத்தல்,

**இம்மைப் பயனாம் இருநாலு கன்மங்கள்**
**தம்உள் குறித்துஊன் கொடுபூசித்து - அம்மார்க்கம்**
**செய்வதுஅலது சிவஞான வாரிதி சேர்ந்து**
**உய்யும் அவர்க்கு ஆகாஉணர்**

*(இம்மைப் பயனைத் தரும் அட்டகன்மங்களையும் உயிர்ப்பலி*

*இடுதல் முதலிய வழிபாட்டு முறைகளையும் புரிவோர் சிவஞானத்தில் மூழ்கி இன்பம் அடைவதை விரும்பார்.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இ-து. துர்த்தேவதா (சிறுதெய்வம்) பிரசன்னம் (வெளிப்படுதல்) எளிது என்றும், அதனால் வரும் பயன் மிகவும் சிறுமையினையுடைய அட்டகன்மங்கள் என்றும், அதனை அனுசரிப்போர் மிகவும் புல்லறிவு உடையோர் என்றும், சிவப்பிரசன்னம் மிகவும் அருமை உடையது என்றும், அதனால் வரும்பயன் மோட்சம் என்றும், அதனை அனுசரிப்போர் மிகவும் உயர்ந்த தத்துவஞானிகள் என்றும் கூறியது.

இப்படிக் கூறிய சைவசித்தாந்தியை நோக்கி மேலும் வாமி கூறுகின்றான்.

நீர் இங்ஙனம் தத்துவஞானிகள் கொலை செய்தலும் புலால் உண்டலும் செய்யார் என்பது கூடாது. அது ஏது எனில், உலகின்கண் உண்டாகிய ஞான நூல்கள் எல்லாம் ஞானி சரித்திரம் அக்கினிக்கு ஒப்பு என்று கூறுதலான். அக்கினியின் கண் யாதொரு மலாதிகள் சார்ந்தது ஆயினும் சுட்டு நீறு ஆக்குதல்போல, ஞானியானவனும் யாதொரு புசிப்பு வந்தடைந்த காலையினும் நன்று தீது என்று பாராமல் கொண்டு ஞானாக்கினியால் தகனம் பண்ணிப் போடுவான். ஆதலின் ஞானம் இல்லாதவரே புலால் உணவு விடவேண்டும்; ஞானிக்கு அஃது இல்லை என்றாய் ஆகில் அவ்வுரை பழுது என்று மேல் உத்திரம் கூறுகின்றார்.

அன்றழற்கொப் பறிஞரெதி ரருவினையைச்
சுடுதலினா லன்றியாதுந்
தின்றன்ம ருளருளினர்வீட் டமுதுளநீ
ராடியுண்போர் திகழ்தீத் தானாய்க்
கன்றியெரிக் குதல்விலக்க லிலவூனிற்
சிலவிலக்கிக் கசிந்து நீயோர்
ஒன்றருந்த லெனையொருவன் றரவுணினூன்
கொலைதடுத்தாண் டுரைத்திடாயால். (17)

*அன்றுஅழற்கு ஒப்புஅறிஞர் எதிர்அரு வினையைச்*
*சுடுதலினால் அன்றி யாதும்*
*தின்றல் மருள் அருளினர் வீட்டுஅமுது உளநீர்*
*ஆடிஉண்போர் திகழ்தீத் தானாய்க்*

*கன்றுளரிக் குதல்விலக்கல் இலஊனில்*
*சில விலக்கிக் கசிந்து நீஓர்*
*ஒன்று அருந்தல் எனைஒருவன் தரஉண்ணின்ஊன்*
*கொலைதடுத்து ஆண்டு உரைத்திடாய் ஆல்*

**அன்று அழற்கு ஒப்பு அறிஞர் எதிர் அருவினையைச் சுடுதலினால்** - எ-து. அக்கினிக்குச் சமானம் ஞானி என்பது ஒக்கும். அதுகொண்டு நீ கூறியது அருத்தமன்று. மற்று எங்ஙனம் எனின், ஞானியானாவன் சஞ்சித கன்மத்தைக் (நிகழ்வினை) குரு கடாட்சத்தால் (அருள்) போக்கிப் பிராரத்த (முன்வினை) கன்மத்தை எடுத்த உடலின்கண்ணே அனுபவித்துத் தொலைத்து மேலும் ஒரு சனனத்துக்கு ஏதுவாக வரும் ஆகாமிய கன்மத்தைத் (எஞ்சிய வினை) தற்போதம் (தன்னையும் கடவுளையும் அறியும் அறிவு) இறந்த இடத்து உண்டாகிய ஞானாக்கினியால் சுடுதலின் அக்கினிக்கு ஒப்பு என்பர்.

இதற்குப் பிரமாணம் : **சிவப்பிரகாசம்,**

எல்லையில் பிறவி நல்கும் இருவினை எரிசேர் வித்தின்
ஒல்லையின் அகலும் ஏன்ற உடல்பழ வினைகள் ஊட்டும்
தொல்லையில் வருதல்போலத் தோன்றுஇரு வினைகள் உண்டேல்
அல்ஒளி புரையும் ஞானத்து அழல்உற அழிந்துபோமே

*(சிவஞானியின் சஞ்சிதவினை குருவினாலும் ஆகாமியவினை சிவஞானத்தாலும், பிரார்த்தவினை அனுபவத்தினாலும் தீரும்.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

**அன்றியாதும் தின்றல் மருள்** - அல்லது யாதொரு பதார்த்தமும் தள்ளாது புசிப்பான் ஞானி என்னுமிடத்து ஒருவர் மலாதிகளை இடினும் தள்ளாது புசித்தல் வேண்டும். அப்படிப் புசித்ததனால் குற்றம் யாது எனின், அங்ஙனம் செய்தல் மிகுதியும் அறியாமையினைத் தருவதாகிய பைத்தியம் என்னப்படும். ஆதலின் அறிவுடையோர்க்கு அறியாமை கூறுதல் மிகவும் பழுது. ஞானியானவன் யார் எனின், **அருளினர் உள நீர் ஆடி வீட்டு அமுது உண்போர்** - ஞானிகள் எனப்படுவோர் அந்தக் கரணம் புறக்கரணம் அடக்குதல், ஒருவழிப்படுதல், பொறை, திடம், ஞானம் அடைதல், சத்தியம் கூறுதல், இன்சொல் கூறுதல், தானம் செய்தல், உயிர்கட்கு இதம் செய்தல் ஆதியான மானத தீர்த்தமாடி

முத்தியாகிய அமுதினை உண்டு இருப்போர் எனக்கொள்க.

இதற்குப் பிரமாணம் : **காசிகண்டம்,**

சத்தியம் தானம் சமம்தமம் இன்சொல்
சாற்றுதல் ஒருவழிப் படுதல்
புத்தியே முதல கரணம்ஓர் நான்கும்
அடக்குதல் புலன்கள் போம்வழியின்
உய்த்திடாது அமைத்தல் பொறைதிடஞானம்
உயிர்க்குஎலாம் தண்ணளி புரிதல்
இத்திறம் அனைத்து மானத தீர்த்தம்
எனஎடுத்து இயம்பினர் மேலோர்

*(உண்மை, ஈகை, இன்சொல், புலனடக்கம், பொறுமை, ஞானம், கருணை முதலியவற்றைக் கடைப்பிடிப்பது மானத தீர்த்தமாகும்.)*

அன்றியும்,

உரைப்பரு மானத தீர்த்தம் ஓதிடில்
சுருக்கமின் ஞானநீர் தோய்தல் மற்றது
விருப்பொடு வெறுப்பென விளம்பப் பட்டதோர்
கருப்புகுத்திடும் மலம் கழுவும் என்பவே

*( மானத தீர்த்தம் என்பது ஞானவெள்ளத்தில் அழுந்துதலாகும். அது விருப்பு வெறுப்புக்கள் எனப்படும் பிறவியைத் தரும் கன்ம மலத்தைக் கழுவும் என்பர்.)*

என்றும், **மெய்மொழிச் சரிதை,**

சத்தியம் உரைக்க நாளும் சகலபல் உயிர்கட்கு எல்லாம்
நித்தலும் இதமேசெய்ய நினைப்பது சிவத்தை என்றும்
அத்தன் வேதஆகமத்தின் அருளிய பொருளும் மூன்றும்
எத்திறச் சமயத்தோர்க்கும் எம்மதங்களுக்கும் இட்டம்

*(நாளும் உண்மை பேசுதல், எல்லா உயிர்களுக்கும் எப்போதும் நன்மையே நினைப்பது, சிவபெருமானை எப்போதும் நினைப்பது ஆகிய மூன்றும் எல்லோருக்கும் விருப்பமானவை ஆகும்.)*

என்றும்,

உடுப்பது சீலம்உணவு வீட்டுஅமுதம் உவப்பது ஞானமா மடந்தை
கொடுப்பதும் அருளைக் கொள்வதும் அறத்தை இருப்பதும்
அருந்தவக் குகையாம்

விடுப்பது குற்றம் தொடுப்பது சாந்தம் வெல்வதும் தம்மைமெய்க்
குரவன்
அடித்தல மலரே முடிப்பது பிறப்பை அறுப்பவர்க்கு அருந்தொழில்
இவையே

(ஒழுக்கத்தையே உடையாக உடுத்து, வீடுபேற்றையே உணவாக விரும்பி, ஞானத்தையே துணையாக உவந்து, அருள், அறம் முதலியவற்றைக் கடைப்பிடித்து தவமாகிய குகையிலிருந்து குற்றத்தை விடுத்து, சாந்தத்தை விரும்பி, தம்மையே வென்று, குருவின் பாதத்தைத் தொழுது இருப்பவர் பிறவியை அறுப்பர்.)

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இத்தன்மையுடையோர் ஞானிகள் என்றமையால் இதற்கு விரோதமாகிய கொலைகள், புலால் உணவு முதலாகிய துர்க்கருமங்களை ஆசைமிகுதியால் கொண்டு அந்நெறியே செந்நெறி என்று நாட்டுவோர் அஞ்ஞானிகள் என்பதும் ஆயிற்று.

இதற்குப் பிரமாணம் : **சிவதருமோத்தரம்,**

பண்ணான் பரமசிவஞானி பாவவிதமும் பயிற்றிடினும்
உண்ணான் போகம்என பனுவல்உரைக்கும் அதனால்ஒரு தலையே
நண்ணேந் துயரம்எனப் பெரியோர் நவையும் இயற்றி நசையாலே
மண்ணோர்அவல மாசுஉரையை மாற்றிஇடவே வல்லார் ஆர்

(சிவஞானி பாவத்தை ஒரு போதும் செய்யான். உலக இன்பங்களில் ஈடுபடமாட்டான்.

என்றும், **சிவஞான தீபம்,**

நிலைஉறுதி ஆசாரம் ஒழுக்கம் சீல
நிறைஅறிவு கருணைதவ நெறிநிலாமல்
கொலைகளவு கள்காமம் முதலாகஉள்ள
கொடும்பவமே தவமாகக் கொள்ளும் தீயோர்
உலகில்அரும் சிவன்அருள் நூல் ஓதல் ஆகாது
ஓதினும் அங்கு அவர் உரைகொள் ளொணாது நீலம்
புலையர்மருவிடும் தெருவில் பொல்லாக்கும்பி
பொருந்திஇடும் குழிஅதனுள் பூத்தது ஆமே.

(புலனடக்கம், ஒழுக்கம் நிறைந்த அறிவு, கருணை, தவம் முதலியவற்றை விட்டு, தீயோர் அருள் நூல்களை ஓதுதல் கூடாது.

*அவ்வாறு ஓதின் அவர் உரையைக் கொள்ளக்கூடாது.)*

என்றும்

ஞானவார் அமுதச் சுவையினைச் செவியால்
நலம்பெறக் கேட்டஅப் பொழுதே
ஆனகாரியமும் ஆகும் காரியமும்
ஆயலாக் கடவ காரியமும்
கானல்நீர் ஆயே கழிதரும் என்றால்
களிதர அமுதமே உண்ட
ஞானிதான் அழியும் விடயமே விடுமோ
நண்ணிடின் ஞானிஅன்று அவனே

*(ஞான அமுதச் சுவையைக் காதினால் நலம்பெறக் கேட்டபோது நடந்து முடிந்த காரியமும் நடக்கவுள்ள காரியமும் கானல் என்றால் அதனை ஞானி விரும்ப மாட்டான். விரும்பின் அவன் உண்மையான ஞானி அல்ல.)*

என்றும், **அருட்பிரகாசம்,**

வேதத்தில் ஆகமத்தில் புகல்தூய விதிதவறார்
கோதுற்று இடினும் தமதுஅற்று இருப்பார்கள் கொள்கைஅன்றித்
தீதைத் தினம்உனைப்போலும் புரிந்தது செந்நெறியா
வாதிப்பரோ கெடுவாய் சிவஞானம் கைவந்தவரே

*(சிவஞானிகள் வேதாகமவிதி தவறாதுதான் என்ற உணர்வற்று இருப்பர். உன்னைப் போல் தீயவற்றை நாளும் செய்து அதுவே நன்னெறி என்று வாதிடார்.)*

என்றும்

நிலையாம் புலமைகொள் வள்ளுவர் மூலர் நிகழ்த்து சைவத்
தலையாய மூவர் திருவாத வூரர் தருதமிழுள்
இலையாக ஆகமாதியும் கூறா உனக்குஇவ் இருநிலமேல்
கொலையாதி ஞானி பணலாம் என்றார் எவர் கூறுகவே

*(வள்ளுவர், திருமூலர், மூவர், மாணிக்கவாசகர் முதலிய பெரியோர்கள் நூல்களில் இல்லாத, ஆகம நூல்களிலும் இல்லாத கொலை நன்று என்ற கருத்தை உனக்குக் கூறியவர் யார்?)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

**இதுஅன்றி நீ அக்கினிக்கு ஒப்பு என்ற சொல்லுக்கு இன்னம் ஒரு தோடம் உண்டு. கூறுதும். திகழ் தீத்தானாய்க்கன்றி எரிக்குதல் விலக்கல் இல ஊனில் சில விலக்கிக் கசிந்து நீ ஓர் ஒன்று அருந்தல்** எனை - பிரகாசமயம் ஆகிய அக்கினி ஆனது ஒரோரு முன்னிலையாக ஒன்றினைச் சுடுவது அன்றித் தனது சுதந்திரத்தால் பற்றி ஒன்றினையும் சுடாது. பதார்த்தங்களை இச்சித்துச் சுட்டும் வெறுத்துத் தள்ளியும் விடாது. அந்நெருப்பினை நீ புலால் உண்டலினால் உனக்கு ஒப்புக் கூறினை ஆயில், பன்றி மாமிசம் போல நாய், கழுதை முதலியவற்றின் மாமிசத்தையும், உடும்பு மாமிசம் போல ஓணான் மாமிசத்தையும் சமமாகக் கொண்டு புசித்தல் வேண்டும். அதுவன்றி அன்னபானம் ஆதிகளில் ஈ, எறும்பு, பாச்சை, கரப்பான் முதலியவற்றின் ஒன்று வீழ்ந்திருப்பக் காணினும், மிகவும் அரோசகம் (அருவருப்பு) உடையவனாய் உண்ட சோற்றையும் கான்றிடக் (வாந்தி) கண்டேம். அதனானும் ஒரொரு மாமிசத்தை இச்சித்துப் புசித்தலினாலும் அக்கினிப் ஒப்பு என்றல் கூடாது. சில பதார்த்தத்தில் அரோசகம் அடைவன் என்பதற்குப் பிரமாணம் :

உண்டிடும் சோற்றின் ஊடேஓர் மயிர் எறும்பு யாதும்
கண்டுமுன்பு அருந்திலாய் முன்பு அயின்றதும் கான்றிட்டாயான்
மண்தனில் பன்றிஆதி மலத்தைமுன் பழக்கத்தால் உட்
கொண்டிட விரும்புமாறுஎன் கூறுதி அறிவிலாதோய்.

*(சோற்றில் மயிர் முதலியன கிடந்தால் அருவறுத்து முன்பு உண்டதையும் கக்கிவிடும் நீ மலமுண்ணும் பன்றி முதலியவற்றை உண்ணக் கருதியது எவ்வாறோ?)*

அன்றியும்,

ஊறுகாய் ஆதிதன்னின் உதித்தது ஓர் புழுக்கண்டாயேல்
வேறவே வீசிச் சிந்தை மெய்மிகக் குலைந்து உற்றாயால்
நாறும்ஊன் புழுத்தது ஏனுநனிமிக விரும்பி உள்ளம்
தேறிநீ உண்டவாறு என் செப்புதி தெளிவு இலாதோய்

*(ஊறுகாய் முதலியவற்றில் புழுவைக் கண்டால் அதை வீசி எறிந்து அருவருக்கும் நீ புழுக்கும் ஊனினை விரும்பியது எவ்வாறு?)*

அன்றியும்,

தகர்உனது எதிரே சிந்தத் தான்தெறித் திட்ட கோழை
புகலுமுன் மீதில் தாக்கப் பொறாதுஉளம் குலைந்துற்றாயால்
பகர்தரும் அவற்றின்ஊனைப் பற்றிய மூளையோடும்
அகமகிழ்ந்து அயின்றவாறு என் அறைகுதி அறிவுஇலாதோய்.

*(ஆடு உன் எதிரே கோழையைச் சிதறினால் அருவருத்து மனம் கலங்கும் நீ, அதன் ஊனையும், மூளையையும் மகிழ்ச்சியோடு உண்பது எவ்வாறு?)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

பிழையுறுதல் சிறிது என்பது தொட்டு நீயோர் ஒன்று அருந்தல் என்னை என்பது காறும் (வரை) சத்தி பூசைக்கு புலால் நிவேதிக்கலாம் என்ற வாமியை மறுத்து, சத்தியாதி தேவதைகளுக்கு மாமிச நிவேதனம் யோக்கியம் அன்று என்றும், வேள்வி செய்தல் வேத விதி என்றும், வேதாகமம் ஈசுரவாக்கியம் என்றும், பரமுத்தியால் இன்பம் உண்டு என்றும், அட்ட கன்மத்தால் துன்பம் உண்டு என்றும், தன் உயிர் போல மன்னுயிர்க்கு இரங்கும் அருளுடையோரே ஞானிகள் என்றும் சாதித்தது.

இப்படி வாமியை மறுத்த வேளையில்,அவண் இருந்த பௌத்தன் சைவ சித்தாந்தியை நோக்கிக் கூறுகின்றான்.

இங்ஙனம் வாமியை நீர் மறுத்தது உபயமத (இருவர் கருத்தும் ஒத்தது) சித்தாந்தமே. அஃது எங்ஙனமெனின், வாமியானவன் புலால் இச்சையினால் ஒன்றைக் கொன்று அருந்துதலின், அவனது சரித்திரத்தால் புண்ணியமே இல்லை. ஒரு ஞானியானவன் தானாக ஒன்றையும் கொன்று அருந்த ஒண்ணாது, வேறு ஒருவன் ஒன்றினைக் கொன்று அதில் ஊனை ஊட்டினன் ஆகில் வாங்கிப் புசிக்கலாம். அஃது எப்படியெனின் ஒருவன் தண்ணீர்ப்பந்தல் வைத்தால் அந்தப் புண்ணியம் தண்ணீர்ப்பந்தல் வைத்தவனை அடைதலும், தண்ணீர் குடித்தவனுக்குத் தாகம் நீங்குதலும் அன்றிப் புண்ணியம் இவனுக்கு இல்லாதது போல ஒரு சீவனைக் கொன்றவனுக்குத் தோடமன்றித் தின்றவனுக்கு தோடம் இல்லை என்று கூறுதலும் அவனை மறுத்து மேல் உத்தரம் கூறகின்றார்.

மேல்விடை : **ஒருவன் ஊன் தர உணின் கொலை தடுத்து ஆண்டு உரைத்திடாயால்** எ-து. ஒருவன் ஒரு சீவனைக் கொன்று அந்தப் புலாலை உனக்குப் புசிப்பிக்க நீ புசித்தாய் ஆகில், உன்னையும்

அந்தப்பாவம் விடாது. அது ஏன் எனின், நீ புலால் உணவு திண்பவன் ஆதலின், உன்னுடைய மனசு சீவகொலையையே இச்சித்திருக்கும். அதனால் ஒருவன் கொன்றிடுமிடத்து அது தோசம் என்று விதித்து விலக்கினால் உனக்கு அந்தப் புலாலை ஊட்டான் என்பது குறித்துத் தோசம் என்று விலக்காய், ஆதலானும், கொலையை இச்சித்த தோசம், புலால் உணவு தோசம், கொலை தடுத்துப் பகர்கிலாததோசம் இம்மூன்று தோசமும் உனக்கு உண்டாம் எனக் கொள்க. எ-று,

இதற்குப் பிரமாணம் : **சிவதருமோத்தரம்,**

**உண்ணஊனை விரும்பி உயிர்க்கொலை**
**எண்ணுவான் கொலைகண்டு இரங்கான் கொலை**
**பண்ணு வாரைத் தடுத்தும் பகர்கிலான்**
**நண்ணுவான் இவரோடு எனும் நால்வரும்**

*(ஊன் உண்ண உயிர்க்கொலை செய்ய நினைப்பவன், கொலை கண்டு இரங்காதவன், அதைத் தடுக்காதவன், அதை உண்பவன் எனும் நால்வரும் பாவிகளே.)*

என்றும், **இதிகாசம்,**

**கொன்றான் கொலச்சொன்னான் கூசஅறுத்தான் அட்டான்**
**தின்றான் விலக்கிடான் சென்றுஒன்று - கொன்றவன்அக்**
**குட்டவங்கள் இட்டுளிக்க வெந்துகொடு வெந்நரகில்**
**பட்டு அழன்று வீழ்வார் பதைத்து**

*(கொன்றவன், கொல்லச் சொன்னவன், அறுத்தவன், சமைத்தவன், தின்றவன், இவற்றை விலக்காதவன் ஆகியோர் வெந்நரகில் வீழ்ந்து துன்புறுவர்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இ-து. ஆகாமியத்தைச் சுடுதலினால் ஞானி அக்கினிக்கு ஒப்பு என்றும், புலால் உண்பவன் இராகத்துவேசம் உடையவன், ஆகையால் அக்கினிக்கு ஒப்பு அல்லன் என்றும் ஒருவன் கொன்றிடத் தின்றான் எனினும் பாவம் உண்டு என்றும் கூறியது.

இப்படிக் கூறிய சைவ சித்தாந்தியை நோக்கி மேலும் பௌத்தரில் ஏகதேசி கூறுகின்றான்.

இங்ஙனம் அந்தப் பௌத்தன் கூறிய உரை பழுது. அஃது ஏனெனில், ஒருவன் கொன்றிடத் தின்று கொலை தடுத்துப் பகராமையால் யாவன் ஒருவன் சீவகொலை கண்ட இடத்து இது தோடம் என்று தடுக்கவும், அவன் அது கேளாமல், ''வந்த தோடம் எனக்கு வரட்டும், நீர் உண்ணும்'' என்று ஊட்டினால் புசிக்கலாம்; நமக்கு அப்பொழுது தோடமில்லையென்று கூறுதலும் அதற்கு உத்தரம் கூறுகின்றார்,

உரைத்துமுறா பயங்கொலைசெ யொருவனைச் சார்ந்
 தவற்குநர குளமண் ணாள்வோன்
இருந்தறையிற் பொருடிருடே லெனக்கவர்வோ
 னொடுந்தமர் வீய்ந் திடலிற் றானாய்
மரித்திடினு மகத்தலதூன் றினிலருளன்
 மையிற் றுயர்பின் மறலிதூதர்
அருத்தன்மெயிக் கலியின் மருந் துயிருயுங்கண்
 டிதியிவற்றூ னருந்த றீதே. (18)

*உரைத்தும்உறா பயம்கொலைசெய் ஒருவனைச் சார்ந்து*
 *அவற்குநரகு உளமண் ஆள்வோன்*
*இருத்து அறையில் பொருள்திருடேல் எனக்கவர்வோன்*
 *ஒடும்தமர் வீய்ந்திடலில் தானாய்*
*மரித்திடினும் மகத்துஅலது ஊன்தினல் அருள்*
 *அன்மையில் துயர்பின் மறலி தூதர்*
*அருத்தன் மெய்இக் கலியின்மருந்து உயிர்உயும்கண்*
 *திதிஇவற்று ஊன் அருந்தல் தீதே*

**உரைத்தும் பயம்உறா கொலைசெய் ஒருவனைச் சார்ந்தவற்கு நரகு உள; மண்ணாள்வோன் இருத்து அறையில் பொருள் திருடேல் எனக் கவர்வோன் ஒடும் தமர் வீய்ந்திடலின்** - கொலை தீதென்று சொல்லியும் அச்சம் அடையாது அதனைச் செய்யும் ஒருவனை வேறு ஒருவன் கூடியிருந்து அவனுடைய அன்னபானாதிகளை உட்கொண்டான் ஆகில் உட்கொண்டவனும் அவன் அடையும் நரகம் அடைவன். அஃது எங்ஙனம் எனின், ஒருவன் இராசாவினது களஞ்சியத்தில் திருடும் போது அவனது சிநேகராய் இருந்துள்ளவர்கள் அவனை நோக்கி ''இராசாவினது களஞ்சியத்தில் திருடுதல் மகாகெடுதி; அது செய்யவொண்ணாது என்ற இடத்துக் கேடுவந்தால் நான் அனுபவிக்கிறேன்; உங்களுக்கு என்ன? நீங்கள் என் வீட்டிலிருந்து

அந்தப்பாவம் விடாது. அது ஏன் எனின், நீ புலால் உணவு திண்பவன் ஆதலின், உன்னுடைய மனசு சீவகொலையையே இச்சித்திருக்கும். அதனால் ஒருவன் கொன்றிடுமிடத்து அது தோசம் என்று விதித்து விலக்கினால் உனக்கு அந்தப் புலாலை ஊட்டான் என்பது குறித்துத் தோசம் என்று விலக்காய், ஆதலானும், கொலையை இச்சித்த தோசம், புலால் உணவு தோசம், கொலை தடுத்துப் பகர்கிலாததோசம் இம்மூன்று தோசமும் உனக்கு உண்டாம் எனக் கொள்க. எ-று,

இதற்குப் பிரமாணம் ៖ **சிவதருமோத்தரம்,**

**உண்ணஊனை விரும்பி உயிர்க்கொலை**
**எண்ணுவான் கொலைகண்டு இரங்கான் கொலை**
**பண்ணு வாரைத் தடுத்தும் பகர்கிலான்**
**நண்ணுவான் இவரோடு எனும் நால்வரும்**

*(ஊன் உண்ண உயிர்க்கொலை செய்ய நினைப்பவன், கொலை கண்டு இரங்காதவன், அதைத் தடுக்காதவன், அதை உண்பவன் எனும் நால்வரும் பாவிகளே.)*

என்றும், **இதிகாசம்,**

**கொன்றான் கொலச்சொன்னான் கூசஅறுத்தான் அட்டான்**
**தின்றான் விலக்கிடான் சென்றுஒன்று - கொன்றவன்அக்**
**குட்டவங்கள் இட்டுளிக்க வெந்துகொடு வெந்நரகில்**
**பட்டு அழன்று வீழ்வார் பதைத்து**

*(கொன்றவன், கொல்லச் சொன்னவன், அறுத்தவன், சமைத்தவன், தின்றவன், இவற்றை விலக்காதவன் ஆகியோர் வெந்நரகில் வீழ்ந்து துன்புறுவர்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இ-து. ஆகாமியத்தைச் சுடுதலினால் ஞானி அக்கினிக்கு ஒப்பு என்றும், புலால் உண்பவன் இராகத்துவேசம் உடையவன், ஆகையால் அக்கினிக்கு ஒப்பு அல்லன் என்றும் ஒருவன் கொன்றிடத் தின்றான் எனினும் பாவம் உண்டு என்றும் கூறியது.

இப்படிக் கூறிய சைவ சித்தாந்தியை நோக்கி மேலும் பௌத்தரில் ஏகதேசி கூறுகின்றான்.

இங்ஙனம் அந்தப் பௌத்தன் கூறிய உரை பழுது. அஃது ஏனெனில், ஒருவன் கொன்றிடத் தின்று கொலை தடுத்துப் பகராமையால் யாவன் ஒருவன் சீவகொலை கண்ட இடத்து இது தோடம் என்று தடுக்கவும், அவன் அது கேளாமல், ''வந்த தோடம் எனக்கு வரட்டும், நீர் உண்ணும்'' என்று ஊட்டினால் புசிக்கலாம்; நமக்கு அப்பொழுது தோடமில்லையென்று கூறுதலும் அதற்கு உத்தரம் கூறுகின்றார்,

உரைத்துமுறா பயங்கொலைசெ யொருவனைச் சார்ந்
தவற்குநர குளமண் ணாள்வோன்
இருந்தறையிற் பொருடிருடே லெனக்கவர்வோ
னொடுந்தமர் வீய்ந் திடலிற் றானாய்
மரித்திடினு மகத்தலதூன் றினிலருளன்
மையிற் றுயர்பின் மறலிதூதர்
அருத்தன்மெயிக் கலியின் மருந் துயிருயுங்கண்
டிதியிவற்றூ னருந்த றீதே. (18)

*உரைத்தும்உறா பயம்கொலைசெய் ஒருவனைச் சார்ந்து*
*அவற்குநரகு உளமண் ஆள்வோன்*
*இருத்து அறையில் பொருள்திருடேல் எனக்கவர்வோன்*
*ஒடும்தமர் வீய்ந்திடலில் தானாய்*
*மரித்திடினும் மகத்துஅலது ஊன்தினல் அருள்*
*அன்மையில் துயர்பின் மறலி தூதர்*
*அருத்தன் மெய்இக் கலியின்மருந்து உயிர்உயும்கண்*
*திதிஇவற்று ஊன் அருந்தல் தீதே*

**உரைத்தும் பயம்உறா கொலைசெய் ஒருவனைச் சார்ந்தவற்கு நரகு உள; மண்ணாள்வோன் இருத்து அறையில் பொருள் திருடேல் எனக் கவர்வோன் ஒடும் தமர் வீய்ந்திடலின்** - கொலை தீதென்று சொல்லியும் அச்சம் அடையாது அதனைச் செய்யும் ஒருவனை வேறு ஒருவன் கூடியிருந்து அவனுடைய அன்னபானாதிகளை உட்கொண்டான் ஆகில் உட்கொண்டவனும் அவன் அடையும் நரகம் அடைவன். அஃது எங்ஙனம் எனின், ஒருவன் இராசாவினது களஞ்சியத்தில் திருடும் போது அவனது சிநேகராய் இருந்துள்ளவர்கள் அவனை நோக்கி "இராசாவினது களஞ்சியத்தில் திருடுதல் மகாகெடுதி; அது செய்யவொண்ணாது என்ற இடத்துக் கேடுவந்தால் நான் அனுபவிக்கிறேன்; உங்களுக்கு என்ன? நீங்கள் என் வீட்டிலிருந்து

சுகமாக உண்டு கொண்டிருங்கள்" என்றால், அவன் வார்த்தையை நம்பி இருந்தவர்களும் அவனோடு மரணம் அடைதல் போலும் எனக் கொள்க.

இப்படிச்சொன்ன சைவ சித்தாந்தியை நோக்கிப் பௌத்தரில் பின்னும் ஒருவன் கூறுகின்றான்,

இங்ஙனம் இவர்கள் கொன்று தின்னலாம் என்னும் அதுவும் பாவம். ஒருவன் கொன்றிடத் தின்னலாம் என்னும் அதுவும் பாவம். கொன்றிடும் அளவில் கொலை தடுத்துக் கூறிப் பின்பு தின்னலாம் என்னும் அதுவும் பாவம். யாவன் ஆயினும் பிறன் கொலையினால் இறந்த சீவனது ஊனைத் தின்பான் ஆகில் "கொன்றார் பாவம் தின்பார்க்கும் உண்டு." என்று கூறிய உலகவழக்கு உண்மையால் இவனுக்குத் தோடம் உண்டு என்பது நிச்சயம். இவையன்றித் தன் இயல்பாய் மாய்ந்த சீவன்தான் மண்ணினை மரத்தினை ஒக்கும். அவற்றினைப் புசித்தான் ஆகில் பாவம் இல்லை.

மேல்விடை: **தானாய் மரித்திடினும் மகத்தலது ஊன்தினல் அருள் அன்மையில் பின்மறலி தூதர் துயர் அருத்தல் மெய்.** எ-து. தன்னியல்பாய் மாய்ந்த சீவனது ஊன் ஆயினும் யாகம் அல்லாத இடத்து ஊன் அருந்துதல் எல்லாம் உயிர்களிடத்து அருள் அல்லாத படியினாலே, ஊனினை உண்டு வந்தோன் அவற்றினது இச்சையால் மற்றொரு சீவனுக்கு மரணம் வந்த இடத்தும் இரங்காது மகிழ்வை அடைவன் ஆதலின் அதுவும் கொலையே. ஆதலின், எவ்விதத்தான் ஆயினும் புலால் உண்போர் நரகத்தின் கண் யமதண்டம் அடைதலே உண்மை.

இதற்குப் பிரமாணம் : **திருவள்ளுவர்,**

படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றுஊக்காது ஒன்றன்
உடல்சுவை உண்டார் மனம்

(ஓர் உயிரின் உடம்பைச் சுவைத்து உண்டவன் மனம் புலாலையே நினைக்கும். அருள் செலுத்துவதைப்பற்றி நினைக்காது.)

அன்றியும்,

பொருள்ஆட்சி போற்றாதார்க்கு இல்லைஅருள் ஆட்சி
ஆங்குஇல்லை ஊன்தின் பவர்க்கு

*(உயிர்களைக் கொன்று தின்பவர்களுக்கு அருளுடையவராக இருக்கும் சிறப்பு இல்லை.)*

அன்றியும்,

செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின்தலைப் பிரிந்த ஊன்

*(குற்றம் என்பதைத் தெளிவாகப் புரிந்து அதைச் செய்யாது நீங்கிய அறிவினை உடையவர்கள் உயிர்க்கொலையால் வந்த புலாலை உண்ணார்)*

அன்றியும்,

உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு

*(உண்ணாமை என்ற அறம் அழியுமாறு புலால் உண்டால், உண்டவனைக் கொடிய துன்பப் புதைசேறு வெளியே வர விடாது.)*

என்றும், **திருமந்திரம்,**

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாரும் காண இயமன்தன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகிடை
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே

*(புலாலை உண்ணும் புலயரை எமதூதர்கள் கரையானைப் போலப் பற்றித் தீவாய் நரகத்தில் கிடத்தி வைப்பர்)*

என்றும், இதிகாசம்,

இட்டஇரை ஆசையால் எய்தியமீன் தூண்டில்வாய்ப்
பட்டதுஎன நாவிரசம் பார்த்துஉலகர் - கெட்ட
இருளார் உலகத்தில் எய்துவர்கள் என்றார்
அருளாரு நெஞ்சத் தவர்

*(நாவின் சுவைக்கு அடிமையாகிப் புலால் உண்போர் நரகத்தை அடைவார்கள் என்று அருளாளர்கள் கூறுவர்)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

எவ்விதத்தும் ஊன்தின்றால் நரகம் என்பதனால் பிராண ஆனிவரினும் விடம் போலக்கண்டு நீங்கவேண்டும் என்பது ஆயிற்று. மற்றொருவர் தண்டனையால் வந்து கூடினும், விடமுண்டவன் மாற்றமிழ்தம் தேடுதல்போல உடனே பரிகாரம் செய்ய வேண்டும் என்பதாயிற்று. இத்தன்மையது ஆதலின், ஊன் உண்ணார்க்கு ஊட்டுதலும் மகாபாவம் என்பதாயிற்று.

*இதற்குப் பிரமாணம் :*

**கொன்று இலாரைக் கொலச்சொலிக் கூறினார்**
**தின்று இலாரைத் தினச்சொலித் தெண்டித்தார்**
**பன்றியாய்ப் படியில் பிறந்து ஏழ்நரகு**
**ஒன்றுவார் அரன்ஆணை இது உண்மையே**

*(கொலைக்கு உடன்படாதவரை கொல்லுமாறு வற்புறுத்துவோர், புலால் உண்ணாதாரை உண்ணும்படித் தண்டித்தோர் பன்றியாய்ப் பிறந்தும் ஏழு நரகங்களில் கிடந்தும் துன்புறுவர்.)*

என்றும்,

**கொலைஅஞ்சாது ஒருவற்கு அஞ்சிக் கொன்றுளோர்**
**சிலர்சொல் அஞ்சிப் புலாலினைத் தின்றுஉளோர்**
**நிலையதாய் நரகத்திடை நிற்பர் என்று**
**அலகின் நான்மறை ஆகமம் ஓதுமே**

*(கொலைக்கு அஞ்சாது ஒருவனுக்கு அஞ்சிக் கொலை செய்வோர், பிறர் கூறியதால் புலால் தின்றோர் என இருதரத்தாரும் நரகத்தில் நிலையாய் இருப்பர் என வேதாகமங்கள் கூறும்.*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இப்படிச் சமயிகளுக்கு உத்தரம்கூறி மறுத்த காலையில், கற்றுஅறி மூடனாகிய ஒரு லௌகிகன சித்தாந்தியை நோக்கி நீர் இங்ஙனம் கூறியவற்றுள் வேள்வி மாத்திரம் விதிதமாய்க் (வெளிப்படை) காட்டி, மற்று எவ்விடத்தும் புலால் உண்டலைப் பாவம் என்று கூறினீர். அது கூடாது; அவ்வேள்வி போலத் திதி செய்யுமிடம், மருந்து உண்ணுமிடம், பிராணன் உய்யுமிடம் இவைகளினும் புலால் உண்ண விதி உண்டு என்று வேதாகம நூலின் இருத்தலின்.

மேல்விடை : **இக்கலியின் மருந்து உயிர் உயுங்கண் திதி இவற்று ஊன் அருந்தல் தீதே.** வேள்விபோலத் திதியாதிகள் சாத்திர விகிதமாயினும் இக்கலியுகத்தில் மருந்தில், உயிர் உய்யும் இடத்தில், திதியில் புலால் உண்ண ஒண்ணாது என்று புராதனவிதிதமாய் நடந்துவருதலின் அவற்றினைச் செய்தலும் குற்றம் என்று அறிவாயாக. எ-று.

இதற்குப் பிரமாணம்: **அருட்பிரகாசம்,**

மருந்தில் திதியின் உயிர் உய்யும் வாயின் மகம் அதனில்
அருந்தற்கு இயல்புஅது எனினும் கிருதுவின் அன்றிஉளம்
பொருந்தி புலால் உண்பரே கலியூடு அறம் பூண்டு இமையோர்
விருந்தில் சிறந்து அமுது ஊட்டப் பொன்னாட்டு உற வேண்டினரே

*(கலியுகத்தில் மருந்து, திதி, உயிர் பிழைக்கும் தறுவாய், வேள்வி ஆகிய இடங்களில் புலால் உண்ணலாம் என்று கூறினாய். இக்கலியில் வேள்வி தவிர மற்ற இடங்களில் ஊன் தீதே.)*

என்றும், **காசிகண்டம்,**

அருமகத்து அன்றி ஊன்சுவைத்து உடலம்
  வீக்குவோன் அதற்கு உடன்படுவோன்
கருவியிற் குறைத்தோன் பகர்ந்துளோன்
  கொணர்ந்தோன் வியந்துளோன் கடிகென வேவும்
திருவிலி யதனை அட்டவன் இவர்கள்
  எண்மரும் தீநரகு அடைவர்
பரிவின்ஊன் விடுத்தோர் நாள்தொறும் புரவி
  மகம்புரி பலன் பெறுகுவரால்.

*(வேள்வியல்லாது பிற இடங்களில் ஊன் உண்டவன், அதற்கு உடன்படுபவன், அறுப்பவன், சொல்பவன், கொண்டு வருபவன், பாராட்டுபவன், விரைவுபடுத்துபவன், சமைப்பவன் ஆகிய எண்மரும் நரகத்தையே அடைவர். ஊன் உண்ணாதவர் நாள்தோறும் பரிவேள்வி செய்த பயனை அடைவர்.)*

என்றும்,

குழைமுகம் தூங்கும் செம்மணிப் பசும்பொன்
  குண்டல வேதியர் நாளும்
அழன்முகத்து ஆற்றும் அருமருத்து அன்றிச்
  செந்தசை அருந்துநர் இல்லை

விழைவொடும் பயந்தோர்ப் பழிச்சிடார் இல்லை
வெங்கவறு ஆடுநர் இல்லை
கழிபெருங் குணத்துக் குரவனைப் பிழைப்போர்
அரும்பொருள் கவருநர் இல்லை.

*(வேதியர், வேள்வியல்லாத இடங்களில் ஊன் அருந்துதல் இல்லை, பெற்றோரை விருப்பத்தோடு பணியாதவர்கள் இல்லை; சூதாடுபவர்கள் இல்லை; குருவைப் பிழைத்தோரும், களவு செய்வோரும் இல்லை.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இ-து. கொலைஞரைச் சிநேகித்தலும் பாவம் என்றும் எந்த விதத்தினாலும் புலால் உணவு நரகமே விளைக்கும் என்றும் விதியுண்டாயினும் கலியுகத்தின்கண் யாகத்து அன்றி மற்றோர் இடத்திலும் புலால் உண்ண ஒண்ணாது என்றும் கூறியது.

இப்படிக் கூறிய சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னும் கற்றறிமூடன் கூறுகின்றான்.

யாகாதி நான்கு இடத்தினும் புலால் உண்ணலாம் என்று விதியிருக்க, யாகத்து உண்ணலாம் என்றும் மற்று இடத்து ஆகாது என்றும் தள்ளுதல் பழுது என்ற அளவில் அவனை நோக்கி மேல் உத்தரம் கூறுகின்றார்.

அருந்தனையன் றனைமனைதோள் பிறர்க்கீந்தும்
பெறுவதழ கக்கா லிக்காற்
பொருந்துமதோ விக்கலியீ டுணர்ந்தன்றோ
தமதாசாற் பூசித் தன்னோன்
திருந்துமனை பதங்கையாற் றீண்டாதர்ச்
சனைநாளும் செய்தார் மைதீர்
ிருந்தவரு நீமலத்தை மலத்துளமென்
றுணினூனுக் கிடுதி யூனே. (19)

*அருந்தனையன் தனைமனை தோள்பிறர்க்கு ஈந்தும்*
*பெறுவது அழகுஅக்கால் இக்கால்*
*பொருந்துமதோ இக்கலிஈடு உணர்ந்தன்றோ*
*தமது ஆசாற் பூசித்து அன்னோன்*
*திருந்துமனை பதம்கையால் தீண்டாது அர்ச்*
*சனை நாளும் செய்தார் மைதீர்*
*இரும்தவரும் நீமலத்தை மலத்து உளம் என்று*
*உணின் ஊனுக்கு ஊன் இடுதி ஊனே*

**அக்கால் மனை தோள் பிறர்க்கு ஈந்தும் அரும் தனயன் தனைப் பெறுவது அழகு இக்கால் பொருந்துமதோ கலியுகத்தைக் குறிக்க ஒண்ணாது** - எந்தக்காலத்தாயினும் விதியிருந்தபடி செய்யலாம் என்று நீ சொல்லுவை ஆகில், யாவன் ஆயினும் பிதிர்கருமம் செய்யும் பொருட்டுப் புத்திரரைப் பெறான் ஆயில் நற்கதியில்லை. ஆதலில் புத்திரர் இல்லாத செல்வஞ் செல்வமே அல்ல என்று நூல்கள் எல்லாம் கூறுதலின், தனக்குப் புத்திரோற்பத்தி இல்லாத இடத்துத் தன்னுடைய மனைவியைப் பிறருடன் கூட்டியும் புத்திரரைப் பெறலாம் என்னும் பொருள் கொடுத்தலினாலும் தத்தம் கவர்தலினாலும் ஒருவர் மகவுஎனப் புகுதலினாலும் தனயர் சேய் இருத்தலினாலும் தன்னால் ஒருவன் ஆவி உய்தலினாலும் கிடைத்த புத்திரரும் தனக்குப் புத்திரரே என்றும் கூறிய எழுவகைப் புத்திரரில் தன்னுடைய மனைவி வயிற்றில் பிறந்த புத்திரரே விசேடமாதலின் தன்னுடைய மனைவியைப் பிறரோடு கூட்டியும் புத்திரரைப் பெற்று வாழுதல் கலியுகம் அல்லாத யுகங்களுக்கெல்லாம் மிகச் சிறப்பாக வழங்கும். அந்தவிதி உனக்கு இந்தக் கலியுகத்தில் செய்யக்கூடுமோ? கூடாது. ஆதலின் காலத்துக்கு ஏற்றவிதி நடக்க வேண்டும் எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் : **காசி கண்டம்,**

எத்திரு உடையரேனும் இன்கனி மழலைச் செவ்வாய்ப்
புத்திரர் இலாதோர் என்றும் பொறியிலர்ஆய வாற்றால்
மெய்த்தவம் புரிந்து மைந்தர்ப் பெறுவதே விழைவர் யாரும்
உத்தநன் மகவும்ஓர்ஏழ் பான்மையா உரைப்பர் மேலோர்.

*(எல்லாச் செல்வங்கள் இருந்தும் குழந்தைப்பேறு வாய்க்கப் பெறாதவர்கள் திருவிலரே. எனவே அவர்கள் தவம் புரிந்தே மக்கட்பேறு வாய்க்கப் பெற வேண்டும்.)*

அன்றியும்,

மனைவிதன் கொழுநற்கு ஈன்றோன் மற்றவன் அருளினாலே
அனையவள் அயலார்க்கு ஈன்றோன் அரும்பொருள் கொடுத்துக் கொண்டோன்
இனிது உறு தத்த மைந்தன் மகவுஎனப் புகுந்த மைந்தன்
தனயர்சேய் தன்னலாவி உய்ந்தவன் தனயர் ஆவார்.

*(ஒருவனுக்கு ஏழுவகையில் புத்திரப்பேறு வாய்க்கப் பெற்றாலும் தன்*

*மூலம் மனைவி பெற்ற மகனே சிறந்தவன் ஆவான்)*

என்றும், **பிரமோத்தரகாண்டம்,**

காவலன் தனக்குப் பின்னோர்
   கான்முளை இல்லை என்று
பூவலயத்தின் உள்ளோர்
   புகல்வதும் பொருந்தார் வீறும்
யாவையும் உணர்ந்த நீதி
   வசிட்டன் அங்கு இயல்பின் ஆய்ந்து
பாவரும் துயரும் தீர்க்கும்
   படிநினைந்து இனைய செய்தான்

*(மைந்தனைப் பெற்ற வரலாறு : கன்மாடபாதன் என்னும் அரசன் தன் மனைவியைத் தொடின் மரணம் எய்துவான் என்னும் சாபத்தால் தவம் செய்ய வனம் செல்ல - குருவாகிய வசிட்டர் இரங்கி, அவ்வரசன் மனைவியாகிய மதயந்தியிடத்து மைந்தனைப் பெற்றருளினார் என்பது புராண வரலாறு.)*

அன்றியும்,

அருந்ததி அனைய கற்பின் மதயந்தி அணங்கனான் தோள்
பொருந்தி இன்கலவி துய்த்தோர் புதல்வனைத் தந்து தீரா
இருந்துயர் உலகம் தீர இயற்றினான் முனிவன் இப்பால்
பெருந்தகை தவம் செய்வானைப் பேய்மகள் ஒருத்தி பற்றி

*(மேற்கண்ட வரலாற்றின் விரிவு )*

என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

பின்னுங் கற்றறிமூடனை நோக்கிக் காலகர்மம் நடக்க வேண்டும் என்பதற்கு வலியுறுத்திக் கூறுகின்றார்.

மேல்விடை: **இக்கலி ஈடு உணர்ந்தன்றோ தமது ஆசான் பூசித்து அன்னோன் திருந்துமனை பதம் கையால் தீண்டாது அர்ச்சனை நாளும் செய்தார் மைதீர் இரும் தவரும் -** இக்கலியுகத்தினது வலியினை உணர்ந்தன்றோ தம்முடைய ஆசாரியரை விதிமுறையே முன்பு அர்ச்சித்துப் பின் அவரது தேவியை அர்ச்சிக்குமிடத்து அவளது பாத கமலங்களைக் கையினால் தீண்டாது அணுகி நின்று மலர்தூவி நாள்தோறும் அர்ச்சிக்கவும் செய்தனர் மயக்கம் தீர்ந்த பெரியோர்களும் எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் : **சைவ சமயநெறி,**

ஆசான் மனையை அடிதீண்டாது அர்ச்சிக்க
வாசார் மலரான் மதித்து

*(குருபத்தினியாயினும் அவள் திருவடியைத் தீண்டாது போற்ற வேண்டும்.)*

அன்றியும்,

அந்தயுகந் தோறும்அடி தீண்டி அருச்சிக்கை தகும்
இந்தக் கலியுகத்துஏ யாது.

*(முந்தைய யுகங்களில் குருபத்தினியைத் திருவடி தீண்டியும் அருச்சிப்பர்)*

என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

இப்படிக்கூறிய சைவசித்தாந்தியை நோக்கிக் கல்லாத மூடனாகிய லௌகிகன் ஒருவன் எழுந்து நின்று அங்ஙனம் இருந்து சபையை எல்லாம் கையமர்த்தி ஒன்று சொல்லுகின்றான். உன்னுடைய வீண் சாத்திரங்கள் எல்லாவற்றையும் புறத்திலே போட்டுவிடு. நான் ஒரு பேச்சுச் சொல்லுகிறேன். கேள். அது ஏதென்றால், உடம்பிலே இருக்கிற தசையை எல்லாம் உதிர்த்துப் போட்டு எலும்பு மாத்திரம் இருந்தால் அல்லோ புலால் விட்டதற்கு அடையாளம். நீ ஆயிரந்தான் சொன்னாலும் தசையாலான தேகத்திலே இருக்கும் வரையும் புலால் விட்டேன் என்கிறதே பொய். மனிதராய்ப் பிறந்தவர்கள் எல்லோரும் விழு சுவருக்கு மண் போடுதல் போல மாமிச தேகத்துக்குப் புலால் தின்ன வேண்டும். உன் பேச்சை மெய்யென்று கேட்டுப் புலாலை விட்டவன் கெட்டுப்போவான். பிழைக்கிறவன் ஒருக்காலும் கேட்கவே ஒண்ணாது என்ற அளவில், அவனை நோக்கிக் கைகொட்டிச் சிரித்து மேலும் உத்தரம் கூறகின்றார்.

மேல்விடை : **நீ மலத்து உளம் என்ற மலத்தை உணின் ஊனுக்கு ஊன் இடுதி** - நீ சொன்னது நல்லதுதான். ஊன் உடலுக்கு புலால் போடவேண்டும் என்ற நீ இதுமாத்திரம் செய்யாமல் இருந்தது குற்றம். அஃது ஏது என்று கேட்பாய் ஆகில், சொல்லுகிறோம். மலத்தை வயிற்றில் வைத்துக்கொண்டிருக்கிறாய். அல்லாமல் அத்தை விட்டு நீங்கியிருந்த இடந்தான் இல்லையே. அப்படி இருக்கப் பசி வந்த

*மூலம் மனைவி பெற்ற மகனே சிறந்தவன் ஆவான்)*

என்றும், **பிரமோத்தரகாண்டம்,**

காவலன் தனக்குப் பின்னோர்
காண்முளை இல்லை என்று
பூவலயத்தின் உள்ளோர்
புகல்வதும் பொருந்தார் வீறும்
யாவையும் உணர்ந்த நீதி
வசிட்டன் அங்கு இயல்பின் ஆய்ந்து
பாவரும் துயரும் தீர்க்கும்
படிநினைந்து இனைய செய்தான்

*(மைந்தனைப் பெற்ற வரலாறு : கன்மாடபாதன் என்னும் அரசன் தன் மனைவியைத் தொடின் மரணம் எய்துவான் என்னும் சாபத்தால் தவம் செய்ய வனம் செல்ல - குருவாகிய வசிட்டர் இரங்கி, அவ்வரசன் மனைவியாகிய மதயந்தியிடத்து மைந்தனைப் பெற்றருளினார் என்பது புராண வரலாறு.)*

அன்றியும்,

அருந்ததி அனைய கற்பின் மதயந்தி அணங்கனாள் தோள்
பொருந்தி இன்கலவி துய்த்தோர் புதல்வனைத் தந்து தீரா
இருந்துயர் உலகம் தீர இயற்றினான் முனிவன் இப்பால்
பெருந்தகை தவம் செய்வானைப் பேய்மகள் ஒருத்தி பற்றி

*(மேற்கண்ட வரலாற்றின் விரிவு )*

என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

பின்னுங் கற்றறிமூடனை நோக்கிக் காலகர்மம் நடக்க வேண்டும் என்பதற்கு வலியுறுத்திக் கூறுகின்றார்.

மேல்விடை: **இக்கலி ஈடு உணர்ந்தன்றோ தமது ஆசான் பூசித்து அன்னோன் திருந்துமனை பதம் கையால் தீண்டாது அர்ச்சனை நாளும் செய்தார் மைதீர் இரும் தவரும்** - இக்கலியுகத்தினது வலியினை உணர்ந்தன்றோ தம்முடைய ஆசாரியரை விதிமுறையே முன்பு அர்ச்சித்துப் பின் அவரது தேவியை அர்ச்சிக்குமிடத்து அவளது பாத கமலங்களைக் கையினால் தீண்டாது அணுகி நின்று மலர்தூவி நாள்தோறும் அர்ச்சிக்கவும் செய்தனர் மயக்கம் தீர்ந்த பெரியோர்களும் எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் : **சைவ சமயநெறி,**

ஆசான் மனையை அடிதீண்டாது அர்ச்சிக்க
வாசார் மலரான் மதித்து

*(குருபத்தினியாயினும் அவள் திருவடியைத் தீண்டாது போற்ற வேண்டும்.)*

அன்றியும்,

அந்தயுகந் தோறும்அடி தீண்டி அருச்சிக்கை தகும்
இந்தக் கலியுகத்துஏ யாது.

*(முந்தைய யுகங்களில் குருபத்தினியைத் திருவடி தீண்டியும் அருச்சிப்பர்)*

என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

இப்படிக்கூறிய சைவசித்தாந்தியை நோக்கிக் கல்லாத மூடனாகிய லௌகிகன் ஒருவன் எழுந்து நின்று அங்ஙனம் இருந்து சபையை எல்லாம் கையமர்த்தி ஒன்று சொல்லுகின்றான். உன்னுடைய வீண் சாத்திரங்கள் எல்லாவற்றையும் புறத்திலே போட்டுவிடு. நான் ஒரு பேச்சுச் சொல்லுகிறேன். கேள். அது ஏதென்றால், உடம்பிலே இருக்கிற தசையை எல்லாம் உதிர்த்துப் போட்டு எலும்பு மாத்திரம் இருந்தால் அல்லோ புலால் விட்டதற்கு அடையாளம். நீ ஆயிரந்தான் சொன்னாலும் தசையாலான தேகத்திலே இருக்கும் வரையும் புலால் விட்டேன் என்கிறதே பொய். மனிதராய்ப் பிறந்தவர்கள் எல்லோரும் விழு சுவருக்கு மண் போடுதல் போல மாமிச தேகத்துக்குப் புலால் தின்ன வேண்டும். உன் பேச்சை மெய்யென்று கேட்டுப் புலாலை விட்டவன் கெட்டுப்போவான். பிழைக்கிறவன் ஒருக்காலும் கேட்கவே ஒண்ணாது என்ற அளவில், அவனை நோக்கிக் கைகொட்டிச் சிரித்து மேலும் உத்தரம் கூறகின்றார்.

மேல்விடை : **நீ மலத்து உளம் என்ற மலத்தை உணின் ஊனுக்கு ஊன் இடுதி** - நீ சொன்னது நல்லதுதான். ஊன் உடலுக்கு புலால் போடவேண்டும் என்ற நீ இதுமாத்திரம் செய்யாமல் இருந்தது குற்றம். அஃது ஏது என்று கேட்பாய் ஆகில், சொல்லுகிறோம். மலத்தை வயிற்றில் வைத்துக்கொண்டிருக்கிறாய். அல்லாமல் அத்தை விட்டு நீங்கியிருந்த இடந்தான் இல்லையே. அப்படி இருக்கப் பசி வந்த

நேரத்தில் மலத்துக்கு மலமே இட வேண்டும் என்று பிறருடைய மலத்தை உண்ணாது இருப்பது ஏன்? அது அன்றி, மலம்விட்ட நேரங்களிலும் அருவருத்துக் கால்கை சுத்தி பண்ணுவது ஏன்? இப்படிச் செய்யாமல் இருக்கிற நீ மாமிசத்துக்கு ஊன் உடலுக்கு ஊன் இட வேண்டும் என்பது கூடாது.

இதற்குப் பிரமாணம் : **திருவள்ளுவர்.**

தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன்உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்

*(தன் உடம்பை வளர்க்க, வேறு ஓர் உயிரின் உடம்பைக் கூறு போட்டு உண்ணுகின்றவன் எல்லா உயிர்களிடத்திலும் அருள் செலுத்தும் மனம் உடையவனாக எவ்வாறு இருக்க முடியும்?)*

என்றும், **காசிகண்டம்**

புழுவும் தசையும் வெண்ணினமும்
பொதிந்த குரம்பை வீக்குதற்குக்
கழியூன் நுகர்ந்தோர் கொடுநரகில்
கற்பகாலங் கிடந்து அழுந்தி
விழைவின் முன்னர்த்தான் நுகர்ந்த
விலங்கும் அவர்தம் மெய்த்தசையை
அழிவெம் பசியால் பறித்து அருந்துக
என்னும் பான்மை அறிந்தேயோ

*(புழுவும் நிணமும் நிறைந்த உடலைப் பெருக்குதற்கு ஊன் உண்போர் கற்பகாலம் கொடுநரகில் கிடந்து தாமுண்ட விலங்குகளால் உண்ணப் பெற்றுத் துன்புறுவர்)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இங்ஙனம் லௌகீகருக்கெல்லாம் தூல உத்தியாகச் சொல்லி மறுக்கவேண்டியது அவரது அடங்காமையைக் குறித்து என்க. சித்தாந்தியார் கைகொட்டிச் சிரித்தான் என்று உரையில் வருவித்தது அங்ஙனம் கூறும் லௌகீகரது தூல உத்தியைக் குறித்து எடுத்துக் கூறியது எனக் கொள்க. இங்ஙனம் உரை மிகவும் தூலவார்த்தைகளாக விரிக்க வேண்டியது அவரது இதய நுட்பம் காட்டுதற்கு என்க.

இ-து. முற்காலவிதி இக்காலத்திற் செல்லாமையால் காலத்தில் பொருந்திய விதி நடக்க வேண்டும் என்றும், மலத்துக்கு மலம் இடலாம் ஆகில் புலாலுக்கு புலால் இடலாம் என்றும் கூறியது.

இப்படிச் சொன்ன சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னும் ஒரு லௌகிகன் கூறுகின்றான்.

இங்ஙனம் இவன் மனிதராய்ப் பிறந்தவர்கள் எல்லாரும் புலாலுக்கு புலாலே இடவேண்டும் என்று அறியாமல் சொன்னான். அப்படிச் சொல்லின் பாவமல்லவோ? ஒரு நல்லவன், பொல்லாதவன், ஒர் அந்தணன் பட்டன் முதலான நானா சாதிகட்கும் ஒன்றாச் சொல்லல் ஆமோ? புலால் தின்னுகிற சாதி தின்னவே வேண்டும். தின்னாத சாதி ஒருகாலும் தின்னவே ஒண்ணாது. தின்னுகிற சாதி விட்டாலும் பாவம், தின்னாதசாதி தின்றாலும் பாவம் என்று சொல்ல, அவனை நோக்கிச் சைவசித்தாந்தியார் சிரித்து மேலுத்தரம் கூறுகின்றார்.

ஊனுணுஞ்சா திகண்மிருகா திகளறம்பூண்
    டவையுளுமுன் பொழுகிற் றானீ
தானெனவூன் றினல்பழுதோ ரிழிவுபிதா
    புரியின் மைந்தர் தாமுஞ் செய்யார்
மானிலத்திற் பாலர்பித்தர் தெளிந்துமிழுக்
    கியற்றினுண்டோர் மறுக்கொணா தூன்
ஆன்மவிச்சை கருதிமுறை யல்லாரைத்
    தோய்ந்துறினூ னருந்தல் செய்யே. (20)

*ஊன்உணும் சாதிகள் மிருகாதிகள் அறம்பூண்டு*
*அவையுளும் முன்பு ஒழுகிற்றால் நீ*
*தான்என ஊன்தினல் பழுதுஓர் இழிவுபிதாப்*
*புரியின் மைந்தர் தாமும் செய்யார்*
*மானிலத்தில் பாலர்பித்தர் தெளிந்தும் இழுக்கு*
*இயற்றின் உண்டோர் மறுக்கொணாது ஊன்*
*ஆன்ம இச்சை கருதிமுறை அல்லாதாரைத்*
*தோய்ந்து உறின் ஊன் அருந்தல் செய்யே*

**ஊன் உணும் சாதிகள் மிருகாதிகள் அவை யுளும்முன் அறம் பூண்டு ஒழுகிற்றால் நீதான் என ஊன் தினல் பழுது -** நீ சொன்னது சத்தியம். தின்னும் சாதி தின்னாவிடினும், தின்னாத சாதி ஒருகாலும் தின்னவே ஒண்ணாது. தின்னும் சாதி எது?

தின்னாச்சாதி எது? என்று கேட்பாய் ஆகில், பூதம், பிசாசு, நாய், நரி, கோட்டான், கழுகு பருந்து, காகம், ஈ, எறும்பு முதலியவைகள் யாதொரு பிணம் கிடக்கக் கண்ட இடத்தில் அதினுடைய அசுத்தத்தையும் துர்க்கந்தத்தையும் பார்த்துச் சற்றும் அருவருப்பு இன்றிச் சூழ்ந்துகொண்டு பிடுங்கித் தின்னுதலினாலும், இது நல்லது, இது தீயது என்றும், இது புண்ணியம் இது பாவம் என்றும் பகுத்தும் கேட்டும் அறிதற்கு ஒரு விவேகம் இல்லாதபடியினாலேயும் அவைகளே தின்னும் சாதி. வேத ஆகமங்களைக் கேட்டுப் பாவம் இது, புண்ணியம் இது என்று அறிந்து புண்ணியத்துக்கு உள்ளும் பாவத்துக்குப் புறம்புமாக நடந்து, போக மோட்சங்களை அடைய வேண்டியவன் ஆதலால் மனிதனே தின்னாத சாதி, தின்னும் சாதியாகிய மிருகாதிகள் உள்ளும் பசுவினது உபதேசத்தால் முன்பு ஒரு புலி கொல்லாவிரதியாய்ப் பூர்வ சனனமும் உணர்ந்து யோகத்தால் நற்கதி அடைந்தது என்றும், முன்பு ஒரு நாரை கொல்லா விரதியாய், ஞானம் உடைத்தாய், மதுரையை அடைந்து, சிவசாரூபம் (சிவ வடிவம் பெறுதல்) பெற்றது என்றும், மற்றுமொரு கபோதம் (புறா) தனது பேட்டினைக் (பெண் பறவை) கவர்ந்த வேடனது பசி நீக்கி உயிர் புரப்பான் பொருட்டு நெருப்பில் வீழ்ந்து இறந்து பரலோகம் அடைந்தது என்றும், அகத்தியராதி ரிசிகள் ஆசிரமங்கள் தோறும் இருந்த மிருகபட்சிகளெல்லாம் ஞானநெறி பூண்டு அருளொடு விளங்கின என்றும், வேதாகம புராண ஆதிகளில் கூறுதல் கேட்டிருந்தும் தின்னாத சாதியாகிய நீ தின்னும் சாதி என்று கொண்டு பாவங்களுக்கெல்லாம் தலைமையாகிய கொலையை மேற்கொண்டு ஒழுகிப் புலாலினை அருந்தி நரகு இடை வீழ்வதற்கு எண்ணுதல் மிகவும் குற்றம் என்று அறிவாயாக.

மிருகாதிகள் தின்னும் சாதி என்பதற்குப் பிரமாணம் : சிவதருமோத்தரம்.

நாயினுக்கும் பேயினுக்கும் நரியினுக்கும் கழுகினுக்கும்
ஈயினுக்கும் இனிதுபிணம் எனில்அதுதான் இனியதுவோ
வாயினுக்கு மனத்தினுக்கு மதிப்பரிய மாதேவன்
தேயினுக்கே சிவம்அதனைத் திளைப்பாரே சிறந்தாரே.

*(நாய், பேய், நரி, கழுகு, ஈ முதலியவற்றிக்குப் பிணம் விருப்பமானது. சிவபெருமானது அருளை விரும்புவோர் ஊன் உண்ணல் ஆகாது.)*

என்றும், **புலான் மறுத்தல்,**

நாய்கழுகு கூகைநரி காகம்ஈ எறும்பு
பேய்இவைகள் ஆவி பிரிந் ஊன் - நேயமொடு
தான்அருந்தல் அல்லாது சற்காரிய மனிதர்
தான்அருந்தல் ஆவதோ தான்

*(நாய், கழுகு, ஆந்தை, நரி, காகம் ஈ, எறும்பு, பேய் முதலியன ஆவி பிரிந்த ஊனை உண்பது இயல்பு. ஆனால் மனிதர்கள் அதை அருந்துவது ஆகாது)*

என்றும்,

தவகதியை வேண்டுபவர் உயிரில்சடம்
தினல் தவிர்க தவம் அழித்தாங்கு
அவகதியை வேண்டுபவர் கழுகுநரி
செயும்தொழிலை அயரா நாட
சிவகதியும் திருமாறன் திகழ்கதியும்
அயன்கதியும் தெய்வலோகத்து
உவகதியும் மிகந்தெரியும் துர்க்கதியின்
வீழ்வர் பரஞ்சோதி யாணை

*( தவநெறியில் செல்வோர் ஊனை ஒழிக்க, அவகதி வேண்டுவோர் அதை நாடி, எல்லாப் பேறுகளையும் இழந்து நரகத்தில் அழுந்துவர்.)*

என்றும், புலான்மறுத்தல்,

பிணம் கிடக்க நான் நுகரேன் என்று நீ பேசும்
குணம்கிடக்க வேண்டியது என்கூறாய் - பிணத்தைக்
கலத்திலே இட்டுக் கலந்து நாஆரப்
புலத்தினால் தின்றாய் புகல்

*(பிணம் கிடக்கும்போது உண்ணமாட்டேன் என்று கூறும் நீ பிணத்தைக் கலத்தில் இட்டுக் கலந்து நாவாரத் தின்பது எவ்வாறு?)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

*மிருகாதிகளினும் ஒரொன்று கொல்லா விரதத்தால் நற்கதியை அடைந்தது என்பதற்குப் பிரமாணம் :* **திருவிளையாடல்,**

பிரிவுஅறக் கொன்று தின்னும் கடைபடும் பிறப்பு நாரை
வரன்உறு தேவராகி வான்தொழ விருப்பக் கண்டீர்

கருதுதிர் என்னும் பொல்லாக் கடையர் ஆயினும் கொல்லாமல்
அரனை வந்திப்பரேல் வான்ஆள்வதற்கு ஐயம்இன்றே

*(கொல்லாமையைக் கடைப்பிடித்த நாரை நற்கதி அடைந்ததை நூல்கள் கூறும். கடையராயினும் கொல்லாமையைக் கைக்கொண்டு இறைவனை வணங்கினால் விண்ணாள்வதற்கு ஐயம் ஏதும் இல்லை.)*

என்றும், **காசி கண்டம்,**

கொன்றுவிலங்கின் தசைநுகரும் கொடுமையோர் அவ்விலங்கின் உடல்
துன்றும் மயிர்எத் துணையாம் அத்துணைய காலம் வெந்நரகில்
ஒன்றி நுகர்வாய் புழுஒழுக உழப்பர் என்கை உணர்ந்தேயோ
கன்றுசின வெங்கொடுவிலங்கும் புலஊன் தின்னக் கருதாவால்.

*(ஓருயிரைக் கொன்று தின்போர் அதன் உடலில் எவ்வளவு மயிர் உள்ளதோ அவ்வளவு காலம் நரகில் அழுந்துவர்)*

அன்றியும்,

ஒருமீன் புலவுவாய் மடுப்பின்
ஒழியும் தசைகள் அனைத்தினையும்
பரிவான் நுகர்ந்தோர் வீழ்கின்ற
பாழ்வெந் நரகில் படிவர்எனும்
அருமாமறையின் பொருள்தேர்ந்தோ அந்தா
மரைநாண் மலர்பொதுளும்
விரிநீர் வாவி பயின்மீன்கள்
விழுங்காது உலவும் புள்ளினமே.

*(ஒரு மீனை உண்டாலே, எல்லாப் புலாலையும் உண்ட பாவிகள் வீழும் நரகில் வீழ்வர் என்று நூல்கள் கூறும் அறவுரையை உணர்ந்ததால் அங்குள்ள பறவைகள் வாவிகளிலுள்ள மீன்களை உண்ணாது இருக்கும்.)*

என்றும், **இதிகாசம்,**

புள்ளுக்கு உள குணமும் இல்லாத புல்லறிவாம்
கள்ளக் கருமனத்தே காலன்கைக் - கொள்ளப்போய்
புக்காழ் நரகத்து உழையாது போனான்மற்று
எக்காலத்து எந்நாள் இனி

*(பறவைக்கு உள்ள குணம் கூட இல்லாத புல்லறிவினர் காலனிடம் அகப்பட்டு எளிதில் நரகம் அடைவர்)*

என்றும், **அருட்பிரகாசம்,**

புலிநாரை யெண்புற ஆதிகண் முன்னம் புலால் அருந்தும்
குலனாய் இருந்தும் அருள்ஓம்பி முத்தி குறுகியது என்று
உலகுஊடு உரைப்ப சொற்கேட்டு மருளற்று ழன்று இறக்கும்
சிலர்மானுடத்து என்ன செய்வான் புவியில் செனித்ததுவே

*(புலி, நாரை முதலிய புலால் அருந்தும் உயிர்களும் அருளைக் கடைப்பிடித்து முத்தி அடைந்தன என்று நூல்கள் கூறும். இதையெல்லாம் கேட்டும் திருந்தாத மனிதர்கள் எதற்காக இவ்வுலகில் பிறந்தார்களோ)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இப்படிக் கூறிய சித்தாந்தியை நோக்கிப் பின்னும் ஒரு லௌகீகன் கூறுகின்றான்.

இங்ஙனம் இவன் தின்னாசாதி என்றும் தின்னுஞ்சாதி என்றும் அறியாமல் சொன்னான். யாவன் ஒருவனுக்கும் சாதியைக் கொண்டு காரியம் என்ன? இந்தப் புத்தி முன்னிருந்தவர்கள் அறியாமல் நடந்தார்களோ? அவர்களைப் பார்க்கிலும் நாம் என்ன ஆகாசத்திலே பறக்கிறோமோ? பிதாவும் மாதாவும் எந்தப் பிரகாரம் நடந்தார்களோ அந்தப்பிரகாரம் நடக்கிறதே காரியம் என்ற அளவில் அவனை நோக்கிச் சிறிது உத்தரம் மேற்கூறுகின்றார்.

மேல்விடை : **பிதா ஓர் இழிவு புரியில் மைந்தர் தாமும் செய்யார்** - பிதா நடந்த முறையே நடக்கவேண்டும் என்பது கூடாது. அது ஏனெனில், தம்முடைய பிதாவாயினும் பிறராயினும் வேத ஆகமங்களை ஓதியுணர்ந்து தருமத்துக்கு உள்ளும் பாவத்துக்குப் புறம்புமாகத் தானும் நடந்து பிறரையும் நடப்பிப்பான் யாவன் அவனையே அறிவுடையோர் பிதா என்று அங்கீகரித்து அவன் நடந்த முறையே நடவா நிற்பர்கள். அதுஅன்றி, தன்னுடைய பிதா மாதா பாவியானாலும் அவர் நடந்த முறையே நடப்பது உசிதம் அன்று. நீ உசிதமே என்னில் அவனுடைய பிதாவானவன் கன்மவசத்தால் பிறர் கேட்கில் மிகவும் நகைத்து நாணத்தகுவதாகிய இழிவினைச் செய்திருப்பான் ஆகில் அதுவே ஒழுங்கென்று அவனுடைய பிள்ளைகளும் அப்படியே செய்யக் காணேம். ஆதலின் வேதாகமங்களை ஆராய்ந்த நாதாக்களது(மேலோர்) புத்தியின்வழியே நடப்பதே விவேகம்.

இதற்குப் பிரமாணம் :

தந்தைநடந் துளமுறையே நடப்பது ஒழுங்கு
　எனின்ஒருவன் தரணிமீதே
நிந்தைதரு புருடசும்பன் ஆதிசெய்தான்
　எனில்அதுவே நெறிஎன்று அன்னோன்
மைந்தர் பினும் புரிவதுஇலை
　எவரேனும் தருமநெறி வழுவிலோரே
அந்தமிகு தாதைகண் மற்றவர் நடந்த
　நெறிநடப்பது அறிவாம் அன்றே

*(தந்தை நடந்த வழியலேயே நடப்பது ஒழுங்கு என்றால் ஒருவன் தந்தை இழிவானவற்றைச் செய்தவனாக இருந்தால் அவன் மகனும் அதை நெறியாகக் கொள்வதில்லை.)*

என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க,

இப்படிச் சொன்ன சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னும் ஒரு **லௌகீகன்** கூறுகின்றான்.

இங்ஙனம் இவன் பிதா நடந்தபடியே நடக்கவேண்டும் என்று அறியாமல் சொன்னான். பிதா பிச்சை எடுத்தான் என்று மகனும் பிச்சை எடுக்க வேண்டுமோ? அது வேண்டியதில்லை. எவன் ஆனாலும் பிறவி அன்பாய் புலால் விட்டவனே விட்டவன் சில காலம் தின்றுகொண்டு திரிந்து நடுவிலே எனக்கு ஞானம் வந்தது என்று விட்டுவிட்டான் ஆகில், ஒரு பலனும் இல்லை. அப்படி விடுகிறபொழுது முன்னம் தின்ற வாயையும் கையையும் கூட விட்டுவிட அல்லவோ வேண்டும். அல்லாதபொழுது விட்டதில் கூட்டே அல்ல. ஆனபடியினாலே, தின்றவன் தின்றே வரவேண்டும். நடுவிலே விட ஒண்ணாது என்ற அளவில் அவனை நோக்கிச் சிரித்து மேல் உத்தரம் கூறுகின்றார்.

**மாநிலத்தில் பாலர் பித்தர் தெளிந்தும் இழுக்கு இயற்றின் ஊன் உண்டோர் மறுக்கொணாது** - நீ சொன்னது நல்லதுதான். **இப்பூமி**யினிடத்து ஒருவனை நீ குழந்தையாய் இருக்கிற காலத்தில் **மலத்தைத் தின்றாய்** என்று அவன் பெரியவனாய் இருக்கிற **காலத்தில் முன்** கண்டிருந்தவர்கள் சொல்லக் கேட்டானாகில் **அறி**யாத காலத்தில் செய்ததை இப்பொழுது நீ சொல்லல் ஆவது **ஏது** என்று கோபிப்பான். அன்றி முன்பு தின்றவாயும் கையும் இருக்க இனி விட்டதனால் பிரயோசனம் (பயன்) இல்லை என்று

தான் பின்பும் தின்னக் கண்டிலேம். அது அன்றியும், ஒருவனைப் பைத்தியம் தொடுத்திருந்த காலத்தில் மல ஆதிகளையும் தின்று தின்னாத வீடுகளிலும் வாங்கித் தின்றுகொண்டு திரிந்தானே ஆனாலும், பைத்தியம் தெளிந்த காலையில் தின்னாத வீட்டினும் வாங்கித் தின்று மலாதிகளையும் தின்னக்காணேம். அதுவன்றியும், உலகத்தின் கண் உண்டாகிய பெண்ணும் ஆணும் சிறுபிள்ளையாய் இருக்கிற காலத்தில் சீரை (உடை) உடுக்காமல் அபிமானம் பலரும் காணத் திரிந்தார்களாயினும் பெரியவர்களாயின காலத்தினும் சிறுபோதில் பலரும் கண்ட அபிமானத்தை இனி ஏன் மறைக்கிறோம் என்று பின்பும் சீரை உடுக்காமல் இருக்கக் காணேம். இது பித்தனுக்கும் ஒக்கும் ஆதலின் மாமிசம் தின்றவன் தின்றே வரவேண்டும் என்கிறது யோக்கியம் (தகுதி) அன்று. விவேகம் வந்தபோது விடுகிறதே யோக்கியம்.

இதற்குப் பிரமாணம்: **திருவிளையாடல்,**

முன்னை வேதனையை விட்டு முற்றிய அறிஞர் நெஞ்சில்
பின்னொரு விகாரம்இன்றி இருப்பர் இப்பிணப்புலாலை
நன்னெறி அறிந்த நாமும் நாவழி ஒழுகிக் கெட்டேம்
தின்னவே நயந்தோ நம்போல் தீங்குளார் உண்டோ இன்றே

*(நன்னெறி அறிந்த நாம் பிணப் புலாலை தின்ன விரும்பினோம். நம்மைப் போல் தீவினையாளர்கள் உண்டோ?)*

என்றும், **புலான்மறுத்தல்,**

அருந்திச் சின்னாள் ஊன்அதன்மேல் விடுக்கின்
வரும்பயன் ஏதுஎன்னின் மழலை - திருந்து அறிவிற்
பித்தர் அறிவு பிறங்கிய போதும் மலத்தைத்
துய்த்திடுவது உண்டாயின் சொல்

*(பைத்தியம் பிடித்தவன் ஒருவன் மலம் தின்றிருந்தாலும் தெளிந்த பின் அதைத் தின்பதில்லை. அதுபோலப் புலால் தின்பது தீவினை என்பதை உணர்ந்ததும் அதைக் கைவிடுவதே சிறந்ததாகும்)*

என்றும்,

மைந்தர்கண் மாதர்கள்கோச பகமாதி
　　மழஉருவின் மறைத்திலேம் என்று
இந்தஉடைகொடு மறைப்பது எத்தினக்கு என்று
　　ஒளிர்பருவத்து எறிகலார் தம்

சிந்தையின் நாண் மிகுத்தணிவர் ஆதலின் ஊன்
உணவைமுனம் தின்றாய் ஏனும்
நிந்தை செய்து இப்பொழுது அகற்றத்
தகும் இலையேல் கெடுவாய் உன் நினைவு என்னாமே

*(குழந்தைப் பருவத்தில் உடலை ஆடையால் மறைக்காமல் திரிந்ததால் இப்போதும் ஆடை வேண்டாம் என்று கூறுவார் இல்லை. அதுபோல முன்பு புலால் உண்டிருந்தாலும் இப்போது அதை வெறுத்துக் கைவிடுவதே தக்கதாகும்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இப்படிச் சொன்ன சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னும் ஒரு லெள்கீகன் கூறுகின்றான்.

இங்ஙனம் பிறவி அன்பாய் புலால் விட்டவனே விட்டவன் என்றும் நடுவிலே விடுகிறது பாவம் என்றும் இவன் அறியாமல் சொன்னான். புலாலை எப்போது விட்டாலும் விடலாம். விடுகிறபொழுது ஒருவனுக்குப் புலாலை விட்டுப்பார்க்க, அது ஒத்துக்கொண்டால் புலாலைத் தின்னாமல் விட்டுவிடவேண்டும். ஒத்துக்கொள்ளாதிருந்தால் விட்டுவிடுகிறது தோடம். அது எப்படி என்றால் ஆன்மாவிற்கு இச்சை இல்லாமல் போனால் ஒத்துக் கொள்ளும். இச்சை உண்டானதே ஆனால் ஒத்துக்கொள்ளாது. ஒத்துக்கொள்ளாதிருக்க விடுகிறபொழுது ஆன்ம இச்சையை அடக்குதலே மிகுந்த பாவம். ஆன்ம இச்சையை அடக்கவே ஒண்ணாது என்ற அளவில் அவனை நோக்கிச் சிரித்து மேல் உத்தரம் கூறுகின்றார்.

**ஆன்ம இச்சை கருதி முறையல்லாரைத் தோய்ந்து உறின் ஊன் அருந்தல் செய்யே** - எ-து. நீ சொன்னது சுபாவம் தானே. ஆன்ம இச்சையை அடக்க ஒண்ணாது என்கிற பொழுது உலகத்தின் கண்ணே ஆணுக்கு ஆயினும், பெண்ணுக்கு ஆயினும் காம விகாரத்தினாலே மாதா, பிதா, தம்பி, தமையன், தங்கை, தமக்கை முதலானவர்களில் ஒருவருக்கு ஒருவர் மேல் இச்சை உண்டானதே ஆனால் ஆன்ம இச்சையை அடக்க ஒண்ணாது; அடக்கில் தோடம் என்று கூறினால் விடய ஆனந்தம் இல்லாதே போகின்றதோ? உண்டாயிருக்கவும் அப்படி வந்த காலத்தில் மிகவும் நடுநடுங்கி நரகத்தில் விழப்போகிறோம் என்று பயப்படுகிறபடியினாலும் பிறர் கேட்டால் நிந்தை வரும் என்று

அஞ்சுகிறபடியினாலேயும் ஊன் உண்டலும் மிகுந்த பாவம் ஆதலின் யாது ஒன்றும் செய்யும் காரியமும் தவிரும் காரியமும் அறிந்து நடக்க வேண்டும் என்று அறிவாயாக. எ.று.

இதற்குப் பிரமாணம்:

செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்

*(ஒருவன் செய்யக் கூடாத செயல்களைச் செய்தால் அவன் அழிவது உறுதி. செய்து முடிக்க வேண்டிய செயல்களைச் செய்யாமல் வீணே காலம் கழித்தாலும் அழிவது உறுதி.)*

என்றும், **ஔவையார்,**

பொல்லாங்கு என்பவை எல்லாம் தவிர்

*( தீமையான செயல்கள் அனைத்தையும் விட்டொழிப்பாயாக)*

என்றும்,

ஆசுறு ஆன்மஇச்சை அடக்குதல் ஆகாதுஎன்று
மாசுறும் ஊனைத் துய்த்து மாதுயர் நரகத்து ஆழ்வீர்
பேசிய தந்தை தாய்மேல் பெருகிய ஆசைகூறில்
கூசிடாது அவர்கள் தம்மைக் கூடுதல் குணமோ கூறீர்

*( ஊன் உண்ணும் ஆன்ம இச்சையை அடக்குதல் கூடாது என்று கூறி நரகத்தை அடைவோரே! மன விகாரத்தால் ஒரே வழி தாய் தந்தையர் மீது விருப்பம் கொள்வோர் ஆன்ம இச்சைப்படி நடந்து கொள்ளுதல் ஏற்புடையது ஆகுமோ?)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இ-து. புலால் தின்னும் சாதி மனிதர் அல்ல என்றும், யாவராயினும் நல்லறிவாளர் நடந்தபடியே நடக்க வேண்டும் என்றும், விவேகம் வந்தபோதே புலாலை விட்டுவிட வேண்டும் என்றும், பிராண ஆனிவரினும் புலால் தின்னுதல் பாவம் ஆதலால் அதனைச் செய்ய ஒண்ணாது என்றும் கூறியது.

அப்படிச் சைவசித்தாந்தியார் யாது ஒன்றும் ஆராய்ந்து அறிந்து நடக்கவேண்டும் என்ற மாத்திரத்தில், அந்தச் சபையின்

கண்ணே இருந்த சகல சமயவாதிகளும் எழுதின சித்திரங்கள் போலவும், காற்றில்லாத இடத்தில் இருக்கிற விளக்குப் போலவும் அசைவு அற இருந்தார்கள். அப்போது அந்தச்சபை எப்படி இருந்தது என்னில் அலை ஒழிந்த கடல் போல் ஓசை அடங்கி இருந்தது. அப்படி ஓசை அடங்கி இருந்தது என்று விரித்தது வாதிகள் வினா ஒழிந்து மேல் மாணாக்கன் வினா வருதலின் எனக் கொள்க. முன்பு சைவாசிரியாரைத் தொழுது அஞ்சலி அத்தனாய் நின்ற பக்குவியானவன் பின்பும் தண்டம் பண்ணி ஒரு விண்ணப்பம் செய்யா நின்றான். தேவரீர் இங்ஙனம் திருவாய் மலர்ந்து அருளிய உபதேசப்படியேஅடியேன் இன்று முதல் கொலை செய்தலையும் புலால் உண்ணுதலையும் விட்டுவிடுகிறேன். அடியேன் மனத்தில் இன்னுமொரு சங்கை (ஐயம்) உண்டு. அஃது என் எனில், அடியேன் அறிந்த கொலைகளைச் செய்யாவிடினும், ஓடும்போதும் நடக்கும் போதும் என்னை அறியாமல் ஒரு சீவகொலை நேரிட்டால் அந்தத் தோடத்தை நீக்கிக்கொள்ளுதற்கு உபாயம் யாது என்று கேட்ட அளவில், அவனை நோக்கி மேற்கூறுகின்றார்.

செய்துயிர்கட் கினிமைகொல்லா நோன்பியற்றும்
  வேலைகுரு சேவை தன்னான்
வையகத்தூ டறுமறியாக் கொலைமையதூன்
  மக்களொடுன் மனை யுண்டாலும்
உய்வதிலை நீயெவணம் வேறிதற்குன்
  மனைபிறர்தோய்ந் துறினக் காலைக்
கையகல விடுவதன்றிக் கொலவுமுளந்
  துணியுமதி காரத் தாலே. (21)

*செய்துஉயிர்கட்கு இனிமை கொல்லா நோன்பு இயற்றும்*
  *வேலைகுரு சேவை தன்னால்*
*வையகத்துஊடு அறும்அறியாக் கொலைமையது ஊன்*
  *மக்களொடு உன்மனை உண்டாலும்*
*உய்வதுஇலை நீஎவணம் வேறுஇதற்கு உன்*
  *மனைபிறர்த் தோய்ந்து உறின் அக்காலைக்*
*கைஅகல விடுவதுஅன்றிக் கொலவும் உளம்*
  *துணியும் அதிகாரத் தாலே*

**உயிர்கட்கு இனிமை செய்து கொல்லா நோன்பு இயற்றும் வேலை குரு சேவை தன்னான் வையகத்தூடு**

**அறியாக் கொலைமையது அறும்** - தறுகண் (கொல்லுகை) தன்மை நீங்கிச் சர்வ சீவன்களிடத்தும் களைகண் உண்டாகிய கொல்லாவிரதியாய் நடந்துவரும் காலத்து உன்னை அறியாமல் வந்த கொலைத் தோடமானது வேறொரு விதத்தால் நாசத்தை அடையும். அஃது எத்தாலெனில் சற்குருவினது திருப்பாதத்தை நியமமாக வழிபட்டுச் செய்யும் அவனது ஏவலின் வலியால் எனக் கொள்க.

தறுகண்தன்மை நீங்கி என்பதற்குப் பிரமாணம் **சிவதருமோத்தரம்,**

வருந்துமே பதம் வைப்பின் மரிக்குமே
பொருந்து மண்ணில் புழுக்கணம் என்றுஉளம்
வருந்தியே பதம் மெல்என வைத்திடாது
அருந்தவத்தைப் பிரிந்த அரக்கனும்

*(நடந்து செல்லும்போது நம் அடியில் சிக்கிச் சிற்றுயிர்கள் இறக்குமே என்று மெதுவாக அடி எடுத்து வைத்து ஞானிகள் நடப்பர்)*

என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

கொல்லா விரதம் என்பதற்குப் பிரமாணம் : **ஔவையார்,**

நோன்பு என்பதுவே கொன்று தின்னாமை

*(எந்த உயிரைக் கொல்லாமையும், அதன் ஊனைத் தின்னாமையுமே விரதம் ஆகும்.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

சற்சீடன் அறியாமல் செய்த தோடத்தையும் ஆசாரியன் நீக்குவன் என்பதற்குப் பிரமாணம் : **சிவதருமோத்தரம்,**

விண் உளார்நரர் மற்றை விலங்குமே
பண்ணும் பாவ பலத்தைக் கொடுப்பவன்
திண்ணமே யமன் தேசிகன் தீர்த்திடும்
பண்ணில் பாவவிதம் சிவ பத்தரும்

*(எல்லா உயிர்களுக்கும் வினைப்பயனை ஊட்டுபவன் எமன். குரு அத்தகைய வினைப்பயனையும் மாற்றும் ஆற்றல் உடையவர்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இப்படித் தேவரீர் கற்பித்த திருவாக்கின்படியே என்னுடைய மனைவியும் புத்திரரும் இதற்கு ஒவ்வாவிடினும் நான் மாத்திரம் சரீரபரியந்தம் தவறாமல் நடந்துவருகிறேன் என்று விண்ணப்பம் செய்ய, மேல் உத்தரம் கூறுகின்றார்.

**ஊன் உன் மனை மக்களோடு உண்டாலும் நீ உய்வது இலை** - மாமிசத்தை உன்னுடைய மனைவி, புத்திரர் உண்டாலும் அந்தப் பாவத்தால் நீயும் நரகத்து அழுந்துதல் சத்தியம்.

மேல்வினா: எனக்கும் என்னுடைய மனைவி புத்திரருக்கும் ஏகசரீரமாய் ஊன் உறக்கம் ஒன்றாயிருக்கின்றனவோ? அவர்கள் வேறு நான்வேறு. அவர்கள் செய்த பாவத்தை நான் அனுபவிக்க வேண்டியது என்?

மேல்விடை : **நீ எவணம் இதற்கு வேறு உன்மனை பிறர்த்தோய்ந்து உறின் அக்காலைக் கையகல விடுவதன்றிக் கொலவும் உளம் துணியும் அதிகாரத்தாலே** - நீ எந்தப் பிரகாரம் இதுகாலத்து அளவில் மனைவி, புத்திரர்க்கும் எனக்கும் பேதமென்று சொல்லினை? அது பழுது. அது ஏது எனில், உலகத்தின் கண்ணே ஒருவன் தன்னுடைய மனைவி பரபுருசசங்கமம் பண்ணக் கண்ட காலையில் அவளை விட்டுத் துறக்கவேண்டும் என்கிற விதியையும் பாராமல் நான் பிராணன் (உயிர்) உடனிருக்க இப்படி அழிவு செய்யலாவது என்ன? இவளைக் கொன்று போடுகிறேன் என்று நெஞ்சில் துணிதலினாலும், இங்ஙனம் மனைவி, புத்திரர் பிறரிடத்தில் செய்த குற்றாகுற்றங்களுக்கும் யான் என முன்னிற்கும் அதிகாரத் தன்மை உடையோன் ஆதலினாலும் உன்னுடைய மனைவி, புத்திரர் செய்த பாவாதிகளுக்கு உண்டான பலம் நீயும் அனுபவிப்பது சித்தம் என்று அறிவாய்

மனைவி விதி தவறில் அவளைவிட்டுத் துறக்க வேண்டும் என்பதற்குப் பிரமாணம் : **சிவதருமோத்தரம்,**

அறிந்து மனையாள் அவலத்தை அவளைத் துறவாது அணைவானும்
சிறந்த குரவன் மனைவியொடு செறிந்தார்க்கு இணையே செப்பியஇத்
திறந்தான் மகபாதகம் அதனில் சிறுமைத்து அதனால் பாதகம்என்று
அறைந்தாம் இதனுக்கு அணித்தான உபபாதகமும் இனி அறைவாம்

(தன் மனைவியானவள் பிறனொடு சேரும் குற்றத்தைக் கண்டும்

*அவளைத் தள்ளி வைக்காது கூடுவோன் இவர்கள் எல்லோருக்கும் மேலான குருவின் மனைவியோடு கூடினவர்களுக்கு நிகராவான். இவ்வாறு சொல்லிய கூறுபாடுகள் எல்லாம் மகாபாதகத்துக்குத் துல்லியமாய் இருக்கும். அதனால் இவற்றிக்குப் பாதகம் என்று பேர் கொடுத்தோம்.)*

என்றும், **காசி கண்டம்,**

பொருவில் கற்பின் வழிஇய புன்மங்கையர்
உரியமூன்று மரபினுள்ளோரையும்
வெருவந்து ஏங்க விழுங்கி உமிழ்கிலாது
எரியும் தீநரகில் குடி ஏற்றுவார்

*(சமானமில்லாத கற்பு நிலைமையினின்றும் தவறிய அற்பமாகிய பெண்கள் தமக்குரிய மூன்று கால் வழியில் (தந்தை, தாய், கணவன்) பிறந்துள்ளார் யாவரையும் தன் கைப்படுத்தி நீங்காது எரிகின்ற நெருப்பினையுடைய நரகத்தில் குடியேற்றுவார்கள்.)*

அன்றியும்,

நெறிஇழந்து தன்மரபினின் நீரல செய்யு
மறுவின் மைந்தரைப் பெறுதலின் மகப்பெறாது அஞர்உற்று
உறைதல் நன்று மற்று ஒருவனால் உயர்குல முழுதும்
சிறுமைஎய்தில் ஆங்குஅவரைத் துறந்து உறுபழி தீர்ப்பார்

*(நீதிநெறி தவறி தமது குலத்திற்குத் தகாத நடக்கை புரிகின்ற குற்றத்தைச் செய்யும் மக்களைப் பெறுதலைக் காட்டிலும், பிள்ளை இன்றித் துன்புற்று வாழ்வதே நல்லது. ஒரு பிள்ளையால் உயர்ந்த தமது சுற்றத்தார் தாழ்வடைவார்கள் ஆயின், அவனை விலக்கித் தமக்கு நேர்ந்த பழியைப் பெரியோர் நீக்குவர்)*

அன்றியும்,

என்ன நூற்கடல் கடந்துளோர் உரைப்பதை எண்ணி
முன்னர் நின்றுபொய் மொழிந்திடு முகிழ்முலைத் துவர்வாய்ப்
பன்னி தன்னொடு மகத்துறந்து அந்தணன் பரிந்தோர்
பொன்வார்முலைப் பூவையைக் கடிமணம் புரிந்தான்

*(பொய், சூது இவையிரண்டும் பெரும்பாதகங்களுடன் சேர்ந்தவை ஆதலின் இவ்விரண்டையும் உடையார் என மனைவி, புத்திரன் இருவரையும் ஒழித்தனன்)*

என்றும்,

தேசிகர் மன்னவர் கொழுநர்
சீடரைத்தம் குடிகளைத்தோய் தேவிமாரை
ஆசில்விதிப் படிநடக்கில் காக்கப் பிழைத்து
இடில்வெறுத்திட்டு அகலநீக்க
மாசுடையோர் எனஅறிந்தும் அவரைவெறுத்து
இலாது இணங்கி வாழ்விப் பாரேல்
பேசியதீது ஒருசிறிதும் தமக்கு இலஆ
யினும் நரகில் பிழையாது ஆழ்வார்

(குற்றமற்ற விதிப்படி ஒழுகும் குரு, அரசன், கணவன் மனையாள் பிழை செய்திடின், அதை அறிந்து வெறுத்து ஒதுக்காது, ஒரு சிறிதும் தீமை செய்யார் ஆயினும் கொடிய நரகில் பிழையாது ஆழ்வர்)

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

மனைவி பிழைசெயில் துறப்பது அல்லாது கொல்ல ஒண்ணா என்பதற்குப் பிரமாணம் : அருட்பிரகாசம்,

இல்லத்து இருக்கு மனை தீவினைகள் இயற்றின் அறம்
சொல்லித் தடுக்க அடங்காவிடில் துறந்து தன்நெஞ்சு
எல்லைக்கு உரியநிலை சார்ந்துஒழுக இதுஅன்றி அன்னார்க்
கொல்லத் துணிபுல்லர் அன்றோ சென்றுஊழில் குளிப்பவரே

(பிழை செய்யும் மனைவியை அறவுரை கூறித் தடுக்க வேண்டும். அடங்காவிடில் அவளைத் துறந்து தன் நெறிக்குப் பொருந்திய முறையில் வாழ வேண்டும். அவளைக் கொல்வதற்கு ஒரு போதும் துணியக் கூடாது. கொன்றால் நரகத்தில் அழுந்தும் நிலைக்கு ஆட்பட வேண்டும்.)

என்றும்,

விண்டுளள தன்மலன்ஆயதில் ஓர்ந்து விரைந்து அதனை
உண்டிடுவார் உளரோ சொலும் தீமைஉனித் துறந்த
பெண்டிர் மற்றார்உடன் கூடிஎன் பெண்கொலை பின்நரகில்
கொண்டு சுழற்றும்என்று எண்ணாது கொல்லும் கொடியவரே

(தன்னுடைய மலமாயின் அதை யாரும் உண்ணார். அதுபோலத் தீமை காரணமாகத் துறந்த மனைவி முதலியோரிடம் ஒரு போதும் கூடலாகாது. மனைவியைக் கொல்பவர் அப்பாவத்தால் நரகத்திற்குச் செல்ல வேண்டும் என்பதை அறியாதவரே ஆவர்)

என்றும் மற்றும் வருவனவற்றால் கண்டுகொள்க.

இ-து. அபுத்தி பூருவத்தால் (அறியாமல் நிகழ்ந்தது) வந்த தோடம் குரு சேவையால் நீங்கும் என்றும், யாவன் ஒருவனும் தன்னுடைய மனைவி புத்திரருக்குத் தான் அதிகாரி ஆகையால் அவர்களையும் தருமத்தின் வழியே ஆக்கினை செய்து நடப்பிக்க வேண்டும் என்றும் கூறியது.

இப்படிக் கூறிய சைவசித்தாந்தியை நோக்கி மேலும் அந்தப் பக்குவியானவன் விண்ணப்பம் செய்யா நின்றான்.

இங்ஙனம் தேவரீர் திருவாய் மலர்ந்து அருளியபடியே என்னுடைய பாசக் குழாங்களாகிய பலருள் யார் ஒருவர் என் நினைவின்படி வராவிடினும் எனது ஆக்கினைக்கு உட்பட்டிருந்துள்ள மனைவி புத்திரதைத் தண்டித்துப் புலால் தின்னுவதை நிறுத்திவிக்கின்றேன். அவர்கள் நில்லாவிடில் அவர்களை விட்டுத் துறந்தாயினும் தருமத்தின் வழியே தவறாமல் நிற்கின்றேன் என்ற அளவில், சித்தாந்தியார் அவனை நோக்கிப் பின்னும் ஓர் உத்தரம் கூறுகின்றார்.

தாலமிசை யுனதுசுற்றத் தவர்கொலைமை
 செயினுனக்குஞ் சாரு நீவே
றேலுனது குலநெறியை விடிலவரோ
 டுரைபகரா திகழ்ந்தன் னோர்தம்
பாலுணவா திகடவிர்வ தெனையது போன்
 மறம்புரிவோர் பற்றை நீத்துண்
மாலதனாற் கொலைமையற வறம்புரிவோர்
 தொடர்புறினல் வழிசார் வாயால். (22)

*தாலமிசை உனது சுற்றத்தவர் கொலைமை*
 *செயின் உனக்கும்சாரும் நீவே*
*றேல்உனது குலநெறியை விடில் அவரோடு*
 *உரைபகராது இகழ்ந்து அன்னோர் தம்*
*பால்உணாவு ஆதிகள் தவிர்வது எனையது போல்*
 *மறம்புரிவோர் பற்றை நீத்துள்*
*மால்அதனால் கொலைமைஅற அறம்புரிவோர்*
 *தொடர்பு உறின் நல்வழிசார் வாயால்*

**தாலமிசை உனது சுற்றத்தவர் கொலைமை செயின் உனக்கும் சாரும்-** பூமியின்கண்ணே நீயும் உன்னுடைய

மனைவி, புத்திரரும் கொலைமை சாராவிடினும், உன்னுடைய மாதா,பிதா, தம்பி, தமையன், தங்கை, தமக்கை, மாமன், மைத்துனன் மற்றும் உண்டாகிய சுற்றத்தார் கொலைமை செய்தார்கள் ஆயினும், அந்தப் பாவத்தால் நீயும் நரகத்தை அனுபவிக்க வேண்டும்.

மேல்வினா: மனைவி, புத்திரர்கள் என்னுடைய ஆக்கினைக்கு உட்பட்டவர் ஆதலின் அவர்களைத் தண்டித்துத் தருமத்தின் வழி நடப்பியாவிடில் எனக்குத் தோடம் என்பது நிச்சயம். மற்றுமுள்ளவர்கள் என்னுடைய சொல்லுக்கு அடங்கினவர்கள் அல்லாமல் இருக்க, அவர்கள் செய்த பாவத்தால் எனக்கு நரகம் வரவேண்டியது எப்படி என்ற பக்குவியை நோக்கி மேல் அருளிச் செய்கின்றார்.

மேல்விடை : **நீ வேறேல் எனது குலநெறியை விடில் அவரோடு உரை பகராது இகழ்ந்து அன்னோர் தம்பால் உணவு ஆதிகளைத் தவிர்வது எனை? அதுபோல் மறம்புரிவோர் பற்றை நீத்து உள்மால் அதனால் கொலைமை அற அறம் புரிவோர் தொடர்பு உறன் நல்வழி சார்வாயால்** - உன்னுடைய சுற்றத்தார் உன்னுடைய சொற்கு அடங்கார்கள் என்றும், அவர்கள் வேறு நான் வேறு என்றும் சொல்லுவையாகில், உன்னுடைய குலாசாரத்தினின்றும் உன்னுடைய சுற்றத்தாரில் சிலர் தவறி நடந்த காலத்தில் அவர்களுடைய சினேகத்தையும் பற்றற விட்டு, அவர்களை நீத்து, எவ்விடத்தும் பேசுதல் ஒழிந்து அவர்கள் வீட்டில் அன்னபானாதிகளை விடம் எனக்கண்டு உன்னுடைய மனைவி புத்திரர்களும் அவர்கள் மனைவழி வாயில்வழி சொப்பனத்தாயினும் போகாதபடி நிறுத்தி, மற்றுமுள்ள சுற்றத்தாரில் சிலர் அவர்களோடு பேசுகினும் எனக்கு வேண்டாதவர்களோடு பேசல் ஆவது என் என்று அவர்களுடைய சிநேகத்தையும் நீ விடுவது என்? இப்படிப் பிரயோசனமற்ற அற்பக் காரியத்தளவில் மனம் வைத்து வெறுத்த நீ மேலைக்கு நரகத்தில் வீழ்த்தி மாறாத துயரத்தைத் தருவதாகிய சீவகொலையாதி பாவங்களைப் பண்ணும் அவரிடத்தில் சினேகிப்பது என்? ஆதலின் யாரொருவர் ஆயினும் கொலையாதிக்கு அஞ்சாத பாவியாயில் தன்னவன் என்றும் பிறர் என்றும் பாராமல் உடனே விட்டு நீங்கி முத்தியை அடையவேண்டுமென்று மனோ இச்சையினாலே கொல்லாமையாகிய பேரறம் புரிவோர் யாவராயினும் அவரோடு மிகுந்த சினேகம் புரிவாயாகில் நல்ல அறத்தின் வழியை எளிதின் அடைவாய்.

*இதற்குப் பிரமாணம் :* **திருவள்ளுவர்,**

**மருவுக மாசற்றார் கேண்மையொன்று ஈத்தும்**
**ஒருவுக ஒப்பிலார் நட்பு**

*(குற்றம் இல்லாத நல்லோர் நட்பை விரும்பித் தேடிப் பெற்றுக் கொள்ள வேண்டும். உலகத்தோடு ஒத்த பண்பு இல்லாதவர் நட்பை ஏதேனும் ஒன்றைக் கொடுத்தாவது விட்டு விலகி விட வேண்டும்.)*

என்றும், **ஔவையார்,**

**நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க**
**நல்லார்சொல் கேட்பதவும் நன்றே -நல்லார்**
**குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு**
**இணங்கி இருப்பதுவும் நன்று**

*(நல்லவரைக் காண்பதும், அவர் சொல்லைக் கருத்தூன்றிக் கேட்பதும், அவர் நற்குணங்களைப் போற்றிப் பேசுவதும், அவருடன் கூடி இருப்பதும் நன்மை பயப்பதாகும்.)*

அன்றியும்,

**தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற**
**தீயார்சொல் கேட்பதுவும் தீதே தீயார்**
**குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோடு**
**இணங்கி இருப்பதுவும் தீது**

*(தீயவரைக் காண்பதும், அவர் சொல் கேட்பதும், அவர் குணங்களைப் போற்றிக் கூறுவதும், அவருடன் நட்புக் கொண்டிருத்தலும் தீமை பயக்கும்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இ-து. கொல்லா விரதி (நோன்பு மேற்கொண்டோன்) யாவராயினும் கொலையாதிகளுக்கு அஞ்சாத பாவிகளைக் கண்டவிடத்தும் அவரது நட்பை உடனே விடவேண்டும் என்று கூறியது.

இப்படித் தேவரீர் கற்பித்த திருவாக்கின்படி அடியேனும் என்னுடைய மனைவி புத்திராதிகளும் கொலைமை, புலால் உணவு நீங்கி, நல்லோரைச் சிநேகித்துப், பாவிகளது சிநேகத்தை

விட்டு, அசரபதார்த்தத்தைக் குருவாதி நால்வருக்கும் முன் ஊட்டிப் பின்பு உண்டு வருகிறேன் என்ற அளவில் அவனை நோக்கி மேல் சித்தாந்தியார் அருளிச் செய்வார்.

சார்வொழிகொம் மடியாதி தாவரத்தூ
  னுறழ்தருநாய்த் தன்மை யோரை
நேரலை நீ கேண்முடிவில் வரும்புரம்பொய்
  வீணாளா நீக்கேல் வாணாள்
பார்மிசை நீ புரியலைமெய்த் தவர்குழுவுற்
  றறமவர்சொற் படிசெய் நாளுஞ்
சேருமனோ சுத்திபர ஞானமத் தால்
  னடைவைமுத்தித் திருநாடன்றே. (23)

*சார்வுஒழி கொம்மடியாதி தாவரத்தும் ஊன்*
  *உறழ்தரு நாய்த்தன்மையோரை*
*நேரலைநீ கேள்முடிவில் வரும்புரம்பொய்*
  *வீண்நாளா நீக்கேல் வாழ்நாள்*
*பார்மிசை நீ புரியலை மெய்த்தவர் குழுஉற்று*
  *அறம் அவர் சொற்படி செய் நாளும்*
*சேருமனோ சுத்திபர ஞானம் அத்தால்*
  *அடைவை முத்தித் திருநாடு அன்றே*

***தாவரத்து கொம்மடியாதி சார்வு ஒழி-*** அப்படிச் செய்யும் முறைமை செய்து, அசரபாதர்த்தத்தை உண்பாய் ஆயினும் அவற்றின் கண்ணும் நீக்கவேண்டியன உண்டு. அவையாவை எனில், கொம்மட்டிக்காய், கடைச்சரக்குகளான உள்ளி (வெங்காயம்), வெள்ளுள்ளி (வெள்ளைப்பூண்டு) ஆகியவைகள்.

*இதற்குப் பிரமாணம் :* ***சைவசமயநெறி,***

உள்ளிவெள் ளுள்ளி யுதும்பரஞ் செம்முருங்கை
வள்ளி பசளைமதுக் கோவை

(வெங்காயம், வெள்ளைப்பூண்டு, *அத்தி*, முருங்கை, வள்ளி (பூசணி), பசளை *(கீரை)*, கோவை*)*

வெண்கத்தரிக்காய் தேற்றாங்காய் வில்வக்காய்
உண்பதல கொம்மடிக் காயும்

*(வெண்கத்திரிக்காய், தேற்றாமரத்தின் காய், வில்வங்காய் கொம்மடிக்காயை உண்ணார்)*

எண்ணெய்ப் பிண்ணாக்குப் பெரும்பீர்க்கு எனும் இவையும்
உண்ணேல் உருண்ட சுரையும்

*(எண்ணெய் பிழியப்பட்ட பிண்ணாக்கு, பெரும் பீர்க்கை, சுரைக்காய் ஆகியவற்றை உண்ணார்)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல்வினா: அசரபதார்த்தத்தினும் தோடம் உளதோ?

மேல்விடை: **ஊன் உறழ்தரும்.** எ-து. கொம்மட்டியாதி கீழான பதார்த்தம் ஆதலின் புலாலினை ஒக்கும் எனக் கொள்க. **நீ முடிவு கேள் நாய்த் தன்மையோரை நேரலை** - முடிவாகிய பொருளிது என்று சொல்வோம் நீ கேள். ஒரு வேட்டைக்காரன் நாயைப் பிடித்துவந்து பொற்சங்கிலியினால் கட்டிவைத்துக் கொண்டு பால் சோற்றை இட்டு வளர்த்தாலும் அச்சங்கிலி நெகிழ்ந்த மாத்திரத்தின் மலத்தினை, பழைய தோலினை, முரட்டு எலும்புகளைக் கௌவிக்கொண்டு அருகாக வருகிற மனிதரைக்கண்டு உறுமுதல் போல, ஒருவன் பாவம் இது புண்ணியம் இது என்று சொல்லும் அளவும் கேட்டிருந்து அவ்விடம்விட்டு நீங்கின மாத்திரத்தில் பின்னும் பாவத்தைச் செய்துகொண்டு நல்வழிகாட்டுவாரைக் காணும்தோறும் வெறுப்புடையராய் இருந்து உள்ள லோகாயதனாதி மூடர்களைப் போல் ஆகாது கொலை பாவம் என்று கூறிய மாத்திரத்தில் கொலை செய்குதற்கு அஞ்சி

இங்ஙனம் நாய்த்தன்மையோரென்றதற்கும் பிரமாணம் : **நாலடி,**

அவ்வியம் இல்லா அறத்தாறு உரைக்குங்கால்
செவ்வியர் அல்லார் செவி கொடுத்தும் கேட்கிலார்
கௌவித்தோல் தின்னும் குணுங்கர் நாய் பாற்சோற்றின்
செவ்வி கொளல் தேற்றாது ஆங்கு

*(அழுக்காறு முதலான மனமாசுகள் இல்லாதவர் அறநெறியை எடுத்துக்கூறும்போது புல்லறிவாளர் அதைச் செவி கொடுத்தும் கேளார்)*

என்றும், **நீதிசாரம்,**

கன்மமே பூரித்த காயத்தோர் தஞ்செவியில்
தன்மநூல் புக்காலும் தங்காதே சன்மஎலும்பு
உண்டுசமிக்கும் நாய் ஊண்ஆவின்நெய் அதனை
உண்டு சமிக்குமோ ஓது

*(பாவகருமம் உடைய உடலையுடையோர் காதில் தருமநூல் பற்றிய செய்தி சென்றாலும் தங்காது. தோலையும் எலும்பையும் உண்டு திருப்தி அடையும் நாய் ஆவின்நெய் கலந்த உணவை உண்டு திருப்தியடையுமோ)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

**இவ்வரும்புரம் பொய் வாணாள் வீணாளா நீக்கேல் பார்மிசை நீ புரியலை மெய்த்தவர் குழு உற்று அவர் சொற்படி அறம் நாளும் செய் மனோசுத்தி பரஞானம் சேரும் அத்தால் முத்தித் திருநாடு அடைவை** - சென்மாந்தரங்களில் செய்துள்ள தபோபலத்தால் அரிதாய் இங்ஙனம் கிடைத்துள்ள இந்தச் சரீரம் நீர்க்குமிழிக்கு ஒப்பாய் அழிவது ஆதலின் இது உள்ளபொழுதே செய்யவேண்டிய அறங்களைச் செய்து முடியாது இச்சரீரத்துக்கு அருந்தல் பொருந்தலைக் கூட்டுதல் தொழிலாக இதற்கு அமைத்த நாட்களை வீணில் கழித்து யமதண்டனைக்கு உட்படா வகை அறம் செய்வாய். செய்யுமிடத்து ஒன்றை நீ புண்ணியம் என்று எண்ணிச் செய்யப் பாவமாயினும் ஆகும். பாவம் என்று எண்ணி நீங்கப் புண்ணியமாய் இருப்பினும் இருக்கும். ஆதலின் உனது சுதந்தரத்தால் செய்தல் ஒழிந்து பூமியின்கண்ணே வேதாகமவிதி தவறாது கொலையாதிகளை நீங்கிய சிவஞானியாரது கூட்டத்தினை அணுகிப் பத்திமையான் வழிபட்டு அவர்களது திருவாக்கின்படியே தீவினைகளை நீக்கி நல்வினைகளைச் செய்யக் கடவாய். இங்ஙனம் நாள்தோறும் வழுவாது செய்குவையாயின் உன்னுடைய மனது நிருமலமாம்(மாசின்மை) அந்த ஞானத்தால் மோட்சமாகிய பெண்ணிருந்து வாழும் பூரண தேசம் அடைகுவை.(எ-று)

மானுட சரீரம் அடைதல் அரிது என்பதற்குப் பிரமாணம் : திருமந்திரம்,

பெறுதற்கு அரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற்கு அரிய பிரானடி சேராப்
பெறுதற்கு அரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற்கு அரியதோர் பேறு இழந்தாரே

*(பெறுதற்கு அருமையான மனிதப் பிறப்பைப் பெற்றும் பெற இயலாத இறைவன் திருவடியை வழிபடமாட்டாத மாந்தர் யாவரும் பெறற்கரிய நற்பேறாகிய வீட்டின்பத்தினை இழந்து விட்டனர்)*

என்றும், **சிவஞானசித்தி,**

அண்டசஞ் சுவேதேசங்கள் உற்பிசஞ் சராயு சத்தோடு
எண்தரு நால்எண்பத்து நான்கு நூறுஆயிரத்தான்
உண்டுபல்யோனி எல்லாம் ஒழித்து மானுடத்து உதித்தல்
கண்டிடில் கடலைக் கையால் நீந்தினன் காரியம் காண்

*(நால்வகைப் பிறப்புடைய எண்பத்துநான்கு இலட்சம் யோனிகளில் பிறந்து துன்புற்று மனிதப் பிறவி அடைவது கடலைக் கையால் நீந்திக் கடப்பது போன்றது.)*

என்றும், **அறிவானந்தசித்தி,**

தேரிற் சதுரயுகம் இரண்டாயிரம் நாள்திங்கள் ஆண்டில்
ஓரினம் நூற்றில் அயன்மாண்டு உகாந்தமும் உற்றுத் தென்பால்
சேரு நுகத்துளையின் வடபாற்கழி செல்எளிது
சாரும் பிறப்பு ஒழித்துஇம் மானுடத்தில் சனிக்கரிதே

(ஆராயின் நான்கு யுகங்கள், இரண்டாயிரம் எண்ணிக்கையிலான நாட்கள், மாதங்கள், ஆண்டுகளில் ஒரு பிரமன் மாண்டு வேறு பிரமன் வருவான். ஒரு யுக முடிவில் வடபால் இட்ட நுகமானது தென்பால் வந்து சேரும். ஆனால் மானிடப் பிறப்புப் போனால் அடுத்த பிறப்பில் மனிதனாகப் பிறத்தல் அரிது.)
என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

*யாக்கையாவது அநித்தியமாதலில் விரைந்து அறம் செய்ய* வேண்டும் என்பதற்குப் பிரமாணம்: *திருவள்ளுவர்,*

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேல்சென்று செய்யப் படும்

*(உரையாட முடியாது நா அடங்கிப் போய் விக்கல் மேல் எழுந்து இறக்கும் முன்னரே நன்மை விளைக்கும் அறச் செயல்களை வாழ்நாளில் வலியச் சென்று செய்தல் வேண்டும்.)*

என்றும், **திருமந்திரம்,**

இக்காய நீக்கி இனிஒரு காயத்தில்
புக்குப் பிறவாமல் போம்வழி நாடுமின்
எக்காலத்து இவ்வுடல் வந்து எமக்கு ஆனதுஎன்று
அக்காலம் உன்ன அருள் பெறலாமே

*(இவ்வுடலை நீத்து இனி ஓர் உடலில் புகுந்து பிறவாதபடி உய்யும் நெறியை விரும்புங்கள். எப்போது இவ்வுடல் நமக்கு வந்தது என்று அக்காலத்தை எண்ணி ஆராய்ந்தால் இறைவனது அருளைப் பெறலாம்.)*

என்றும், *திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்,*

நடலை வாழ்வு கொண்டுஎன் செய்திர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற் பிரமாணமே
கடலின் நஞ்சுஅமுது உண்டவர் கைவிட்டால்
உடலினார் கிடந்து ஊர்முனி பண்டமே

*(இவ்வுலகில் கொடிய துன்பம் நீங்க என்ன செய்தீர்கள்? நஞ்சை உண்ட சிவன் அருளால் வாழ்கின்றீர். அவர் கைவிடின் பெருந்தீங்கன்றோ? அவரை நினைத்துப் போற்றி வாழுங்கள்.)*

என்றும், ***சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்,***

வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழாது அறம் செய்ம்மின் தடங்கண்ணான் மலரோனும்
கீழ்மேல் உற நின்றான் திருக்கேதாரம் எனீரே

*(பசிநோயைத் தரும் உடம்பு நிலையானது என்பது பொய். மண்ணொடு மண்ணாய் மறைந்த தொழிதலே மெய். ஆதலின் ஒழிய வேண்டியது பிறவியாகிய கடலே. எனவே வேறொன்றையும் சிந்திக்காது அறம் செய்யுங்கள்.)*

என்றும், ***சிவஞானசித்தி,***

கருவினுள் அழிவதாயும் கழிந்திடாது அழிவதாயும்
பரிணமித்து அழிவதாயும் பாலனாய் அழிவதாயும்
தருணனாய் அழிவதாயும் தான் நரைத்து அழிவதாயும்
உருவமே அழிவே ஆனால் உள்ளபோதே பார் உய்ய

*(கருவிலும் பிறப்பிலும் வளர்ச்சியிலும் குழந்தைப் பருவத்திலும் காளைப் பருவத்திலும் முதுமைப் பருவத்திலும் என அழிவு எப்போதும் நேரும். எனவே உடல் உள்ளபோதே உய்யும் நெறியில் செல்ல வேண்டும்.)*

என்றும், ***சிவதருமோத்தரம்,***

அழியும் ஆக்கைகொடே அழியாப் பதம்
கெழுமுவார் பெற்றதே நல்ல கேள்வியும்

அழியும் ஆக்கைதனை அழியாது என
விழுவரே நரகக்குழி வெய்யோரே

*(நிலைபேறில்லாத யாக்கையினைக் கொண்டு நிலைபெற்றுள்ள மோட்சத்தைப் பொருந்துவோர் பெற்ற கேள்வியே நல்ல கேள்வி. அழிகின்ற யாக்கையை அழியாது என்று நெடுநாள் இருக்குமென்று விரும்பிய பொல்லாதவர்களே நரகக் குழியில் விழுவார்கள்.)*

என்றும், **பட்டணத்துப்பிள்ளை,**

இன்றுஇருந்து நாளைஇறக்கும் தொழில் உடைய
புன்தலை மாக்கள் புகழ்வரோ - வென்றிமழு
வாள்உடையான் தெய்வ மருதுடையான் நாயேனை
ஆளுடையான் செம்பொன் அடி

*(சிவபெருமானின் திருவடிகளை இன்று இருந்து நாளை இறக்கும் அற்பத்தொழிலையுடைய புன்மையோர் புகழ்ந்து உரைக்கமாட்டார்கள்.)*

என்றும், **போதரத்தினாகரம்,**

காய மானது நீர்இடைக் குமிழிபோல் கழியும் என்று அறிந்தேயும்
மாயும் ஊனினை மெய்என முழுமல வயிறுஅது வளர்த்தற்கே
ஆயதீவினை பற்பல மருவி அங்குஅவைசெய்து கழிந்தே விட்டு
ஏயுமாறுஎனை ஆண்டவன் என்பதற்கு என்செய்து முடிந்தேனே

*(இந்த உடலானது நீர்க்குமிழி போல் அழியக்கூடியது என்று அறிந்தும் பல தீவினைகளைச் செய்து இந்த உலகில் வீணாக வாழ்நாளைக் கழிக்க ஆண்டவன் என்னைப் படைத்துளான். இறைவனை அடையும் வழியைத் தேருவாய்)*

என்றும், **நாலடி,**

புன்நுனி மேல்நீர்போல் நிலையாமை என்றுஎண்ணி
இன்இனியே செய்க அறவினை - இன்இனியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேளல்அறச்
சென்றான் எனப்படுத லால்

*(இவ்வுடலானது புல்லின் நுனியில் உள்ள நீர்த்துளி போல நிலையாமை உடையது என்று எண்ணி இப்போதே அறம் செய்வாயாக.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் கண்டு கொள்க.

அறமும் பெரியோர் சொன்ன நெறியே செய்யவேண்டும் என்பதற்குப் பிரமாணம் : சிவானந்த மாலை,

ஆர்வமொடு செற்றத்தை யாரிடத்தும் கொள்ளாதே
சாரம்உள்ள எவ்விடத்தும் தான்கொண்டு - தீரஉணர்
நல்லோர்தம் சொல்லை நழுவாமல் நன்நெஞ்சே
நில்லாய் இதுவே நெறி

*(நெஞ்சே! ஆர்வத்தையும் செற்றத்தையும் யாரிடத்தும் கொள்ளாதே. பெரியோர்கள் கூறும் மொழிகளை உணர்ந்து நன்னெறியில் செல்வாயாக!)*

என்றும், **ஔவையார்,**

மூத்தோர் சொன்ன வார்த்தை யமிர்தம்

*(பெரியோர்கள் சொல்லும் அறிவுரைகள் தேவாமிர்தம் போன்று இன்பம் பயப்பன)*

என்றும், **நாலடியார்,**

அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ் சொல்போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மை எஞ்ஞான்றும்
பெறுமின் பெரியோர் வாய்ச்சொல்.

*(கடமை நெறி அறிந்து ஒழுகுங்கள். வஞ்சனையாக நடந்து கொள்வதைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள். எப்போதும் சான்றோர் வாய்ச்சொற்களை ஏற்று ஒழுகுங்கள்.)*

பெரியோரைச் சார்தலின் முத்தி கைகூடுமென்பதற்குப் பிரமாணம் : அருட்பிரகாசம்,

கொலைஆதி ஓர்ஐந்தும் காமாதிஆறும் குலைந்துநிலை
நிலையாது உருவுஎன்கை தோன்றி உயிர் உள் நிறைந்த மலைச்
சிலையாதியும் எளிது ஒன்றுவன் எங்கும் திகழ்ந்து இரண்டற்று
அலையாது இருக்கும் பெரியோர்தம் கூட்டம் அடைந்தவர்க்கே

*(உயிருள் நிறைந்துள்ள, மலையை வில்லாக்கிய சிவன் எளிதில் தோன்றுவான். மனஅலைவின்றிப் போற்றும் அடியார் கூட்டம் சேர்ந்தால்)*

என்றும், **போதரத்னாகரம்,**

நித்தனார் அருளியநெறி தெரிவது நிமலன்தன் கழல் என்னும்
சுத்தஆரமுது உறுசுவை தருவதும் சொருபன் நற்கழற்கு அன்பாம்
பித்ததுஆகிய பெருநலம் விளைவதும் பேரெழில் அடியாரால்
அத்தினால் அடியார்அவை கூட்டிய அதிசயம் அளவன்றே

*(அடியார் கூட்டம் சேர்வதால் சிவன் அருளிய நெறியை அறிந்து கொள்ளலாம். தூயவனின் தூய திருவடி அமுதின் சுவையைப் பெறலாம். யாவும் கடந்தவனின் அன்பாகிய பெரு விருப்பமாகிய நன்மையை அடையலாம்.)*

என்றும், ***திருவாசகம்,***

உடையாள் உன்றன் நடு இருக்கும்
 உடையாள் நடுவுள் நீஇருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
 இருப்ப தானால் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்
 புரியாய் பொன்னம்பலத்து எம்
முடியா முதலே என்கருத்து
 முடியும் வண்ணம் முன்நின்றே

*(உலகத் தோற்றத்தில் சத்தியின் நடுவுள் நீ இருக்கின்றாய். சிவசக்தி உன் நடுவுள் இருக்கின்றாள். நீங்கள் இருவரும் என் நெஞ்சுள் இருப்பது உண்மையானால் என்னை உன் அடியார் நடுவுள் வை. என் கருத்து நிறைவேறும்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இ-கு. அசரபதார்த்தத்திலும் (நிற்பன) நிசேதபதார்த்தங்களை (நீக்கத்தக்கது) விடவேண்டும் என்றும், மேலை யாதொரு காரியமும் நாதாக்களது திருவாக்கின்படி நடக்க வேண்டும் என்றும் அப்படி நடக்கில் பாரம்பரியமாய் முத்தி கைகூடும் என்றும் கூறியது.

**கொலை மறுத்தல் மூலமும் உரையும் முற்றுப் பெற்றன.**

## கொலைமறுத்தல்

செய்யுள் முதற் குறிப்பு

அகர நிரல்



உதாரணச் செய்யுள்

அகரநிரல்

